கணபதி துணை.

சுத்தாத்வைத வேதாந்தாசாரியராகிய

# தத்வராயசுவாமிகள்

அருளிச்செய்த

# பாடுதுறை.

இஃது

காஞ்சீபுரம்.

அருணாசலதேசிகர் முன்னிலையிற்

பரிசோதித்துக்

கொன்னைமாநகரம்.

அருணாசலமுதலியாரவர்களால்

அச்சிற்பதிப்பித்த பிரதிக்கிணங்கச்

சீர்காழி.

**நமச்சிவாயபிரமம்**

அவர்களாற்பரிசோதித்து

வர்த்தமானதரங்கிணி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னபட்டணம்.

ஸ்ரீமுக (வரு) சித்திரை மீ.

இதன்விலை கஅ.

# சிறப்புப்பாயிரம்.

நேரிசையாசிரியப்பா.

நான்முகன்முதலா நலந்திகழ்மூவரும், வானவர்குழுவு ம
றைகளுமுறையிடப், பூரணன் கருணையிற் பொலிதிருவுருவாய்,
மாரணம்பிறப்பறு வகையினையருள்செய, வாரருட்கொம்பொடு
மழகுறுகைலையி, லேர்பெறவிருந்தரு ளிறைகழல்வணங்கி, யப்
பெருந்தேசிக னடியிணைபுனைதரு, செப்பருநந்திதன் றிருவடி
வணங்கி, நந்திநற்சேவடி நலம்பெறச்சூடிய, வெந்தைநற்சனற்
குமா ரன்றனையிறைஞ்சி, யாங்கவன்சேவடி யழகுறப்புனைந்த,
வோங்குநல்வியாத னொண்கழலிறைஞ்சி, யருளுடைவியாத னடி
யரிற்சிறந்த, தெருளுடைச்சூதன் றிருவடியிறைஞ்சிச், சிற்ப
ரன்சூதன் றிருவடிபுனைந்த, நற்பெருங்கடவு ளுதனையிறைஞ்சி,
யவ்வழிவந்தங் கருளினிற்சிறந்த, தெய்வநற்றருவைச் சித்தனை
யிறைஞ்சி, யத்தவனடிபுனை யழகுறச்சோதிச், சித்தவேடத்தவ
ன் றென்றிசைவிளங்க, வந்துநற்புலியூர் மகிழ்ந்தினிதிருந்த, வ
ந்தமிலருண்முனி யருட்கழலிறைஞ்சி, யாங்கவனருளா லழகுறு
கீழையி, லோங்கியமுனிவர னொண்கழலிறைஞ்சி, யழகுறுகீழை
யி லாரியனடிபுனை, யொழிவறுபரமுனி யொண்கழலிறைஞ்சி,
யுரைத்தநற்றிருமுனி யொண்கழல்சூடிய, திருப்பனந்தாளிறை
சேவடியிறைஞ்சி, மாமுனியருளான் மருவாநம்புஞ்சைச், சே
மநல்வைப்பின் றிருவடியிறைஞ்சிச், சீர்தருமிறையடி சென்னி
யிற்புனைந்த, வேர்தருவடமுனி யிணையடியிறைஞ்சி, யகில்சீர்
முனிவ னடியிணைமுடிபுனை, யுலகுயவந்தோ னொண்கழலிறைஞ்
சிக், குருபரனுலகுய வந்தவன்கழல்புனை, திருநடராசன் சேவ
டியிறைஞ்சித், தத்துவன்றிருநடன் சரணவம்புயம்புனை, சுத்த
நற்சுரூபன் றுணையடியிறைஞ்சி, யையனற்சுரூப னடியிணைபுனை
ந்த, செய்யநற்சிவப்பிர காசனென்செல்வன், றன்னையோர்மொ
ழியினிற் சதுர்பெறவளித்திங், கன்னையிலன்புசெய் யாரருட்பெ
ருங்கட, லருளாற்குன்ற மருட்பெருங்கற்பக, மருளார்மேக ம
ருட்பெருமுழுநிதி, யென்னையும்பொருளா வாண்டவனிணையடி,
தன்னைநூறுயிரங் கோடிகால்வணங்கிப், பெருந்திரட்டாஞ்சிவ
ப் பிரகாசநூலை, யருந்திரட்டாக வறைவனென்றருள்வோன்,
மத்துவராயர்செய் மாதவமதனாற், றத்துவராயனுத் தரணியி
லுதித்து, மாவாக்கியப்பொருண் மாமழைபொழிந்த, பாவாக்
கியனெனும் பண்டிதர்சிகாமணி, முத்தாந்தர்போற்று முதிர்சுத்

# சிறப்புப்பாயிரம்.

தசைவச, சித்தாந்தர்க்குத் திருவாசகம்போ, லொருபொருளே
யிவ்வுயிரெலாமுய்ய, விருபொருளாகி யெய்தியதெனவுஞ், சொ
பானந்த முனிவர்க்கமுதவுஞ், சொருபானந்தச் சுந்தரன்மீது
தவப்பிரகாசஞ் சார்ந்தவர்க்கருளுஞ், சிவப்பிரகாசச் சிற்பரன
மீது, நாடுதுறையெலா நணமறைமுடிக்குப், பாடுதுறையென
பண்ணியநூலு, ளைச்சமயருமெய் நூலெனுநூலென், றச்சுருதி
யிற்கொள வான்றததான்று, மறுநிகணின்று மாண்புங்காலெ
ணு, வருநிலையங்கை யரதனத்தாக்கிச், சுவணமாத்திரத்தி
சச்சிதானந்தச், சுவணமாக்குலவத் தாய்தாதலானு, மிறவாதிய
ண்டு மிசைத்திடவெண்ணி, யறமென்றன்கு மம்பிகைவளர்த்
த, விச்சகத்தொண்புரி யேழிலுஞ்சிறந்த, கச்சியிலுபய கயில
ளாஞ்சுத்த, வைதிகசைவ வளர்திருக்கூட்ட, வுய்திகொள்குரவ
ரி லொருவனுமேலோன், குமரக்கோட்டன் கூருணிலைறந்து, நிட்
ரக்கோட்டந் தீர்ந்தமெய்க்குரவனுங், கச்சியப்பன் கழலையுங்
கலையையு, முச்சியிற்கொண்டவ னுயர்வழிவந்தோ, னிலக்கண
விலக்கிய மிணையில்வேதாந்த, மலக்கணில்சிவாகம வருங்கலை
கண்டோன், சமயம்விசேஷந் தருதிருவாண, மமைமருனா னினைகழ
பி னடுத்தவர்பவத்தி, னீனப்பிரகாச மெல்லாமொழித்து, ஞா
னப்பிரகாச நண்ணியவருள்வோன், சண்முகக்குரவன் சான்
மாதவத்திற், றண்மையேயொழித்த தநயனுமேனு, னன்னலங்கை
லையா மண்டாமடமும், விண்ணளாம்வருணமும் வியோமகோபு
திரமுஞ், சாந்தாணிகமு நந்திசந்தானமுந், தேர்ந்தவர்புகழ்சிதம்
பரகேத்திரமு, மகோரபட்டாரக ருந்திலைகூஷ்சாமமு, மகோர
சூத்திரமேயாதியாதி ரண்டுந், திகழுருமுசல தேசிகன்றன்பாற்,
புகழ்நூலளித்துப் புராதனமாதலா, லெழுத்துச்சொற்பொரு
ளேறியுங்குறைவுறும், விழுத்தபக்கலைகமை கம் மாறுவேண்டா
த, வெழிவியிற்பலவா வெழுதாக்கிளவியிற், பழுதறவச்சிற் ப
திப்பித்தளித்தன, னெழிற்கோட்டந்தான் திருமூன்றன்றும்,
புழற் கோட்டமேபொற்பினதெனவுஞ், சம்பத்தூரோழ் தசநவ
நாட்டி, னம்பத்தூரே யழகியதெனவு, மேகமிலிரண்டா யிரமெ
னுந்தத், தாருநீர்நிலவள னூர்ந்திடுபிறவளன், றைமுயுமிவ்வூ
ரைத் தானும்வேட்டனன்போல், விழைசொன்னும்பிகை வில்
வேசனென்னக், கொன்றையந்தொடையான் கொடியிடையொ

டும்வாழ், கொன்றையம்பதியே கோப்பதியெனவும், பதினெண் மொழியுளும் பைந்தமிழொன்றே, யெதிரிலதென்ன விருநிலம் புகழவுஞ், சமயமோராறிற் சைவமொன்றே, யமைவிலாமேன் மைய தாகியதெனவும், பல்வஃக்கோத்திரப் பண்ணவர்தம்முள், வில்வமாமுனியே விசேடவானெனவுந், தருகற்பகநிகர் தகையினர்தம்முண், முருகப்பமன்னனே மொய்தவனெனவு, நாற்குலந்தனிற்சுர நதிக்குலமதுவே, மேற்குலமெனவு மேதினிவந்தோன், பனகந்தாங்கும் படிமுழுதாண்டுஞ், சனகனதறிவிற் சலியாவறிவினன், பவபுண்ணியமுயல் பசுக்கள்போலாது, சிவபுண்ணியமே செய்தொழிலானோன், செந்தமிழ்க்கெல்லையாய்ச் சேய்க்கிடனாய்க்கோ, விந் தனில்வளர்ந்த வேங்கடவனையான், வாலினீர்நதிகள்போலாதுவான்சுரபியின், பாலினீர்பெருகிய பாலிமாநதியா, னண்டமெலாமுய வமர்ந்தெண்ணான்கறந், தொண்டைவாயுமைசெயுந் தொண்டைநன்னாட்டான், குடக்கிற்றுகிர் வரை குணக்கிற்புணரி, வடக்கின்வேங்கடம் வரும்பெண்ணைதெற்கு, வற்புதமிக்க வரணநான்காகிக், கற்பமுமழியாக் கச்சிமாநகரான், வெய்யவற்காணா விழைந்துமுகமலர்ந்து, தையலரடிக்குந் தாழ்தருமுவமை, முண்ணிகழ்நாள முளரிபோலாது, தண்ணியற்காணாத் தழைந்துமுகமலர்ந்து, மேலவயவமாம் விழிக்கிணையாயக், கோல்வளையார்விழை குவளையந்தொடையா, னற்படைத்தலைவனாய் நகுலனிற்செறுநர், தார்த்தெறநடத்துஞ் சயபரியுடையான், றன்குலமென்றுந் தழைந்திடப்புரப்பான், மின்குலஞ்சொரியு மேகவாகனனே, தள்ளருஞ்சிறப்பிற் றரணிவந்தமைக்கு, விள்ளருஞ்சான்றென வெண்களிறுடையான், படையுங்கொடையும் பகர்தருவிழாவு, முடையவனிவனென வொலிக்குமும்முரசான், கையுறமேனையர் கதலிபோலாது, மெய்யுறவெடுத்த மேழியம்பதாகையா, னுழிகுழுலகமே மூந்தமானையா, மாழியினடத்து மரசர்கட்கமைச்சாய்ப், பண்ணியகளிற்றைப் பாகரினூல்வழி, நண்ணியநாளு நடத்திடுமானையா, னொருக்கி வெம்போர்செய நேர்ந்திடுநேரலர், தருக்கினையொழிக்குஞ் சவளதோரணத்தா, னருணாசலப்பெய ரார்ந்து, கருணாசலதியாய்க் கவினுமன்னவனே.

இஃது காஞ்சிபுரம்வித்வான் சபாபதிமுதலியாரவர்கள்பாடியது.

இவை

கயிலாசபரம்பரையாகிய திருவாவடுதுறை ஆதீனவித்வான்

தாண்டவராயசுவாமிகள் பாடியவை.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஒப்பரியதத்வமசிவாக்கியத்தின் பொருளையுள்ளங்கைநெல்லி யெனவொண்புவிக்குக்காட்டு, முப்புவனமும்புகழும்பாடுதுறை நூலை மூதறிவிஞோர்மருவுகாஞ்சிநகர்வளருந், திப்பியகுணவரு ணாசலக்குரவனாலே சீர்மைபெறவேசெய்துதெண்டிரையுடுத்த விப்புவனமகிழவச்சிறப்பித்தா னிருங்கொன்றைவாழு மரு ணாசலவிந்திரனே.

கட்டளைக்கலித்துறை.

சத்துவராழிசுலவுமிக்காசினிக் கண்ணிலவு
மத்துவராயெங்கண்மாணிக்கவாசகவள்ளலிகர்
தத்துவராயர்சொல்சாத்திரமெங்குந்தழையச்செய்தா
னத்துவராகுலம்வாட்டருணாசலநாயகனே.

இஃது - சாரம் - குமரப்பமுதலியார் பாடியது.

விருத்தம்.

நாடுதுறையெவைக்குமுதாகரணவிலக்கியமென்னநாவலோர்கள், வீடுதுறையிஃதென்னச்சாதனர்சாற்றியர்கணிருவிஷையான ந்தத், தாடுதுறையாமென்னப்பாடுதுறையினைப்பதிப்பித்துங்கை தந்தான், கோடுதுறையூர்வாவிக் கொன்றையருணாசலப்பேர்க் குரிசின்மாதோ.

---

குருபரம்பரை.

முதலாசாரியர்

ஸ்ரீகைலாசத்திலெழுந்தருளிய உமாமகேஸ்வரர், அவர்மா ணாக்கர் - நந்திகேஸ்வரர், அவர்மாணாக்கர் - சனற்குமாரர், அவ ர்மாணாக்கர்- வியாசர், அவர்மாணாக்கர் - சூதரிஷி, அவர்மாணாக் கர் கடவுள்நாதர், அவர் வழிவந்தமாணாக்கர் - குருவூர்ச்சித்தர், அவர்மாணாக்கர் - அருள்முனிவர், அவர்மாணாக்கர் - கீழூர்முனி வர், அவர்மாணாக்கர்- பரமுனிவர், அவர்மாணாக்கர் - திருப்பணந் தாளார், அவர்மாணாக்கர் - மதுரைப்புஞ்சைமுனிவர், அவர்மா ணாக்கர் - திருநடராசர், அவர்மாணாக்கர் - சுருபானந்தர், அவர் மாணாக்கர் - சிவப்பிரகாசர், அவர்மாணாக்கர் தத்வராயர்.

சிவமயம்.

# தத்வராயசுவாமிகள்

## சரித்திரச்சுருக்கம்.

பூமிதேவிக்குத் திருமுகம்போலச் சிறந்திருக்கிற தமிழ்நாடு பலவற்றினு மேம்பட்ட நடுநாட்டில் வீரமாநகரத்தில் சற்றேறக்குறைய ௩00 ௵த்திற்குள்ளாக மாத்துவப்பிராமணருக்குள்ளே யிவ்வுலகஞ்செய்த மாதவமென்றுசொல்ல இரண்டு புண்ணியமூர்த்திகள் அவதரித்தார்கள். அவர்கள் அம்மான் * மருமகனென்கிற முறைமையையுடையவர்கள், அவ்விருவரும் வடமொழி தென்மொழி யிரண்டிலும் வல்லவராய் அறிவாசார முதலியவைகளிற் சிறந்தவர்களாய்ப் பிரமசாரியர்களாகியேயிருந்து தங்கள் கருமத்தில் வழுவாது நடந்துவருநாளில் வேதாந்தசாஸ்த்ரம் யாவையும்படித்து ஐயந்திரிபு அறியாமையில்லாமல் அவற்றின்பொருள்களை ஆராய்ந்தறிந் தெப்போதுந் தத்வவிசாரணையும் ஸ்வரூபவிசாரணையுஞ் செய்துவருதலாலும் அவைகளையே எவர்களுக்கும் போதித்தலாலும் பெரியவிருக்ஷந்தோன்றற்கிடனான சிறிய ஆலம்விதைபோல் ஞானாங்குரமானவராதலாலும் இவர்களுக்கு அப்பருவத்திலேதானே பூர்வநாமம்போய்த் தத்வராயரென்றும், ஸ்வரூபானந்தரென்றும், காரணநாம முண்டாயின.

(இவர்கள்.) பூர்வ தவக்குறைவால் வந்தவர்களாதலால் ஆத்மவிசாரணை செய்யவேண்டுமென்கிற விவேகமே மேலிட்டாலோசித்தார்கள். அவையென்னெனி

---

* ஸ்வரூபானந்த சுவாமிகளுடன் பிறந்தாள் பிள்ளை—தத்வராய சுவாமிகள்.

ல், இம்மையில், யாவரினுஞ் சிறந்த அரசர்கள் வாழ்
ஞ்சிலநாளி லழிந்துவிடும் அதனால் வருமின்பமு மு
ளிப்பூவின் றேணை யொக்குமென்றும் மறுமையில், இ
திராதி தேவர் பதங்களும் ஆயுண் மிகுந்திருந்து காம
தின்பமுற்றழியுமென்றும் இளமையாதியும் நிலைய
லவென்றும் நினைத்துப் பெண்ணாதி மூவாசையுந் துற
து சாந்திமுதலாகிய குணங்களைத் தமக்கங்கமாகக்கொ
ண்டு தலையில் நெருப்புப்பற்றிக்கொண்டவன் நீர் தேடு
தல்போலவும் மிகுந்த கோடைவெய்யிலி லகப்பட்ட
ன்நிழல் தேடுதல்போலவும் அதிதீவிர பக்குவமுடைய
வர்களாய்ச் சனனமரணமொழிக்கவல்ல ஞானாசிரியனை
த்தேடி அடுக்கவேண்டிப் பலநாள் பலவிடங்களிலும்
தேடிப்பார்த்துங் கிடையாமையால் மிகவும் வருத்த
மடைந்து ஒருநாள்போம்வழியில் ஒரு சிறந்த சோலை
யில் பெரியகல்லால விருக்ஷத்தின்கீழிருந் தாலோசித்
தார்கள் அவையென்னெனில் நாம் இப்படித்தேடின
ல் எத்தனைகாலஞ்செல்லும் ஆதலால் ஒருவர் உத்தர
திசையிலும் ஒருவர் தக்ஷணதிசையிலும்போய்த் தே
டிப்பார்ப்போம் நமக்குள் எவருக்குமுன்னே ஆசிரி
யர்கிடைத்தனுக்கிரகம்பெற்றுக் கொள்ளுகிறோமோ அ
வரோ மற்றொருவருக்கும் ஆசிரியனென்று நிச்சயித்துக்
கொண்டு போனார்கள். அவர்களில் தென்றேசத்திற்செ
ன்ற ஸ்வரூபானந்தசுவாமிகள் பலதேசங்களிலும் பல
ஊர்களிலும் பலவனங்களிலும் பலமலைகளிலும் பல
நதிதீரங்களிலும் பல புராதனாலயங்களிலுந் தேடிக்கொ
ண்டு திருவரங்கமுந் திருவானைக்காவும் காவேரிநதியும்
தெற்காக வடக்கேபோய்த் திருப்பைஞ்ஞீலியென்கிற
சிவஸ்தலத்தையும் திருவெள்ளறை யென்கிற விஷ்ணு
ஸ்தலத்தையும் தன் பாங்கினுடைத்தாயிருக்கிற கோ

வத்தமென்னும் ஸ்தலத்துக்குச் சமீபத்தில் போம்பொழுது இவருக்கு ஒருகாரணமுமின்றிப் பேரானந்தமும் சரீரத்திலே புளகாங்கிதமும் உண்டாகிக்கைகள் அஞ்சலிமுகிழ்த்திடக் கண்களில் நீர்பெருகக்கண்டு நான்தேடிவந்த ஞானாசிரியரிருக்கிற ஸ்தானம் இதுவேயென்று அந்த நகரைப் பிரதக்ஷணமாய்வந்து உள்ளேபோய் இவ்விடத்திலே பெரியவர்கள் உண்டோவென்று விசாரித்தார். அவ்விடத்திலுள்ளவர்கள் இந்த ஊர்க்குப் புறத்திலே நாணற்புதலிருக்கின்றது, அதனுள்ளே யொருபெரியவ ரிருக்கின்றார். அவர்பெயர் * சிவப்ரகாசசுவாமிகளென்றும் அவர் ஒவ்வொரு தினத்திலே சாயங்காலத்தில் அந்தப்புதலைவிட்டு வெளியில் வருகின்றாரென்றுஞ்சொல்ல அவ்விடத்திலேபோய் இவர் காத்துக்கொண்டிருக்கிறபோது அந்தச் சிவப்ரகாசசுவாமிகள் ஒருநாள் வெளியிலேவந்தார். ஸ்வரூபானந்த சுவாமிகள் நமஸ்காரம்பண்ணி நெடுங்காலமா யலைக்கின்ற சனனமரணப் பிரவாகத்தினின்றும் அடியேன் கரையேற ஞானோபதேசம் பண்ணவேண்டுமென்று பாததாமரையைப் பிடித்துக்கொண்டு முறையிடும்பொழுது நாம் நினைத்திருந்த அதிதீவிரபக்குவ னிவனேயென்று ஆலோசித்து அப்பா உனக்காகத்தான் இங்கே இதுவரையில் யானிருந்தேனென்று மேலான மஹாவாக்யத்தைச் சிரவணத்தினால் அநுக்கிரகம்பண்ண அவ்வநுக்கிரகத்தைப் பெற்றுக்கொண்டு ஸ்வாநுபூதியாகவேண்டிச் சமாதிபண்ணிக்கொண்டிருக்குநாளில் வடக்கே தேடிக்கொண்டுபோன தத்வராயசுவாமிகள் அத்தேச

---

* சிவப்ரகாசசுவாமிகள் பூர்வஸ்தலம் திருவாரூர் - இவர் சுத்தவைதீக சைவர்.

முழுமையுந்தேடி ஆசிரியர்கிடையாமல் மறுபடியுந்தெ
ன்றேசத்திற்சேவந்து ஸ்வரூபானந்த சுவாமிகளைக்கண்
டார். ஸ்வரூபானந்தசுவாமிகளுந் தனக்காசியர்கிடைத்
ததும் அநுக்கிரகம் பெற்றுக்கொண்டதும் பிறவுஞ்
சொல்ல மிகவும் அதிசயமடைந்து ஸ்வரூபானந்தசு
வாமிகளை வணங்கி மேலான ஞானுநுக்கிரகம்பெற்றுக்
கொண்டு நிருவிகற்ப சமாதியிலிருந்து நித்ய நிரதிசயா
னந்தத்தை யனுபவித்துக்கொண்டிருக்கின்ற காலத்தி
லே பெரியோர்களுக்குத் தாம்பெற்றபேறுஉலகம் பெ
றவேண்டுமென்கின்ற சங்கல்பம் சுபாவமானபடியால்
ஸ்வரூபானந்த சுவாமிகள் திருவுள்ளத்தில் இந்தத் தத்
வராயர் தென்மொழியிற் பாடுதலில் மிகவும் வல்லவ
ராயிருக்கையால் இவரைக்கொண்டு லோகோபகாரமா
ச் சில சாஸ்திரங்களைச் செய்விக்கவேண்டுமென்று நி
னைத்து உபாயமாய்க் குறிப்பித்துக்கொண்டுவர அவர்
சதாநிஷ்டையில் இருக்கின்றவரானபடியால் அவருக்
கு இந்தக்குறிப்பு மிகவுந் தோன்றாம லிருந்ததுகண்டு
இக்கருத்து நன்றாய்த் தெரிவிக்கவெண்ணி ஒருநாள்
அமாவாசையில் அப்யங்கஞ்செய்ய வேண்டியவர்போ
ல ஏவலாளரைத் தயிலங்கொண்டுவாருமென்றுசொல்
ல அருகேநின்ற தத்வராயசுவாமி அமாவாசையென்
கிறதை மனதிலே நினைத்து அம்மென்றார். அப்போ
து ஸ்வரூபானந்தசுவாமிகள் கோபித்துக் கொண்டவர்
போல விதிவிலக்கென்கிற சங்கல்பமுங்கடந்து காலா
தீதராய்நின்ற நமக்கும் விதிவிலக்குண்டோ நம்மெதிர்
நிற்கவேண்டாம் போமென்றுசொல்லத் தத்வராயசுவா
மிகள் அகண்டபரிபூரண சச்சிதானந்தமாய் விளங்கு
கின்ற சுவாமிகளுக்கும் நான் விதிவிலக்குக் கற்பித்த
குற்றத்தால் இனிநானிந்தச் சரீரத்தோடிருத்தல் தகா

து. கடலில் விழுந்திறத்தலன்றி இதற்குப்பரிகாரம் வேறில்லையென்று நினைத்து ஆசாரியர் சந்நிதானத்தை நோக்கிக்கொண்டே பின்னிட்டபடிநடந்து ஆராமை மேலிட்டுக் கண்களிற் சலம் தாரைதாரையாய்ப்பெருகப் பரமாசாரியராகிய சிவப்ரகாசசுவாமிகளையும் ஆசாரியராகிய ஸ்வரூபானந்தசுவாமிகளையுங் குறித்து ஸ்வரூப சாக்ஷாத்காரவிலாசத்தை நவநவமாய்த் தமது ஸ்வாநுபூதியின்க ணனுபவித்தபிரகாரம் பின்னுள்ள வாத்மகோடிகளும் அவ்வனுபூதியைப்பெற்றுய்யும்படி ஜீவகாருண்ணியத்தினுல் தமது ஸ்வரூபாநுபூதி ஆவேசத்தால் ஸ்தோத்திரமாய்ச்-சிவப்ரகாசவெண்பா - தத்வாமிர்தமென்னும், இரண்டுடன்-திருத்தாலாட்டு, பிள்ளைத்திருநாமம், வெண்பாவந்தாதி, கலித்துறையந்தாதி, சின்னப்பூவெண்பா, தசாங்கம், இரட்டைமணிமாலை, மும்மணிக்கோவை, நான்மணிமாலை, கலிப்பா, ஞானவிநோதன்கலம்பகம், உலா, சிலேடையுலா, நெஞ்சுவிடுதூது, கலிமடல், அஞ்ஞவதைப்பரணி, மோகவதைப்பரணி, அமிர்தசாரவெண்பாவென்னும் இருபத்திரெட்டையும் திருவாய்மலர்ந்தருளிக்கொண்டு போம்பொழுது அருகில்நின்ற மாணாக்கர்கள் அப்போதைக்கப்போதே அப்பிரபந்தங்களைத் தனித்தனி யெழுதிக்கொண்டுபோய் ஸ்வரூபானந்தசுவாமிகள் சந்நிதானத்திற் படிக்கச் சுவாமிகளும் அச்சாஸ்திரங்களில் விருப்பமில்லாதவர்போல் மயிருள்ளவள் வாரிமுடிக்கிறதுபோல வாயுள்ளவன் பாடியனுப்புகிறானென்று திருவாய்மலர்ந்துகொண்டிருந்தார். அப்படியிருக்க இங்கே தத்வராயசுவாமிகள் ஆசாரியர் தரிசனத்துக் கபாத்திரனாய் விட்டேனே இனி நானெந்தச்சன்னதத்தில் தரிசிப்பே

னென்னும் ஏக்கத்தினாலே தாயைக்காணாத இளங்
குழந்தையைப்போல அழுதுமுகம்வீங்கி பாடுதுறையி
திருவடிமாலையைப் பாடிக்கொண்டுவிழுந் திறக்ககப
லுக்குச் சமீபத்தில்போம்பொழுது அந்தச்செய்தியை
பு மாணாக்கர்கள் வந்துசொல்ல ஸ்வரூபானந்த சுவாமி
களறிந்து குருவுக்கு வீங்கியை வரச்சொல்லுமென்று
கட்டளையிட அதைக்கேள்விப்பட்ட தத்வராயசுவாமி
கள் தங் தேகவருத்தமுழுதும் நீங்கிடக்கச் சக்தியும்
பெற்றுக்கொண்டு சுவாமிகளால் அனுப்பப்பட்ட மா
ணாக்கர்களைப்பார்த்துக் கருணாநிதியாகிய சுவாமிகள்
மகா அபராதியாகிய வென்னையும்வரக் கட்டளையிட்ட
தோவென்று பேரானந்தமடைந்து மேற்படி பிரயா
ணத்தில் திருவருட்கழன்மாலை, போற்றிமாலை, புகழ்ச்சி
மாலை முதலானவைகளையும் பாடிக்கொண்டு சிரசின்
மேல் அஞ்சலியஸ்தராய்ச் சுவாமிகளுடையசந்நிதானத்
தைப் பார்த்துக்கொண்டேவந்து பிரதக்ஷணம்பண்ணி
அஷ்டாங்க பஞ்சாங்கமாக அநேக நமஸ்காரஞ்செய்
து முன்னிலும் அதிகமாய்க் கண்களில்நீர்பெருக மயி
ர்க்குச்செறிந்து பரவசப்பட்டு நெஞ்சமுருகி ஸ்தோத்
திரம் பண்ணிக்கொண்டு நிற்கும்போது சுவாமிகளும்
இருவென்று கட்டளையிட இருந்து சுவாமிகளின் பணி
விடைசெய்துகொண்டு மிகவும் சந்தோஷமடைந்திருக்
குநாளில் சுவாமிகள் தத்வராயர் பாடிய சாஸ்திரங்க
ளையெல்லாம் பார்வையிட்டுச் சொல்லமைதியும் பொ
ருளமைதியுநோக்கிச் சந்தோஷத்தைத் தனக்குள்ளே
யடக்கிக்கொண்டு இந்தச் சாஸ்திரங்கள் மிகக்கற்றவர்க்
கன்றி மற்றவர்க் குதவாதென்று நினைத்துத் தத்வராய
சுவாமிகளைப்பார்த்து அப்பா இந்தச் சாஸ்த்ரங்களெல்

லாம் உனக்கே பாடிக்கொண்டனையன்றி யுலகத்தாருக் குபயோகமாகப் பாடவில்லையே என்றருளிச்செய்ய அப்போது, மடைத்தொழிலாளர்கள் சுவாமீ அமுது கொள்ள வெழுந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய சுவாமிகளும் நித்யகர்மங்களை முடித்து அமு துக்கெழுந்தருளத் தனியேயிருந்த தத்வராயசுவாமிக ள் ஆசாரியர் திருவாக்கை ஆலோசித்து அப்படியே தா மும் நினைத்து சுவாமிகள் அமுதுகொண்டு வருமுன்னா ர் எல்லாருக்கும் பிரயோசனப்பட மோகவதைப்பர ணியில் ஒருபிரகரணமாகச் சசிவர்ணபோதமென்னும் ஒரு சாஸ்த்ரத்தைச்செய்து சுவாமிகள் திருவடியிலே வைத்து நமஸ்காரம்பண்ணச் சுவாமிகளும் தத்வராயர் விரைந்துபாடினதையும் அச்சாஸ்த்ரத்தின் பாகத்தை யும் பார்த்துச் சந்தோஷமடைந்தார். பின்னும் தத்வ ராயசுவாமிகள் சில வேதாந்த சாஸ்த்ரங்களுஞ் சில மத சித்தாந்த நூல்களுஞ் செய்துகொண்டு நிர்விகற்ப சமாதியி லிருக்குநாளில் யாத்திரைசெய்கின்றவராகிய சில ஆராத்தியர்களுஞ் சில வித்வான்களும் ஸ்வரூபா னந்த சுவாமிகளின் சந்நிதானத்தில் வீற்றிருக்கிற தத் வராயசுவாமிகளின் முன்னேவந்து போர்முகத்தாயிர ங்களிற்றி யானையைக்கொன்ற சுத்தவீரனைத் தலைவனு கக்கொண்டு பாடப்பட்ட பரணியென்னும் பிரபந்தத் தை வீரமென்பது கனவிலுங்கேட்டறியாத உம்முடை ய ஆசான்மேலெப்படி நீர் பாடினீரென்றுகேட்க அதற் கு தத்வராயசுவாமிகள் நம்முடைய சுவாமிகளும் சி ஷ்யருடைய அகங்காரமாகிய யானையை கொல்லுதலா ற் பாடினேனென்றுசொல்ல அதற்கு அவர்கள் நீர்சொ ல்லும் அகங்கார யானைகண்ணுக்குப் புலப்படாமை

யால் ஒவ்வாதுஆயினும் ஒரு சிஷ்யனுடைய அகங்
மாகிய யானையைக்கெடுத்தற்கு அநேககாட் செ
மே இவர் ஏககாலத்தில் ஆயிரஞ்சிஷ்யர்கள் அகங்
ரத்தைக்கெடுத்த தெப்படியென்றுவினவ அதற்
தத்வராயசுவாமிகள் அநுபவத்திற் காட்டவேண்டு
ன்று பிரதியுத்தரமொன்றுஞ்சொல்லாமல் சமாதி
யிருந்தார். ஸ்வரூபானந்தசுவாமிகளின் சந்நிதா
பட்டமையால்வந்த வித்வான்களனைவரும் இராப்ப
ஒன்றுந்தெரியாமல் மூன்றுதினமளவும் பரிபூரணநி
யிலிருந்தார்கள் நாலாநாள் தத்வராயசுவாமிகள் நி
கண்விழித்தபின்பு அவ்வித்வான்களும் எழுந்து சு
மிகளையும் தத்வராயசுவாமிகளையும் நமஸ்காரம்ப
ணி நாங்களறியாமையினால் ஆக்ஷேபித்தோம் தங்
சந்நிதானத்தினது விசேஷம் ஏககாலத்தில் பதினா
ஞ்சிஷ்யர்கள் நேரிட்டாலும் பரிபாகப்படுத்தத்தக்க
வல்லபமுள்ளதென்று அவர்கள் பலரும் இப்பிரபந்
களைக்குறித்து ஒவ்வொரு கவிகளைச்சாத்தி மாணாக்
களாய் வழிபட்டுப்போனார்கள். பின்பு தத்வராய
ஸ்வாமிகள் லோகோபகாரமாக வேதாந்த சாஸ்த்ரத்தி
குள்ளே சுவானுபூதிக்கிசைந்து சாரமாயுள்ள செய்யு
களையெல்லாந்திரட்டிப், பெருந்திரட்டு குறுந்திரட்டெ
ன்ன இரண்டு சாஸ்த்ரத்தை அருளிச்செய்தார். இப்ப
டியாகச் சுவாமிகளுடனிணைபிரியாமல் இருக்கும்பொ
ழுது ஸ்வரூபானந்தசுவாமிகள் யாதோ ஒரு திருவிளை
யாட்டை நினைத்துத் தத்வராயசுவாமிகளைவைத்துக் த
ம் பிரிந்து புறப்பட்டுப்போகையில் இவரும் பின்தொ
டரச் சுவாமிகளுந் தமக்கு நேரிட்டபடி வழியொன்றில
றிக் காடு நாடு மலைகள் முதலான விடங்களிற் சுற்றித்

ரிந்து சமுத்திரத்தின் சமீபத்திற்போயினார். தத்வராய சுவாமிகளும் உடனாகவேபோய் ஸ்வரூபானந்த சுவாமிகள் கடன்மேல்நடக்கக் கடற்சலம்விலகி வழிகொடுக்க அதைக்கண்டு தாமும் கடலில்நடக்க ஜலம் வழிவிடாமையால் கரையிலேநின்று பசுவைநீங்கிய விளங்கன்றுபோலக் கதறித் திக்குக்கள்தோறுந் தேடும்பொழுது ஸ்வரூபானந்த சுவாமிகளுந் தரிசனங்கொடுத்துப் பின்பு அகண்டபரிபூரண சச்சிதானந்தமாய் விளங்கினார், அதைக்கண்ட தத்வராயசுவாமிகள் அதிசயமும் ஆராமையும் அடைந்து சுவாமிகளுக்குச் செய்யவேண்டிய உத்தரகிரியைகளெல்லா முடித்துச் சுவாமிகளையே நினைத்துக்கொண்டிருந்து பிரிவாற்றாமையாலோ பேரன்பினாலோ சுவாமிகளையன்றித் தமக்கொரு செயலின்மையினாலோ தாமும் உடனே பரிபூரண நிலையடைந்தார். இவர்களுக்குத் திருவலஞ்சுழியும் வாசஸ்தானம் சிவப்ரகாசசுவாமிகள் சமாதி திருவாரூர் சமீபஸ்தானம். ஸ்வரூபானந்தசுவாமிகள் சமாதி திருவண்ணாமலைக்கும் விருத்தாசலத்துக்கு மத்தியஸ்தானம் தத்வராய சுவாமிகள் சமாதி சிதம்பரத்துக்கும் விருத்தாசலத்துக்கு மத்தியஸ்தானம் இந்தச்சரித்திரம் மேற்படி சுவாமிகளுடைய பரம்பரை மாணாக்கர்கள் அனுப்பின பிரதிகளின்படி பதிப்பிக்கப்பட்டது.

தத்வராயசுவாமிகள் சரித்திரச்சுருக்கம் முற்றும்.

காப்பு.

இஃது – சுருபானந்தசுவாமிகள்மேல்

அடியேனையாள வருண்மேனிசாத்திப்
படிமீதுவந்த பரனே – கொடியேனென்
றெண்ணாதிமைப்பளவி லிங்ஙனேவீடளித்த
கண்ணாகண்டைய போகக்கா.

# புத்தக விளம்பரம்.

| | ரூபா. | அணா |
|---|---|---|
| ஞானபாநு முதற்புத்தகம் | ௨ | ௬ |
| ,, இரண்டாவது புத்தகம் | ௨ | ௬ |
| தாயுமானசுவாமிகள்பாடல் | ௧ | ,, |
| சிவஞானபோதசிற்றுரை | ௧ | ,, |
| சிவஞானசித்தியார் சுபக்ஷ மூலமுமுரையும். | ௧ | ௬ |
| சிவப்பிரகாசமூலமுமுரையும் | ௧ | ௮ |
| திருவருட்பயன்மூலமுமுரையும் | ,, | ௫ |
| பிரமோத்திரகாண்டம் | ௨ | ௨ |
| நன்னூல்விருத்தியுரை | ௨ | ௮ |
| கல்லாடமூலமுமுரையும் | ௩ | ,, |
| அருட்பா | ௧ | ௮ |
| மனுநீதிதருமசாஸ்திரம் | ௩ | ௮ |
| பாலபோதவிலக்கணம் | ,, | ௧௦ |
| ஆசாரக்கோவை மூலமுமுரையும் | ,, | ௬ |
| பரமராசியமாலை | ,, | ௧௨ |

## இப்போது பதிப்பித்துக்கொண்டுவருகிற புத்தகங்கள்.

பெருந்திரட்டு
குறுந்திரட்டு
சிவகீதை
உத்திரகீதை
ரிபுகீதை

இப்புத்தகங்கள் வேண்டியவர்கள் சென்னபட்டணம் குஜ்ஜிலிக்கடைத்தெருவில் வர்த்தமானதரங்கிணி அச்சுக்கூடத்தில் சென்னை ஞானபாநு பத்திராதிபரிடத்தில் வாங்கிக்கொள்ளலாம்.

ஸ்ரீமுகவருஷ சித்திரைமீ.

சிவமயம்.

# பாடுதுறை.

—※—

முதலாவது

## ஸ்வரூபானந்த சுவாமிகள்

## திருவடிமாலை.

---

கலிவெண்பா.

செழுந்தரணி தன்னிற் றிருவுருக்கொண் டென்னை
யுழுந்துருளும் போழ்தி லுணர்த்த - வெழுந்தருளி
வந்தவடி நாயேன் மனத்தால் வணங்கமதி
தந்தவடி யாளச் சமைந்தவடி - யந்தரத்து
வில்லும் வியன்கனவும் வெண்டேரு நீர்க்குமிழும்
புல்லு மதிலெழுத்தும் போலவே - சொல்லளவாய்ப்
பொன்று முடற்குள்ள பொல்லாங் கெலாநினைந்து
நின்று நடுங்கிமிக நெஞ்சழிந்தே - னென்றுணையே
கோற்றேனே மாயைக் குரம்பைக்கூத் தாட்டமினி
யாற்றேனே யென்ன வளித்தவடி - யாற்றலிலாத்
தொண்டனையா னென்று தொழுது பழவடியார்
தெண்டனொடு விண்ணப்பஞ் செய்யுமடி - கண்டருளித்
தஞ்சமொன்று மில்லாத் தமியேனைத் தன்னருளா
லஞ்சலஞ்ச லென்ற வமலனடி - மஞ்சனஞ்செய்

நீத்தங்கொண் டென்னை யடியவர்த நேயத்தாற்
றீர்த்தமாட் டிக்கொண்ட செம்பொனடி - யாத்தமா
யச்ச மறநம் மடியானென் றுரமிர்த
மிச்சி றரவிசைந்த வீரனடி - விச்சையாற்
கட்டப் பிறவிக் கருவைக் கணமொன்றில்
வெட்டக் கழலிட்ட வீரனடி - கெட்டேனென்
றூலம் பனமி லடியேன் மனமுருகக்
கோலம் புனைந்த குரவனடி - சீலமிகும்
பாங்காய நல்ல பழவடியார் தற்சூழப்
பூங்கோயி லுள்ளே புகுந்தவடி - யோங்கு
மிருவர்தே டுற்றவடி யிப்படிகண் காண
வருவதே யென்று மனநெக் - கருவியாய்ப்
பாயாத கண்ணென்ன கண்ணென்று பத்தர்கணம்
வாயார நின்று வழுத்துமடி - காயமுட
னண்ணு முயிரும் பொருளுந யந்துதத்தம்
பண்ணுவித்துக் கொண்ட பரமனடி - தண்ணியவெ
சென்னிமிசை வைத்தவடி சித்தந் திரித்தவடி
முன்னையறி வெல்லா முடித்தவடி - யென்னுருவு
காட்டுமடி கண்ட பொருளெல்லா மென்கண்ணில்
வாட்டி யெனையே மலர்த்துமடி - கோட்டமற
நம்பத மல்லவிது நான்மறைமா வாக்கியத்திற்
றும்பதங்கா ணென்ற சுரூபனடி - யம்பரமாய்
நின்ற பரவுடலி னேராக வேயென்னை
யின்றி யிடவே யிருத்துமடி - யின்றெனலு
மீண்ட விட்த்தே விளம்பு மிதுவொழிய
மாண்டவிடத் தில்லையென வைத்தவடி - காண்டவிலா
வல்லை யறிந்தவறி வெங்கேகா ணென்றருளான்
மெல்ல விளம்பிவிழிப் பித்தவடி - தொல்லைமறைத்

தற்பதத்தின் மெய்ப்பொருளாந் தற்பரமா யிச்சகத்தி
னுற்பவத்தை யெல்லா மொழித்தவடி - கற்பிதமாம்
பூட்சி யிரண்டும்போய்ப் போதமாய்ப் போகுதலு
மீட்சியு மின்றி விளங்குமடி - காட்சியுங்
கண்ணாகக் காணுங்கண் டந்தவடி கண்ணென்று
மெண்ணாத வண்ண மிருத்துமடி - வண்ணந்தான்
மாமறைக ளோதரிய வாசாம கோசரத்தை
யூமை மொழியா லுணர்த்துமடி - யேமுற
வாங்கி முழுது மலர்த்தாளி லென்னைமகிழ்
தூங்க வளித்த சுரூபனடி - யீங்கமிர்த
மூறி யகநிறைந்து தித்தித் துடன்மயிர்க்கா
லூறுந்தேக் கிட்டுச் சுடருமடி - தேறித்
தெவிட்டாது நின்றவடி தீப்பிறப்பு மாள
வுவட்டாதென் னுள்ளே யுதித்துப் - பவத்தில்வரு
மூனநடங் கண்டவா றொப்பவே மீட்டென்னை
ஞானநடங் கண்டு நயந்தவடி - யூனில்வரு
மச்சந் தவிர்த்தவடி யங்கைக் கனியாகி
நிச்சங்க மாகி நிகழ்ந்தவடி - பிச்சனைப்போற்
கத்தாமல் வைத்தவடி கண்ணாகி நின்றவடி
வித்தார மெல்லாம் விளைத்தவடி - சித்தத்தி
லெண்ணேறு மாய்த்தவடி யென்னைவாழ் வித்தவடி
கண்ணேகண் ணாகக் களைத்தவடி - யெண்ணுற்ற
காலங் கடந்தவடி காமங் கடிந்தவடி
சீலங் குடிகொண்ட செம்பொனடி - ஞாலமெலா
முன்பிழைக்க வல்லவடி முற்றுந் துடைக்குமடி
யென்பிழைக்குச் சால விரங்குமடி - யின்பினொடு
மூவருந் தேடுமடி மூர்த்தியாய் வந்தவடி
யாவருங் காண விருந்தவடி - பாவியேன்

நீத்தங்கொண் டென்னை யடியவர்த நேயத்தாற்
றீர்த்தமாட் டிக்கொண்ட செம்பொனடி - யாத்தமா
யச்ச மறநம் மடியானென் றுரமிர்த
மிச்சி றரவிசைந்த வீரனடி - விச்சையாற்
கட்டப் பிறவிக் கருவைக் கணமொன்றில்
வெட்டக் கழலிட்ட வீரனடி - கெட்டேனென்
றுலம் பனமி லடியேன் மனமுருகக்
கோலம் புனைந்த குரவனடி - சீலமிகும்
பாங்காய நல்ல பழவடியார் தற்சூழப்
பூங்கோயி லுள்ளே புகுந்தவடி - யோங்கு
மிருவர்தே டுற்றவடி யிப்படிகண் காண
வருவதே யென்று மனநெக் - கருவியாய்ப்
பாயாத கண்ணென்ன கண்ணென்று பத்தர்கணம்
வாயார நின்று வழுத்துமடி - காயமுட
னண்ணு முயிரும் பொருளு நயந்துதந்தம்
பண்ணுவித்துக் கொண்ட பரமனடி - நண்ணியவெ
சென்னிமிசை வைத்தவடி சித்தந் திரித்தவடி
முன்னையறி வெல்லா முடித்தவடி - யென்னுருவை
காட்டுமடி கண்ட பொருளெல்லா மென்கண்ணில்
வாட்டி யெனையே மலர்த்துமடி - கோட்டமற
நம்பத மல்லவிது நான்மறைமா வாக்கியத்திற்
றும்பதங்கா ணென்ற சுரூபனடி - யம்பரமாய்
நின்ற பரவுடலி னேராக வேயென்னை
யின்றி யிடவே யிருத்துமடி - யின்றெனலு
மீண்ட விடத்தே விளம்பு மிதுவொழிய
மாண்டவிடத் தில்லையென வைத்தவடி - காண்டலில
வல்லை யறிந்தவறி வெங்கேகா ணென்றருளான்
மெல்ல விளம்பிவிழிப் பித்தவடி - தொல்லைமறைத்

தற்பதத்தின் மெய்ப்பொருளாந் தற்பரமா யிச்சகத்தி
லுற்பவத்தை யெல்லா மொழித்தவடி - கற்பிதமாம்
பூட்சி யிரண்டும்போய்ப் போதமாய்ப் போருதலு
மீட்சியு மின்றி விளங்குமடி - காட்சியுங்
கண்ணுறக் காணுங்கண் டந்தவடி கண்ணொன்று
மென்றுந வண்ண மிருந்துமடி - வண்ணந்தான்
மாமறைக ளோதரிய வாசாம கோசரத்தை
யூமை மொழியா லுணர்த்துமடி - யேமுற
வாங்கி முழுது மலர்த்தாளி லென்னைமகிழ்
தூங்க வளித்த வருபனடி - யீங்கமிர்த
மூறி யகநிறைந்து தித்தித் துடன்மயிர்க்கா
லேறுந்தேக் கிட்டுச் சுடருமடி - தேறித்
தெவிட்டாது நின்றவடி இப்பிறப்பு மாள
வுவட்டாதென் னுள்ளே யுதித்துப் - பவத்திலவரு
மூனநடங் கண்டவா றெப்பவே மீட்டென்னை
ஞானநடங் கண்டு நயந்தவடி - யூனில்வரு
மச்சந் தவிர்த்தவடி யங்கைக் கனியாகி
நிச்சங்க மாகி நிகழ்ந்தவடி - பிச்சனைப்போற்
சுத்தாமல் வைத்தவடி கண்ணுறநின் றவடி
வித்தார மெல்லாம் விளைத்தவடி - சித்தத்தி
லெண்ணேது மாய்த்தவடி யென்னைவாழ் வித்தவடி
கண்ணேகண் ணுகக் களைத்தவடி - யெண்ணுற்ற
சாலங் கடந்தவடி காமங் கடிந்தவடி
சீலங் குடிகொண்ட செம்பொனடி - ஞாலமெலா
முன்பிறைக்க வல்லவடி முற்றுந் துடைக்குமடி
யெஞ்பிறைக்குஞ் சால விளங்குமடி - யின்பிறைஞ்சி
மூவருந் தேடுமடி முத்தியாய் வந்தவடி
யாவருங் காணா திருந்தவடி - பாவியேன்

சென்னிசூடி கொண்டவடி சித்தம் புகுந்தவடி
சொன்னிகழா நின்ற சுரூபனடி - முன்னைவினை
மாள மிதித்தவடி வல்வினையே னைத்திருத்தி
யாள மதித்துவந்த வண்ணலடி - நாளுக்கு
நாளும் புதியவடி நல்லடியா ரோடெனையு
மாளும் படியிசைந்த வையனடி - மாளாவென்
கள்ளத்தை வாங்குமடி கண்ணூறு மானந்த
வெள்ளத் தெனைப்புகுத விட்டவடி - யுள்ளத்திற்
கொண்டகோ ணீக்குமடி கோகனகன் றேடுமடி
யண்டர்கோ னேத்தமிக வஞ்சுமடி - தொண்டரெலா
கொண்டு குலவுமடி கொங்கு கமழுமடி
பண்டை நிலையிற் பதித்தவடி - கண்டவர்தம்
பாவத்தை நீக்குமடி பாகொத் தினியவடி
* யாவத் தனமான வம்பொனடி - வீவற்ற
வாதி பகவனடி யாதித் தனைமுதலாஞ்
சோதிக்குஞ் சோதியாந் துய்யவடி - யாதுக்கு
மீதாகி நின்றவடி மேல்கீ ழிலாதவடி
யோதாம லுண்மை யுணர்த்துமடி - பேதாதி
பேத மறுத்தவடி பேச வினியவடி
போதக் கனமாம் புனிதவடி - யாதியு
மந்தமு மற்றவடி யாரணங்க டேடுமடி
பந்தமும் வீடும் படைக்குமடி - சிந்தைக்கு
மப்பாலாய் நின்றவடி யன்பர்க் கணியவடி
யொப்பான செய்யவடி யொப்பிலடி - யிப்பிறவி
மாற்றுமடி தன்னை வழங்குமடி மாதவர்கள்
போற்றுமடி யின்பம் பொழியுமடி - நோற்றிலர்கட்

---

* ஆவத்துக்குத்தனமென்பது - ஆவத்தனமென மருவிற்று.

மின்னலாய் நின்றவடி யென்னுள்ளத் தின்னமிர்தாய்க்
கன்னலாய்த் தேனாய்க் கலந்தவடி - தன்னிலைபோய்

வாராது வந்தவடி வாழ்வறவாழ் வித்தவடி
யாரா வமிர்தான வம்பொனடி - நீராவென்

னெஞ்ச மறுக்குமடி மானங் கடிந்தவடி
நெஞ்ச மறிய நிறைந்தவடி - துஞ்சல்பவப்

போக்குவர வற்றவடி பொன்னான செய்யவடி
யாக்க மழிவற்ற வண்ணலடி - யாக்கையுடன்

முத்தி யளிக்குமடி மூவா முதல்வனடி
பத்தி வலையிலகப் பட்டவடி - புத்தியா

லுள்ளற் கரியவடி யுண்ணெக் கவருண்ண
வள்ளத் தமிர்தான வள்ளலடி - தென்னுற்ற

மின்சொன் மதிப்புலவோ ரேத்தப் பெருவடியென்
புன்சொ லுவந்த புனிதனடி - யென்சென்னி

செய்த தவமான செம்பொனடி தீவினையேன்
கைதவங் காணாக் கருணையடி - பைதலெனை

வாவாவென் றென்னை யருட்கண்ணாற் பார்த்தருளி
வாவாவென் றன்றலையில் வைத்தவடி - நாவார

வாழ்த்த மனமினிய மாமலர் தூஉய்க்கரங்கள்
சூழ்ந்தச் செவிக டிகேட்பத் - தாழ்ந்தத்

தலைதந்த வள்ளலடி தாமரையோ னுண்மை
நிலையும்பர் காண நிகழ்ந்த - வலதின்றி

யற்ற பொருளிதுவே யாரணத்தி னாணையே
மற்றில தென்று மறுவேத்த - முற்றுலகிற்

றக்கவர் நால்வரோ தத்துவ ஞானத்திற்
பக்குவ ரொன்று பகரவரன் - சக்கிரக்கை

யாண்டகை தன்பா லறியானை வாழித்தேர்ப்
பாண்டவனுக் கோதப் பதிணொண்கா - னீண்டுலகிற்
கையின் மணியென்ன யாவர்க்குங் கண்ணளிக்குஞ்
செய்யசுரு பானந்தன் செம்பொனடி - மையலாய்க்
கன்று மறுசமயக் கத்திற் கலையாம
லொன்று மொழிவற் றுளவெல்லா - நின்ற
படியே சிவமாக்கிப் பார்த்தென்னை யாண்ட
வடியென்னை யாண்ட வடி.

ஆ கண்ணி - ௬௫.

## நேரிசைவெண்பா.

வடிவிலா மாயையால் வந்த பவத்திற்கு
முடிவிலா முத்திப் பொருட்கு - மடியோரி
னீண்ட பெருமா னிகளமறப் போதமளித்
தாண்ட பெருமா னடி.

திருவடிமாலை

முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

---

இரண்டாவது.

# சிவப்பிரகாசசுவாமிகள்

## திருவருட்கழன்மாலை.

---

கலிவெண்பா.

திருவார் செழுங்கமலச் சீராரும் பொற்று
ளருமா முனிவ ரமரர் - பெருமால்கொண்
டின்னஞ் சுவடொற்றிக் காணாதங் கேதமுற
முன்னை யொருமூவர் தாமுயலப் - பின்னவியற்
பாதகமே செய்துழலும் பாவியேனைப்பொருளா
நாதனுடல் சாத்தி நலந்திகழப் - பேதையேன்
றன்னைவலிந் தாண்டருளித் தாவாத வென்பவத்தைத்
முன்னமுறு மூலமல மாமாயை - துன்னிநெடுஞ்
சேரத் துணிந்துஞ் சிறியேனைத் தானாக்கச்
சீருற்ற கோவத்தைச் சிர்ப்பதியில் - வீரைப்
பெருமான் சிவப்பிரகா சப்பெருமான் பேரா
வருண்மா மகடுறவி யாயுந் - திருமா
மகள்வீறு சாந்தியொடு வாழ்கருணை யன்பாந்
துகடீர் தனையமாதர் சூழ - மிருஞானச்
சித்தர்கணஞ் சேவிப்பச் சீராரு நல்லன்பர்
பத்தியுட னின்று பரவியிட - வெத்திசையு

மாரணங்க ளாகமங்க ளாத்தர்மொழி யென்றின்ற
* பாரணங்க ளெங்கும் பரந்தொலிப்பக்-காரணத்து,
போகாந்த ஞான வுயர்முத்தி மண்டபத்தி
லேகாந்த பீடத் தினிதிருந்து - சோகாந்த
வெங்௦கோல கால மிகப்பெருத்த வெவ்வினையாம்
பொங்கார் மயனெறியிற் போய்நாடி - லங்கே
தலைகீழா வீழ்வேனைத் தன்னருளா லின்ற
வலியாலே தானெடுத்து வன்பாய் - நிலையுற
நெஞ்சத் தினைவணக்கி நீள்வஞ்சப் பற்றெல்லாந்
துஞ்சத் துகளாகப் பார்த்தருளி - நஞ்சுறு
மென்கோண் முழுது மெழிற்கதைத் தூன்விழுங்கி
நன்கேது மில்லாதே நாய்த்தலையி - லன்போடும்
வைத்தவடி வாசாம கோசரமென் றாரணங்கள்
பித்துறவே ரன்பாய்ப் பிதற்றுமடி - யெத்துவருந்
தேடுமடி தேட்டமெலாந் தீர்க்குமடி தன்னையன்பிற்
கூடுமடி கூடற் கரியவடி - பாடியிடும்
பத்தர்க்கு நல்லவடி பாதகனே னைப்பிடித்து
முத்திப்போ கத்தின் முழுத்துமடி - சித்தத்தை
யாற வளித்தவடி யாசை யறுக்குமடி
யூறு முளத்தை யொருக்குமடி - வேறுதற
தன்னை யளிக்குமடி சால வினியவடி
யென்னை யுருக்கியின் பித்தவடி - முன்னையொரு
மூவர்க்கு மூலவடி மூவாது சாவாது
தேவிற் பொலிந்து திகழ்ந்தவடி - தாவற்ற

---

* பாராயணங்களென்பது - பாரணங்களென மருவிற்று.
௦ கோலாகலமென்பது - கோலகாலமென மருவிற்று.

சுத்தசுக போதவடி சொல்லிற் படாதவடி
பெத்தமொடு முத்தியிற்பே ரின்பவடி - யெத்தியெனை
யாரவென வந்தவடி யாயேனை யாண்டருளும்
பேரருளாற் றன்பெரும்பித் தானவடி - சீரருளா
லெல்லை யிறந்தவடி யென்றுமுள தாயவடி
சொல்லுமனஞ் செல்லரிய தூயவடி - தொல்லைவினை
போகத் துரந்தவடி பூரணம தாயவடி
மாகத் தவருண் மறைந்தவடி - யோகத்தின்
மெய்த்துமுடி வாயவடி மெய்யன்றி லார்க்கென்றும்
பொய்த்தவடி பூமராய் நின்றவடி - நித்தனுமென்
போராத போரவலங் கண்டும் பிசகலறச்
சீரார் திருக்கருணை செய்யுமடி - யோராதே
யென்றுமப ராதமே செய்திடினுந் தான்முனிவை
யொன்று மறியாத வொப்பிலடி - கன்றுமனப்
புல்லினத்தே நான்மறந்தும் போகாமைத் தன்னன்பர்
நல்லினத்தை யேகூட நல்குமடி - யல்லலுறுஞ்
சாதி குலச்சடலைச் சங்கற்ப நான்சாடப்
போத மளித்த புனிதவடி - மேதக்க
வெட்டாமி யோகங் களும்பயனுங் கோதெனநான்
விட்டே விளையாட வைத்தவடி - துட்டாய
வென்கொடுமை நெஞ்சத் திருந்தகலா தேயருள்செய்
நன்கருணை மிக்கு நயந்தவடி - தன்கருணை
காட்டவெனை யாண்டவடி காயமதாய் மாளுமெனை
மீட்டவடி யுள்ளே விழித்தவடி - பாட்டினொடு
பண்ணாகி நின்றவடி பாவனைதீர்த் தாருள்ளக்
கண்ணாய் மணியாய்க் கலந்தவடி - யெண்ணுதற்கு
நான்மறைகள் கூசுமடி நன்கறியே னேத்திடு
மூனவுணா கேட்க வுவந்தவடி - மோனமத்தாம்

றன்மூடிவு கூறுமடி தன்பெருமை பாராதே
யென்னை யிங்ஙனுள விசைந்தவடி - பன்னுமறை
மூலமென வோதுமடி மூடனே னென்புருக்குஞ்
சீலமதாய் நின்று திகழ்ந்தவடி - காலமவை
கண்டவடி காலங் கடந்தவடி யென்னுயிரை
யுண்டவடி யுள்ளொளியாய் நின்றவடி - மண்டுபவக்
காடு சிதைத்தவடி கண்ணுகு மானந்த
நாடுதனை யெனக்கு நல்குமடி - கேடனே
னென்பதறுந் தீங்கொழிய வள்ளூறு முள்ளந்தந்
தின்பமுற வென்னையிங்ஙன் வைத்தவடி - முன்பின்றி
வேதித் திலகுமடி மெய்யரனு பூதியினாற்
சாதித்துக் காட்டியிடுஞ் சம்புவடி - பேதிக்கு
மெய்ப்பொருளு மாயவடி யாவுங் கழன்றவடி
முப்பதமு மோதி முடிந்தவடி - சிற்பதமாய்
நின்றபடி நின்றவடி நேரேயென் கண்குளிர
வொன்றுமடி யோருவமை யற்றவடி - சென்றடையு
மெப்பதமு மாயவடி யேழையர்க்கு நல்லவடி
யொப்புவமை தான்றனக்கா யுள்ளவடி - யெப்பழைய
கோளும் விரகெவையுங் கொண்டவடி கூழையனை
யாளு முவந்தடிமை கொண்டவடி - நாளுமுறு
நண்புசெறு மென்றனையு நாணிவிடா தேபிடித்துப் [பரி
புண்செயுமென் புன்மையெலாம் போக்குமடி - கண்டுசு
கூர வினியவடி கூற வரியவடி
பார்வையற மெய்யே பணைத்தவடி - யூரொடுபே
ரின்றி யிலகுமடி யேகாந்த மாயவடி
நன்றினொடு தீங்கதிலா ஞானவடி - வென்றிமிகுந்
தூய துறவினர்பாற் றுன்னுமடி தாவிஷய
மாயமுறி லங்கே மறையுமடி - காயமது

லறிவயர்வங் கின்மையிறு லாய்ந்தற்ற வத்தங்
குறியிலிது விங்கெனலாய்க் கூடி - நெறிமையினிற்
போந்துணர்வாய் ஞாலத்து வேறாய்ப் புகுந்துணர்வ
தேய்ந்து செறுகியிடுஞ் சிரழிவால் - வாய்ந்தபரன்
றன்சுழுத்தி யாகுமெனச் சுட்டியது தான்கழன்று
நன்பரமே யாகி நயந்தவடி - முன்புகலு
மீரியல்பாய் நின்ற விருதி பகுதியும்போ
யோரியல்பாய் நின்றங் கொளிருமடி - நிர
வுதயாத் தமனமுமற் றேதவத்தை யும்போ
யிதயாத்த மாகி யிலங்கு - மதுபார்க்குந்
தீர்ந்து கழன்று தெளிவாய் நிரந்தரமா
பார்ந்த வுணர்வுருவ மானவடி - போந்தவிந
விற்றிகழும் விச்சுவமே செய்ததுபா ரென்றருள
* வித்தனையு நானென் றியம்பியிடு - மித்திகழ்வாய்
நின்றபடி நேரே யிதம்வே றெனத்தோன்று
மென்றியல் குற்ற மெனக்கேற்கக் - கன்றலறக்
காட்டுமடி யிவ்வளவுங் காணு முபாதிகளை
வாட்டிய திங்கினித்தான் மன்னிநிகழ் - சேட்டுணர்வில்
மேற்கிடந்த மாசறுத்த லென்றுவெதி ரித்தமுந்
0 தீர்த்திதமுந் தானாய்த் திகழ்ந்தவடி - பார்த்த
வனிதமுடன் றனிதமு மற்றொளிரு மம்பொற்
புனிதவடி பூதவல குண்ட - தனதுசெய
றானு மிறந்தவடி சாற்றவரி தாயவடி
யான வுபசமனை மாயவடி - மோனபதந்
தம்பிரான் வந்து வெளிப்படுமித் தானமென
நம்புமா காட்டி நயந்தவடி - யெம்பரம

---

* இனவெதுகை. 0 மூன்றாமெழுத்தினவெதுகை.

வஞ்சத்தைச் சாடுமடி வாராது வந்தவடி
கொஞ்சிட் டுபநிடங்கள் கூவுமடி - தஞ்சமதாய்
நின்றபடி நின்றவடி நேரோயென் மோகத்தைக் [
கொன்றவடி யுண்டிலையென் கோண்முழுது-மன்றியமெ
மாற்றமது வாட்டுமடி வாழ்வறவாழ் வித்தவடி
போற்றுமடி யாமைமிகப் போற்றுமடி - யாற்ரு
தருணினைந்தங் கள்ளூறு மன்பர்தஞ் சிந்தை
வெருளதற மெய்யே பொலிந்திங் - கிருளுமனத்
தென்னைப் பொருளாக வென்போ லுடல்சாத்தித்
தன்னைத் தருந்தம்பி ரான்றனடி - சென்னிக்கண்
வைத்து மனமகிழ்ந்து வாயார நான்வாழ்த்தும்
பித்ததுவாம் பேரன்பே தந்தருளெ - னத்தா
சிவப்பிரகா சாபோற்றி சீமானே போற்றி
யவக்கடலு ளாழ்வேனை யாண்ட - தவக்கடலே
போற்றி சயசய பல்லாண்டு பல்லாண்டு
போற்றி சயசயபோற் * றீ. (உ

ஆ கண்ணி - கக.

## நேரிசைவெண்பா.

என்புன் றலைமன்னு மின்பத் திருக்கழலை
யன்போன்றி யேத்த வனவரத - மின்பஞ்செய் [ன்
தான்டானே தந்தருள்செய் யல்லதுவே றொன்றையுநா
வேண்டா மையுமருள்வாய் மெய்.

திருவருட்கழன்மாலை

முற்றுப்பெற்றது.

---

* வுகையுளி - நீட்டல்விகாரம்.

உ

சிவமயம்.

——*——

மூன்றாவது.

ஸ்வரூபானந்த சுவாமிகள்.

---

# போற்றிமாலை.

கலிவெண்பா.

வானாடர் கோனு மலரோனு மாலோனுங்
கானாடு கின்றநுதற் கண்ணோனுந் - தானாட
மாட்டார் மதிமயங்கி மாமறையி னீறுகளுந்
தாட்டா மரைதேடித் தானரற்றச் - சேட்டார்

முனிவரெலாங் கானூர்போய் மூங்கீரி னுள்ளே
பனிவருங்கா லத்துப் படிந்துந் - துனிபெருகுங்
கோடையினில் வெய்ய கதிருங் கொடுந்தீயும்
* பாடு மெரியப் பதைபதைத்தும் - வாடித்

தலைகீழாய் நின்று தபித்துச் சலமோ
டிலைகாய் கிழங்குகாற் றெய்திற் - றலமாகக்
கொண்டயின்றுங் காடுங் 0 குமிடு மிடமாகக்
கண்டுயின்று மிங்ஙனே காயத்தைக் - கொண்டு

படக்கடவ வெத்தனையும் பட்டாலும் பட்டு
விடக்கடவ ராக விதித்திங் - கடற்புலன்க
ணீத்தார்க டங்க ணிணையுங் கடந்தகமே
பார்த்தார்க் கதிதூரப் பட்டிருண் - டேத்துவார்க்

---

* பாடு பக்கம், உம்மையிடைச்சொல், 0 குமிடு - குன்று.

இன்னதென வறிய வில்லா வியல்புதனை
லன்ன வரையு மயர்ப்பித்துத் - தன்னுருவை
மாணென்ன வன்றி வலியென்னப் பெண்ணென்னப்
பேணும் வகையின்றிப் பேசுங்காற் - காண
வொருவழியு மின்றி யுரையுணர்வுக் கெட்டாத்
திருவடியை யுள்ளங்கைச் சேர்த் - தொருகனிபோற்
கண்டோமென் பார்காட்சி யாவையுங் கைகடந்
துண்டோ விலதோவென் றோர்வுமறத் - திண்டாடப்
பண்ணிப் பரம கருணையினா லோருருவாய்
நண்ணித் திருஞான நாட்டத்தைத் - திண்ண
மளித்திடினு மன்பர்க் ககமதிப்பின் முன்வந்
தொளிப்படுமா போலே யொளித்தும் - வெளிப்படா
யெம்பிரா னென்றிரந்தும் யாவர்க்கு மெய்தரிய
தம்பிரா னாயேற்குத் தாரணிக்கே - செம்பொற்
கழல்காட்ட வாசமெலாங் கண்ணுறக் காணே
னழல்காட் டியமெழுகே யாகே - னெழில்போற்ற
வாயா யிரங்காணேன் மாறாப் பெருங்களிவந்
தோயா தருகு முளங்காணேன் - காயம்
புரையுள்ள வெல்லையும்போய்ப் பூரிக்கக் காணேன்
கரையுந் திறந்தானுங் காணேன் - திரைகொண்ட
வாழிபோ லார்த்தோங்கி யாகாயத் தோடுநில
னேழையே னாவித் தெழுந்துவிழேன் - வாழே
னுருகேன் பெருகே னுடையானே யுன்னிப்
பருகேன் பரவேன் பதையே - னொருகால்
விழிபனியேன் வெய்துயிரேன் மெய்சோரேன் விம்மே
னொழிவறவே நின்றுருக்கி யூனேக் - கழிவுறவே
பாரோன் பயந்துள்ளம் பாதாதி கேசமுற
வேரோன் வியவேன் விதிர்விதிரே - னீராய்க்

களையே னெனுடலங் கம்பிக்கக் காணேன்
விளையேன் மலர்ப்பதத்தே வீழே - னுளையுங்
குழறேன் தழுதழுத்துக் கூத்தாடே னென்றுளைசக்
கழறேன்கண் ணீர்சொரியக் காணே - னழறே
னெளியே யடியே னுருவியப்புங் காணேன்
களியேனான் செய்யும்வகை காணேன் - றெளிவிலே
னுற்ற வறிகிலே னத்தா கழல்போற்றி
தோற்று சுருபச் சுடர்போற்றி - நாற்றிசையுங்
கீழ்மேலு மெங்குங் கிளரொளியா யப்புறம்போய்ச்
சூழ்மேவிநின்ற சுடர்போற்றி - யூழ்மேவு
காயங் களைவித்த கண்போற்றி காற்*றியமான்
றேயந் தளைவின் சுடர்மூன்று - மேய
வுருவித்த வல்லபம் போற்றி யவைமாற்
றொருவித் தகம்போற்றி யுன்னைத் - தெரிவித்த
வாபோற்றி நின்னை வனைவோ ருளம்விட்டு
நீபோக் கிலாத நிலைபோற்றி - தீபத்
தொளியின் றெளிவாய வோருருவம் போற்றி
களியொன் றியகழல்கள் போற்றி - யெளிவந்து
பேயேனை யாண்டு பிழைபொறுத்தென் பேதைமைய
நீயே தவிர்த்த நெறிபோற்றி - தாயேயென்
றங்கையே போற்றி தமியேனை யாட்கொண்ட
வெங்கையே யீசா விறைபோற்றி - பந்த
மறுத்தானே போற்றி யடியேன் பிறப்பை
வெறுத்தானே போற்றி வினையான் - மறுத்துன்

* இயமானனென்ப தியமானெனக் கடைக்குறை விகாரமா யிற்று.

திருவருளைக் காலெனது சித்தந் திரித்த
வொருவிரகே யுத்தமனே யோற்றி - பருகமிர்த
மானவனே போற்றி யடிநாயே னெஞ்சிடையே
தேனாகித் தித்திக்குஞ் சீர்போற்றி - யானு
ரவனியின் வந்தாள வாற்றகிலேன் போற்றி
சிவனயன்மா லாங்தேவே போற்றி - தவமிலியே [ன்
னென்செய்தேன் போற்றி யிறைபோற்றி யெப்பெ
முன்செய்தா னேமுழுது நீபோற்றி - நின்செயலிங்
காரறிவார் போற்றி யனைத்துமா யல்லாத
பேரறிவே போற்றிவெறும் பேயேற்குப் - பாரறிய
தந்தாய் மலர்ப்பாதந் தம்பிரா னேபோற்றி
சிந்தா குலந்தவிர்த்த சீர்போற்றி - கொந்தாரும்
தாளிணைகள் போற்றி தரிக்கிலேன் காண்போற்றி
யாளெனையுங் கொள்வதழ கோபோற்றி - மாளாமே
காத்த கழல்போற்றி நாயேன் கவலையெலாந்
தீர்த்த விழியின் றிறம்போற்றி - வார்த்தைவேறு
மொன்றுலே யெண்ணிறந்த வூழிவரு மென்பவத்தை
கொன்றனே போற்றி குறிபோற்றி - பொன்று
மிதமோ டகமேவு மென்மயலை மாய்த்த
மதஞான வாரணமே போற்றி - பதகக்
கலையோ தலைவலைகள் காண்டற் கரிய
நிலையேயென் னின்மலனே யோற்றி - சிலைபோலு
மென்னெஞ் சினைநெகிழ்த்த தென்செய்த வாபோ
முன்னஞ்செய் தாய்மூர்த்தி யேபோற்றி - பின்னுங்

தெளிகிலேன் போற்றி தெளியாத வென்னை
* விளிகிலேன் வித்தகனே போற்றி - யளிபவர்த

முள்ளத் தமிர்தே யுடையானே யோபோற்றி
தெள்ளத் தெளிவே செயபோற்றி - கொள்ளக்

குறைவிலா வின்பக் குணக்கடலே போற்றி (ன்
யிறைவனே யென்றுரைக்கேன் போற்றி-முறையோதா

கைம்மாறு காணேன் கருணைப் பெருங்கடலே
யம்மானே போற்றி யடிபோற்றி - பொய்ம்மாயங்

இர்த்தாய் பிரானே பிரானே செயபோற்றி
காத்தாய் கருணா கரபோற்றி - மூர்த்தியே

மூலமே போற்றி முழுதழிய வுள்புகுந்த
கோலமே போற்றியெனைக் 0கோப்பழித்த-சீலத்தின்

வித்தகமே போற்றி வினையேனை நின்றுருக்கு
முத்தமனே போற்றியுடை யாய்போற்றி- பத்திக்

கடலா மடியவர்முன் காசினிமேன் மாய
வுடலா னதைநானென் றுன்னி - யடலார்

புலனெறியே போவேனைப் புண்ணியநீ யாள்கை
நலனதுவே நாயகனே போற்றி - சலமதியோ

னின்று குலைகுலையு நெஞ்சந் திரித்தவிர
கொன்று மறியே னுனையிறந்த - குன்றமே

போற்றி புனிதாநின் பொற்கழலே யெப்பொழுதுஞ்
சாற்ற வளித்த சதுர்போற்றி - தோற்றமெலா

நீயேகாண் போற்றி நினைவணங்கா நாளெல்லாம்
பேயேகாண் போற்றிவெறும் பித்தனே - நாயேனுன்

---

* பிறவினை தன்வினையின் வந்தது.

0 கோப்பு-கட்டம்.

சொல்லும் வகையறியேன் சோதெம் பிரான்போ
கல்லு மனங்கரைத்த கண்போற்றி - யல்லும்

பகலு மடியேனை யாண்டவா பார்மேற்
புகலும் வகையருளாய் போற்றி - சகலமு

முன்னிற் பிறந்திருக்க வொன்றிற் பிறந்திறவாத்
தன்னந் தனியேநின் றாள்போற்றி - யென்றனைப்பி

லென்னையாட் கொண்ட விறைவயே முறைபோற்றி
முன்னையாய்ப் பின்னாய் முழுதுமாய் - மன்னும்

பொருளாய பூரணனே போற்றிதாள் போற்றார்க்
கிருளா யிருப்பவனே போற்றி - யருளேது

மற்றேன்காண் போற்றி யடியே னடையவுனைப்
பெற்றேன் பிழைத்தேன் பெருமானே - சிற்றின்பம்

வேண்டாவேண் டாபோற்றி வெவ்வினையே னுள்ளு
யாண்டானே போற்றி யடிபோற்றி - தூண்டுசுடர்ச்

சோதி துறந்தோர் துணையே கழல்போற்றி
யாதி யறிவே யருள்போற்றி - பேதையேன்

றேழைநின் செம்பொற் றுணைமலர்த்தாள் காணு
வாழேன்காண் போற்றி மதிபோற்றி - யேழையே

னாற்றுகிலேன் போற்றி யருளாய் கழல்போற்றி
தேற்றமெனக் குன்சே வடிபோற்றி - போற்றி

சுருபானந் தச்சுடரே யென்றுணையே போற்றி
திருவேயென் செய்தவமே போற்றி - கருவாய

மூலமே போற்றி முடிவே யடிபோற்றி
ஞாலமே விண்ணே நலம்போற்றி - தூலமே

நுண்மையேபோற்றிமிகு நுண்ணுணர்வோர் தங்கரு
வுண்மையே போற்றி யொளிபோற்றி - கண்மேவி

காண்பதெலா நீயொழியக் காணேன் கழல்போற்றி
பூண்பதினி யுன்பொற் கழல்போற்றி - யாண்பெண்ணலி
யல்லானே போற்றி யடியேன் பிழைபொறுக்க
வல்லானே போற்றி மதியிலேன் - பொல்லாதே
னென்றறிந்து மாட்கொண்டாய் போற்றிநீ யெவ்விடத்து
நின்றறிந்த நின்மலபோ தம்போற்றி - யொன்று [து
மறியே னுடையா யடைக்கலநான் போற்றி
சிறியே னிடர்சிதைப்பாய் போற்றி - குறியேது
மில்லாத வின்பப் பெருங்கடலே யேத்தினர்க்கு
நல்லா யெனையா ளையம்போற்றி - பல்லாண்டு
போற்றி சயசய பல்லாண்டு பல்லாண்டு
* சீர்த்திறமேதுந் தெரியாதேன் - போற்றியவா
விண்ணப்பஞ் செய்தவிது வேதங்கள் கண்டுதுதி
பண்ணப் பெறுதமலர்ப் பாதத்தே - நண்ணுமே
யென்போல வெல்லாப் படியாலுங் கிழெனக்கு
முன்போ ருயிரில்லை முற்றுணரிற் - பின்பு
மூளதாகா திப்பரிசே யுள்ளேனை யாண்ட
o பளகாவென் பாக்கியமே போற்றி - யுளகாலங்
கொண்டாடி நாவுன் குணம்பாவ நின்கோலங்
கண்டார நாயேன்றன் கண்ணிரண்டு - மண்டாநின்
சீர்த்தியினை யெப்பொழுதுங் கேட்டென் செவிபுவப்ப
மூர்த்தி கழலை முடிசூட - வேத்துதற்கு

---

* மூன்றுமெழுத் தெதுகை.

o பழகாவென்பது - பளாகாவென முகர ளகர அபேதத்தால் வந்தது.

வானவருங் காணாத மாணிக்கப் பாதமலர்
ஞான மணம்பருக நாசியென - தானடைய

வுள்ளமாய் நின்றுருக வோருடம்புங் கண்ணாகி
வெள்ளமாய் நீர்சொரிய நான்வியப்ப - வள்ளலே

யுன்னடியா ரேவற் றொழிலுவந்து நான்செய்யப்
பொன்னடிதா போற்றி புகழ்போற்றி - யின்ன

மதுவே யிரக்கின்றே னாயிரங் கால்போற்றி
யிதுவே பெறிலடியே னென்றுங் - கதியேது

மில்லாப் பிறவியிலே யென்றும் பிறந்தாலும்
பொல்லாதென் றீதே புரிபோற்றி - கல்லாக்

கயவேனை யாண்ட கருணைக் கடலே
செயபோற்றி செம்பொற் கழல்.

ஆ௨ கண்ணி - அ௰அ.

போற்றிமாலை
முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

நான்காவது.

## ஸ்வரூபானந்த சுவாமிகள்

புகழ்ச்சிமாலை.

---*---

கலிவெண்பா.

திருநாமம் போற்றுந் திறமறியேற் கிந்த
விருநா னிலத்தி னிடையே - யொருநாம

மோருருவ மொன்றுமிலா வுன்மேனி காட்டவருஞ்
சீருடைய செம்பொற் றிருவடியா - யாரமிர்தே

தித்திக்குந் தேனே தெளிவிலா நாயேற்கும்
பத்திக் திறமிருக்கும் பண்பளித்தாய் - முத்திக்
குடையானே யென்னையாட் கொண்டானே யெண்டிக்
குடையானே யென்னையுடை யானே - கடையானேன்

நாளா வளைவந்த வள்ளலே மெய்ப்படவே
யாளா மடியவர்கட் கன்பனே - ஆளா
மணியே மரகதமே மாற்றிலாச் செம்பொ
னணியே யெனக்கணியை யானாய் - இனியவெறும்

பொய்யு மிருளும் பொருந்து மனங்களையச்
செய்யு மருட்கட் செழுஞ்சுடரே - மெய்யன்பா

லாளான நல்ல வடியார் பிழைபொறுக்குங்
கோனே யென்னுடைய கோனே - நீளார்க்குந்

தோன்றானே தோற்றி யளித்தழிக்குஞ் சோதியுரு
மூன்றானே யோரிடத்து மூன்றானே - வான்றீகான்

மண்ணலாய் நீரலாய் மாமலர்த்தாள் சூடாதார்க்
கண்ணலாய் நாயேனுக் கண்ணலாய் - பெண்ணலா

யாணலா யன்றி யலியலா யென்றனக்குங்
காணலாய் வந்த கருணையே - நாணிலா

தென்னையு மாண்டருளு மெந்தையே யென்மனமாங்
கன்னையு மாறு கடைக்கணித்தா - யன்னையினு

நல்லானே வேண்டியவா நான்செய்ய முத்திதா
வல்லானே யென்றனக்கு வாய்த்தானே - சொல்லேலாச்

செய்திமை யொவ்வாத தீமையேன் செய்பவையுந்
தைதமே யென்றறியக் கல்லானே - னொழிக்க

சோதி யுருவே யருபானந் தச்சுடரே
யாதி யுடனடுவீ றந்தானே - நீதியா

மேலானே கீழா மடியேற்கு வீடளித்த
காலானே நாயேன்றன் கைப்பொருளே - நாலான
வேதங்க ளேமுதலா மெய்ந்நூல்க ளாலுன்றன்
பாதங்கள் போற்றரிய பண்புடையாய் - வாதங்கட்
கெட்டானே முன்னூல்க ளெண்ணுகின்ற வெட்டுருவை
தொட்டானே சிட்ட ருளத்தமிர்தே - கிட்டானே
விண்ணோர்க டங்களுக்கு மேநினிமே னீதிபிலேன்
கண்ணார வந்தருளுங் கார்முகிலே - பண்ணார்
மொழியார் விழிவலையான் மொத்துண்டு நாயே
னழியாமைக் காத்த வரசே - யொழியாதே
யெப்பொருட்கு மெவ்விடத்து மெக்காலத் துங்கலர்
* செப்பொருளே யெப்பொருட்குஞ் சேயானே - ப
பொழுதைக், கப்பொழுது மாரா வமிர்தே யடியவை
தார்க், கெப்பொழுதுந் தித்திக்கு மின்சுவையே - பெ
பரிய, பூவோன் முதலாகப் புல்லீறு பல்லுருவாய்
நீவேறு பட்டாய் நிராமயனே - யாவேறு
பால்போ லொருதன்மைப் பட்ட பரம்பொருளே
நூல்போ யுணர்வரிய நுண்ணுணர்வே- வேல்போலு
கண்ணார்தம் பார்வையாற் கட்டுண்டு கள்ளமுறும்
பண்ணார் மொழிகள் பலவுங்கேட் - டண்ணாந்து
நிற்கு மதியிலியே னேயமிலா நெஞ்சென்னுங்
கற்கரையச் செய்ததிருக் கண்ணனே - நற்கமலப்
பாதந் தொழவறியாப் பாவியேற் குன்னறியும்
போதந் தரவந்த புண்ணியனே - யேதங்
கெடுத்தானே கேடிலா நின்பாதங் காட்டி
யெடுத்தானே யென்னா ருயிரோ - தடுத்தாண்டு

* செம்மென்பது - செப்பெனவலித்தல் விகாரமாயிற்று.

கொண்டானே யேதுங் குணமிலை னென்றறிந்துந்
தொண்டாகக் கொண்ட சுடரொளியே - 0 கண்டானொன்
றில்லாத நீங்கரும்பே யாவர்க்குங் கீழோனாக்
கல்லாதா ருள்ள வறியானே - பல்லுயிரு
மீன்றானே யேழையேன் கண்ணொழிய யாவர்க்குந்
தோன்றாது நின்ற சுருபனே - மூன்றாய
காலமே காலங் கடந்திடமே யெப்பொருட்கு
மூலமே யாவு முடிந்திடமே - கோலங்
கரியாய் வெளியாய்நீ செய்யாய் கருத
வரியா யெளியா யனந்த - விரிவை
யொடுக்கமே பற்பலவா யோதுகின்ற லோகத்
தொடுக்கமே யவ்வுலகுக் காணி - யடுத்தவடி
வாரும் பளிங்கேபோல் யாதினுக்கு மவ்வவையாய்
நீருன்றி லாத நிறையொளியே - யோகொன்றி
லொட்டானே யொன்றறியா வென்மத்தன் கையிலகப்
பட்டானே யெட்டாய பல்லுயிரோ - யெட்டா
வகலமே வண்மையின்மற் றன்மையே யெண்ணுஞ்
சகலமே யொன்றாநீ தானே - பகலிரவொன்
றில்லா விரவிபே யிவ்வண்ணந் தன்னுருவைச் [ப்
சொல்லாதே நான்காணச் சொன்னவனே - யெல்லாமா
நின்றானே யொன்றுமலா நின்மலனே தன்மனத்தி
லொன்றானே நீமுடிவி லொன்றானே - குன்றா
வொளியானே யென்னை யுவந்தாண்டு கொள்ள
வெளியானே சால வெளியாய் - தெளியாதேன்

---

0 ஒன்றுமென்ப தொன்றெண, வும்மை விகாரத்தாற் றொக்கது.

வெற்ற வெறும்பொய்யேன் மெய்யடியார் போலுஞ்சி
கற்றுப் பிதற்றுமது காதலொடுங் - குற்றமெனக்
கொள்ளா தெனக்குங் குணாகரமாந் தாட்கொண்டு
விள்ளாதென் னுள்ளிருக்கும் வித்தகனே - யெள்ளா
வறிவே யறிவடங்கு மாலயமாய் நின்ற
செறிவே யெலாங்கடந்த தேசே - பிறிவுதறத்
தேசாய மேனி தெளிந்தடைந்தோர் சேர்ந்தமைந்த
வாசாம கோசரமே மற்றெவைக்கு - மீசான்றாய்
நின்றா யடியேற்கு நீயளித்த கண்ணதனா
லொன்றாகப் பார்த்தளவி லுன்னையலா - தின்றி
யிருந்த தினியடியே னேதாமென் றென்று
திருந்து புகழுன்னைச் செய்வேன் - பொருந்தவுனை
யாதி யிமையோர்க ளவ்வுலகி னிவ்வுலகிற்
போத முனஞ்செய்த புண்ணியத்தா - லாதன்
றரணி மிசையதனிற் றாளடைந்தார் சன்ம
மரண மறவருள வந்து - கரணங்கட்
கெட்டா வொளியை யிதுவென்று கண்காணு
மட்டாக்கு மென்று வரநினைந்து - கிட்டாராய்
நன்மையான் மிக்கவர்க ணின்றுணங்க நாடரிய
தன்மையான் றன்னைத் † தரவென்னக் - கென்மையா
றன்னு லவத்தை பலவாகத் தான்பாவித்
தென்னு லனைத்து மிலவாக்கித் - தன்னாகத்
தன்னாலே யென்னைத் தனதுருவே தானாக்கி
யென்னாலே தற்றுதித்த வென்னானை - முன்னானை

---

† தரவெனக்கென்பது, தரவென்னக்கெனவொற்றில் வழிவெற்றை யுண்டாக்கியது.

வென்னரச னென்னப்ப னெம்பெருமா னென்றென்று
நின்னரிய பொன்னடிக்கே நின்றிறைஞ்சி - புன்னரிய

வீசனே யெந்தையே யாவர்க்குங் காண்பரிய
தேசனே யென்றென்று செப்புவார் - நேசமொடுன்

பாதம் பணிவார் பரம்பரனே யென்றிசைப்பார்
வாதங்கட் கெட்டாத வாழ்வென்பார் - போதத்தா

லாய்தற் கரிய வறிவென்பா ரென்னவலங்
காய்தற்குத் தோன்றுங் கனலென்பார் - மாய்தற்கே

வல்லேனை மாளா வகைகாக்க மண்ணில்வரு
நல்லோனே யென்று நலங்கிளப்பார் - பல்லுயிர்க்குந்

தோன்றுனே யென்பார் குருபரனாய் வீடருளுஞ்
சான்றோனே யென்று சதுரறிவார் - தோன்றுபெருஞ்

சோதியே யென்பார் சுகபானந் தாவென்பா
ராதியே யென்பா ரகமகிழ்வார் - நீதியறிந்

தார்ப்பா ரரற்றுவா ராவிப்பார் கோலத்தைப்
பார்ப்பார் மலர்ப்பாதம் பற்றுவார் - வேர்ப்பார்

விழுவார் தொழுதெழுவார் விம்முவார் விம்மி
யழுவா ரதிசயிப்பா ராவார் - வழுவாம

லெப்படிநீ யெப்பிறப்பு மாளி னெறிவிடாத்
* செப்பதரும் நீதென்று செப்புவா - ரெப்பொழுதும்

போற்றுவார் நல்ல புகழ்மாலை கொண்டடிமே
லேற்றுவா ரென்செய்வே மென்றுரைப்பா - ராற்றோ

முடையானே யென்பா ருனைமறப்பார் யார்க்குங்
கிடையானே யென்று கிளப்பார் - கடையேனைத்

---

* செம்மென்பது, செப்பெனவிகாரமாயிற்று.

தொண்டாகக் கொண்டருளுந் தூயோனே நாயடியே
கண்டானே யென்று களித்திடுவார் - கொண்டுகொ
டேத்துவார் கும்பிடுவா ரெந்தாய்நின் கோலத்தைப்
பார்த்துவாழ் வார்நின் பழவடியார் - நாத்தழும்பப்

போற்று மவருட் புலையேனை யும்வைத்துச்
† சீர்த்ததிரு மேனித் திறங்காட்டிச் - சாற்றுமறை

நாடும் பரம்பொருளாய் நான்றெளிந்து பத்தியுடன்
பாடும் பரிசு பணித்தருளித் - தேடுகின்ற

விண்ணோர்கள் புண்ணியநீர் மெய்விரும்பா தென்னு
கண்ணீரா மஞ்சனமே காதலித்துப்-பண்ணாரும்

வேதமுதல் வெவ்வேறு போற்றிசைத்த மெய்ம்மா
பாத மணியாதிப் பாரதனி - லாதமிலி

நாயேனை நீயாக்கி நானுரும் பாமாலை
யூயாம லாதரத்தோ டாங்கணிந்து - தேயமெலா

மாக்குந் திருப்போ னகமமுது செய்யாதென்
னூக்கு முயிரை யமுதாக்கி - நீக்கின்றி

நின்று யிருநினையே னெஞ்சுருகே னுள்ளழியே
னுன்றுள் பணியும் வகையுணரே - னென்றுகப்

பாரே னுனையடியேன் பாவியேன் வையமெலா
மாரோனீ யாண்ட வருளனையே - னூரூர்போய்ச்

சாற்றே னகமகிழேன் சம்பிரமத் துன்பாதம்
போற்றேன் புகழ்ந்து புகழ்ந்துனையே - னற்றேனான்

செய்யும் வகையறியேன் றீவினையேன் சேவடிசேர்ந்
துய்யும் வகையருளா யுத்தமனே - பொய்யன்றி

---

† சீர்த்தவென்பது, மூன்றுமெழுத்தினவெதுலைக.

மெய்யேநான் செய்கின்ற விண்ணப்பங் கேட்டருளி
ஐயயே யருள வதுவேண்டுங் - துய்யதிருப்

பாதந் தொழவென்கை பார்மிசைமேல் வந்தாண்ட
நாதன் றனைத்துதிக்க நாமனமுங் - கேதமறச்

சிந்திக்க வின்னருளைச் செய்யதிரு மேனியைக்கண்
பந்திக்க வென்புன் றலைபாணை - வந்திக்க

வென்று முரைப்ப றொழிலடியார் யானதனி
லொன்று முரைக்க வுளத்தெண்ணேன் - பொன்றுங்

கடையெலாங் காய்பசியை யருந்தலா றேயேன்
விடயமே மெய்விரும்ப லுற்றேன் - கொடுவினையேன்

மாயவிழை யத்தே மயங்கா வகையருள
றீய தெனிற்சமிக்கச் செய்தருளல் - காயந்தான்

வீய வருளல் விரும்படியார் சிந்தையகத்
தாய பெரும்பத்தி யாங்கருள - னீயருளிச்

செய்யா தொழிதியேற் றீவினையேன் போய்நரகுக்
கையா வொருவ னெனவமைவேன் - வையகத்தா

ருன்னடியே னேதேனு மாறு லுனையிகழ்வா
ரென்னுடைய நெஞ்சை யாரறிவார் - பொன்னடிகள்

கூடும் பரிசு குறித்தருளி மற்றவைகொண்
டாடும் பரிசெனக்கு மன்பருளிக் - கோடிமனன்

போகுந் திறமருளிப் புண்ணியனே நின்னுருவே
யாகுந் திறனே யருள்.

ஆ கண்ணி - அஎ.

---

புகழ்ச்சிமாலை

முற்றுப்பெற்றது.

சிவமயம்.

---

# சிவ சிவ சங்கீர்த்தனம்.

—(*)—

## எண்சீர்க்கழிநெடிலடி - ஆசிரியவிருத்தம்.

அளவி றந்தது வருள்சிவ சிவசிவ
அகநி றைந்தது வடியிணை சிவசிவ
வுளமி றந்துயி ருணர்வொடு பரமற
வொளிரு கின்றது சிவசிவ சிவசிவ
களவு துன்றிய கனகலெ னுளநிறை
கழல்கொ ளன்பது கணையிலை சிவசிவ
தெளிவி னன்குறு தெளிதரு மனுபவ
திதிதி கழ்ந்தது சிவசிவ சிவசிவ (௧)

உபநி டங்களு முவமையில் கலைகளு
மொருமை யிங்குற வறைதரு மொருபொரு
ளபய நன்குற வருளிட வுருவுகொ
டதுந டந்தது சிவசிவ சிவசிவ
வுபய வின்பமு முவகையு மொழிவற
வொளிரு கின்றது சிவசிவ சிவசிவ
நிபம தொன்றற நிகழனு பவதிதி
நிகரி றந்தது சிவசிவ சிவசிவ (௨)

வகையி றந்தது சிவசிவ சிவசிவ
மனமி றந்தது சிவசிவ சிவசிவ
வகம தொன்றிய வனுபவ திதியமிர்
தளவி றந்தது சிவசிவ சிவசிவ

தருவ தன்றுள வடியவர் திரளொடு
சலனை வஞ்சனை யெனையுமொர் பொருளென
விகமெ ழுந்தரு ளிடலது கருணையி
னெலையி றந்தது சிவசிவ சிவசிவ (௩)

ஒளிரு நன்கழ றுதிசெய வரியந
லுபநி டங்களு மொருவிர கழிகில
துளப னன்குரு மயன்முத லிமையவர்
* தொடர்வு மஞ்சுவர் சிவசிவ சிவசிவ
யரிய நன்கழ லெளிதினி லளவறு
மதிச யங்கொடு துதிசெய வெனையருள்
வளரி னைந்தென துளமுக விறைகழல
வருசு தந்தர வலிசிவ சிவசிவ. (௪)

அளவை கொண்டிந விறைகழ லடைதர
வலமு ருங்கல ருளவலி சிவசிவ
வளமில் வன்கலு மிவருள மதில்வசம்
வருதல் சங்கைய திலைசிவ சிவசிவ
வளர வன்பது விரகதி யடியவர்
மதியி லங்கிடு மிறைகழல் சிவசிவ
களவ நெஞ்சடை யெனையுந லடிமைகொள்
கருணை யங்கடல் சிவசிவ சிவசிவ. (௫)

உருகு நெஞ்சுடன் மயிர்புள கிதம்வர
வுரைத ளர்ந்தழு துவகைசெ யடியவர்
பருகு மின்பம திறைகழல் சிவசிவ
பகலொ டிங்கிர வதுமிலை சிவசிவ
திருகு வன்புறு மெனதுள மிதுதிகழ்
திருவு ளஞ்செய்து செறிவிட மிதுவென

* தொடரவுமென்பது - தொடர்வுமென இடைக்குறைவிகாரமாயிற்று.

வருத லென்செய்த படிசிவ சிவசிவ
வளமை யென்புகல் வதுசிவ சிவசிவ (௪

நடலை கொண்டிர வொடுபக லறமிக
நடுந டுங்கிடு மெனதுள மதுதனை
முடலை வன்பிணை வுடலழி பொருளுயிர்
முழுதை யுங்கொடு சிவசிவ சிவசிவ
கடலை யின்பந லமிர்தினை யெனதுறு
கரத லந்திகழ் மணியென வருளிய
படியி தென்செய்த படிசிவ சிவசிவ
பரம பண்டித னருள்சிவ சிவசிவ. (௫

ஒருக ணங்துய ரறும்வகை யதுவற
வுகளும் வன்பவ வுததியின் மடிதரு
மிருக ணின்றிய வுறுசெவி டுளையுமி
ழிசெய் வன்பிணை வெனையுமொர் பொருளென
வருத ருந்திரு வருள்சிவ சிவசிவ
வடிவு கொண்டவ லபமிது சிவசிவ
* வருள்க ணன்றியொர் பொருளிலை சிவசிவ
வமல னென்செய்த படிசிவ சிவசிவ. (௬

உளம தொன்றிய வொருநிதி சிவசிவ
வுடனி கழ்ந்திடு மொளியது சிவசிவ
வுள்வி றந்தந லமிர்தது சிவசிவ
வகில மின்றிய வருள்சிவ சிவசிவ
வளம்வி ளம்பிட விரகிலை சிவசிவ
வணம தொன்றிடும் வகையிலை சிவசிவ
வெளிநி கழ்ந்தில கியதுதி சிவசிவ
விகிர்த னென்செய்த படிசிவ சிவசிவ. (௭

* அருள்கண்வினைத்தொகை

கருணை யம்புய முகமலர் சிவசிவ
கருணை யங்கட லிருவிழி சிவசிவ
வருணை யந்திடு மடியிணை சிவசிவ
வழகு துன்றிய வடிவது சிவசிவ
விருணை யந்திடு மிடருறு பிறவியை
யெறியு மெங்கைதன் மறமது சிவசிவ
திருந டன்றனை தருள்சிவ சிவசிவ
சிவநி கழ்ந்தது சிவசிவ சிவசிவ. (ய)

சிவசிவசங்கீர்த்தன முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

---

## ஸ்வரூபானந்த சுவாமிகள்

### துவாதசநாம சங்கீர்த்தனம்.

எண்சீர்க்கழிநெடிலடி - ஆசிரியவிருத்தம்.

பேச வாதிமறை நாலு மோர்விரகு
பேசி லாமைநனி பேசு பாதநம
கூச வானவர்கள் கூற யானுனடி
கூறு மாறுனருள் கூரு கோலநம
நாச வாபரண மார மாலைதரு
சோணை மாதருட னாய்தில் பாதவனை
கேச வாதியென வேச வாய்மையருள்
கேச வாயநம கேச வாயநம. (க)

வேறு.

ஆராய வேதமுடி வானதை பாதநம
வாசாபி சாசமற வேயாரு பாதநம

சீராய வானவர்க் டேவாதி தேவநம
தேனுரு பாதமலர் சீராக வோதுதொறு
நீராய வாணவனை நேர்காணு பாதநம
நீதான தாகுமென நேரோது மாசில்பொரு
ணாராய ணாயபத மாநாட வோதிநம
நாராய ணாயநம நாராய ணாயநம. (௨

வேறு.

வாத வாதரறி யாத பாதநம
மாகர் நாடரிய வேக பாதநம
வோது வாரரிய வேத நாலுமன
மோர்வு றுதகென வோது பாதநம
சீத வாதவழல் சேரு மாதவர்கள்
சேரு மாறுனடி தேரு மாறருளி
மாத வாவிலழி வேனை யாளுநம
மாத வாயநம மாத வாயநம. (௩

வேறு.

தாரம் போதுபொரு டானென் றோதிநம
தாரம் பாலர்பலர் சார்பென் றோதிநம
வீரம் போதுதலை மீதந் தாளுநம
வேகம் போதிலெரி மாகங் காலவனி
நாரம் போதகனு மாவிங் கோதிநம
ஞானம் போயழிய நாசஞ் சேரியம
கோரம் போகவெனை யாளுங் கோலநம
கோவிந் தாயநம கோவிந் தாயநம (௪

வேறு.

கட்ட மாம்வினை கைத்த தாணங்
கத்தும் வாதியர் கைப்ப டாய்நம

விட்ட மானவர் பத்தி யாய்நம
வெற்றி யாளவல் வித்த காநம
வெட்டு மாவுரு வத்த னேநம
வெட்டொ ணுவரு வத்த னேநம
வெட்ட மாவர கிட்டு வாய்நம
விட்டு வேநம விட்டு வேநம. (௫)

வே று.

பிறைசூடு வோனுமரி பிரமாவு மாகிநம
பெருவான மாகிநில வனைநாச காரிநம
துறைகூறு வாதருள மிருளான பாதநம
சுரூபாவெ னுவுருகு மவர்காணு சோதிநம
வறைகூவி நாயனைய வெனையாளு பாதநம
வமரேச ராலுமறி வரிதாய பாதநம
மறைசூடி காபரண வணியான பாதநம
மதுசூத னயநம மதுசூத னயநம (௬)

வே று.

புரையற்றி யாவையினு நிலையுற்ற பாதநம
புகழுற்ற தோறுமுடல் புளகித்து னையமொரு
கரையற்ற மாதவர்க டமைகைத்த லாமலக
கனியொக்க நாடிமிகு களியுற்ற பாதநமே
வுரையற்ற தாயுமறை யுணர்விற் படாதவெனு
வொழிவற்ற சோதிவர வழியிட்ட வீரநம
திரையற்ற வார்கலிய தெனவைத்த பாதநம
திரிவிக்ர மாயநம திரிவிக்ர மாயநம. (௭)

சோம னுகிசுடர் புமு னயமொரு
டோமி லாதவுயிர் தோறு மேவிநம
நாம நாடுருவம் யாவு மாகியொரு
நாம ரூபமறு நாத பாதநம

தாய்மு னாகிவரு சார்பி யாவுமின
தாள லாதறிவி லாத தாபதர்கள்
வாய்ம னாலயம்வி டாத சோதிநம
வாம னாயநம வாம னாயநம.

வேத ராகியுடன் வீடு சேரும்வகை
மேவு மாதரவி னார்களாயகில
பூத ராலும்வழி பாடு மேவுமிரு
போதெ னாவுமுனை யாடு மாயநம
மாத ராதலம வான நாடர்தொழு
மாக ராசர்பத மாய்வி லாமையிலே
சீத ராதரவில் வீத ராகரறி
சீத ராயநம சீத ராயநம.

வே று.

கழல்சூடு வாரிதய கமலால யாயநம
கலிகாலன் வாயின்மணி யிடுகால காலநம
வழல்சேர்மு னேபழியு மெழுகாக வேயுருகு
மடியார்க டாமறிய வுளதான பாதநம
குழல்சேரு மாறின்மொழி மடவார்கள் காதன்மிகு
கொடியேனை யாளவொரு குருவான கோலநம
வெழில்சேரு மாமுனிவர் தொழுமாதி நாதநம
விருஷிகேச வாயநம விருஷிகேச வாயநம.

சித்தரா னார்களறி சிற்பிரகா சாயநம
செற்றமார் வாதின்மயல் செற்றதா டாளநம
மத்தரா யோதுபத கத்தில்வா தேயொழிய
மற்றிலா தாரமருள் வைத்தமா மாயநம
நித்தமா வேவல்செய்து நிற்கவே ராதுனடி
நித்தமா மேவல்செய்து நிற்கமா லாகுமதி

பத்தரா ஞர்கள்பெறு பத்மபா தாயநம
பத்மநா பாயநம பத்மநா பாயநம. (௧௧)

ஆழுறை தியவனி யாகாச மாகிநம
வானோது நீழுழுது மாகாத சோதிநம
சீழுத வாகனன்மு ஞும்வானு ளோர்பரவு
தேவேச ராலுமறி வாகாத தேசநம
* மாழுது நான்மறைகள் வாசாம கோசரமென்
வாடாத பாதமலர் வாயார † வோதுதொறுந்
தாழுது காரமென லாநேசர் சார்புநம
தாமோத ராயநம தாமோத ராயநம. (௧௨)

கலித்துறை.

கேசவ னாரா யணன்கிளர் மாதவன் கேடொன்றிலாத்
தேசமர் கோவிந்தன் விட்டு மதுக்கிரி விக்கிரமன்
வாசமுன் வாமனன் சிதரன் மன்னு மிருடிபத்ம
னாசமி ருமோ தரனுரு வாய்நின்ற நாமங்களே.

துவாதசநாம சங்கீர்த்தன

முற்றுப்பெற்றது.




---

* மூறுவென்பது - மூவெனை நீட்டல்விகாரமாயிற்று.
† தொறுமென்பது-தொறுவெனமுற்றும்மை விகாரத்தாற் றொக்கது.

சிவமயம்.

# சிவப்பிரகாச சுவாமிகள்

## நமஸ்கார சங்கிர்த்தனம்.

——(*)——

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

மயக்குறு மாயையி னுல்விழி மறைத்தலி னுலறி வே
ன்வழி, துயக்குறு நீள்வினை யாகிய துயர்க்குழி நான
றுகாவண, மியுக்கற வேயரு ளாம்விழி யெனக்கரு
ளாலரு ளாயுறு, நியக்கற வேதெளி வாய்திகழ் சிவப்
பிர காச நமோநம. (க)

கணத்தினி லேபவ மாகிய கடற்றுயர் போயழி யா
விடப், பிணத்தினை யேனழி யாவகை பிடித்தெனை யா
ள்பெரு வேதிய, குணத்தினை யேதுமி லாயருள் குறித்
திடு சீரடி யார்தம, தெணத்தினி லேதெளி வாய்திகழ்
சிவப்பிரகாச நமோ நம. (உ)

இருக்கொடு மால்பிர மாதிக ளிளைத்தய ராவுற வா
டிடக், கருக்குழி யேசர ணுயுழல் கடைப்புலை யாமெ
னை யாளிட, வுருக்கொடு தானெதி ரோமணி யுளத்தினி
லேகல வாவுற, திருக்கற வேதெளி வாய்திகழ் சிவப்
பிரகாச நமோ நம. (ங)

நடத்தின னேயுல கோடுயிர் நவிற்றிடு பேதமு மாய
வை, கடத்தின னேவிளை யாடிடு கருத்தினை யாரறி வா
ரெனை, யடர்த்திடு மாயையி னுருபி றறப்பறி யாவுள
மேமனு, திடத்தின னேதெளி வாய்திகழ் சிவப்பிரகாச
நமோ நம. (ச)

இளைத்திட மாதவர் தாமின மிகத்தினின் மானுட னு
யெனை, வளைத்தரு ளாம்வலி யாலுற வணக்கியென் மா
மயல் வேரற, விளைத்தலி லாவிளை வாகிய விழுப்பொ

ரு ளேயடி யாரவர், இளைத்திடு மாரமிர் தேநிகழ் சிவப்பிரகாச நமோ நம. (ரு)

கதற்ற தலானல மேதுமில் கலக்கட லூடலை யாவகை, யிதத்தொரு மாமொழி யால்வெறு மிமைப்பொழு தேமுடி வோதியென், மதத்தெழு மாமன மாகிய மருட்கரு வோடழி வாம்வகை, சிதைத்துள மேதெளி வாய்திகழ் சிவப்பிரகாச நமோ நம. (௬)

வருந்தனை வான்முதல் பூதமு மயக்குறு மூனதும் வேறெனப், பருந்தனை தோறுனை யாயொரு பகிர்ப்பவிலாத பராபர, தொருந்துல கோடுயிர் தேர்பர நுவக்கினை யானனு காவகை, செருந்துள மேதெளி வாய்திகழ் சிவப்பிரகாச நமோ நம. (எ)

மறுத்தன ளுனை தாரருண் மருட்டிற மாமதி கேடதிற், பொறுத்திட லேபெரி யோர்கடன் புனைத்திறமேது மிலாவகை, யறுத்தினை யாரடி நீழலி லமைத்தழி யாவறி வாமுனைச், செறித்திடு வாய்தெளி வாய்திகழ் சிவப்பிரகாச நமோ நம. (அ)

அருத்தியி னோடடி யார்பணி யமைத்துள நாளடியேனினி, கருத்துனை காயமு நேர்படக் கலக்கற வேசெயு மாறரு, ளொருத்தியை யாகம தாவமைத் தொருக்கிய யோருணர் வாயெனைத், திருத்திய தேவர்கடேவரும் சிவப்பிரகாச நமோ நம. (௯)

விரித்தனை வேதமொ டாகமம் விளைத்தனை போகமும் வீடதும், தரித்தனை யாவையு மாயவை சதுர்ப்படவேகமெலாவணம், புரித்தனை நீபரி பூரண புலத்தய ராவழி வெறுயத், திரித்துள மேதெளி வாய்திகழ் சிவப்பிரகாச நமோ நம. (௧0)

நமஸ்கார சங்கீர்த்தனம் முற்றிற்று.

சிவமயம்.

---

## சிவப்பிரகாச சுவாமிகள்
## ஸ்வரூபானந்த சுவாமிகள்
# போற்றி சங்கீர்த்தனம்.

---

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

கருவுருவிற் பிறந்தடியேன் கழியா வண்ணங்
கருணைவடி வாய்வந்த கழலே போற்றி
யுருகுமனத் தடியருட னென்னையு மாண்ட
வுண்மையனே கழல்போற்றி யுடையாய் போற்றி
பொருவதறத் திகழொளியா யுள்ளத் தூறும்
பொற்புடைய பேரமிர்தே புனிதா போற்றி
தெரிவருநற் றேவர்கடந் தேவே போற்றி
சிவப்பிரகா சக்கனியே போற்றி போற்றி. (௧)

முன்னவனாய் முதனடுவீ றின்றி நின்ற
முழுமுதலே யடிபோற்றி முனியே போற்றி
யென்னையுமோர் பொருளாக வாண்டு கொண்ட
வெல்லையிறிருக் கருணையனே யிறையே போற்றி
பன்னுமறை யீறுகளோர் கோடியா லும்
பரிசிதென வரியபரம் பொருளே போற்றி
தென்னவனே சயபோற்றி தேசே போற்றி
சிவப்பிரகா சக்கனியே போற்றி போற்றி. (௨)

பிறிவதுவா யுலகதனி லனந்த பேதப்
பின்னமதாய்ப் பிணக்கிறந்த பெரியோய் போற்றி
குறியதிலா வானந்தக் குன்றே போற்றி
குணகடலே யடிபோற்றி குரவா போற்றி

மறுவதிலா மரகதமா மணியே போற்றி
வள்ளலே வைப்பேயென் வாழ்வே போற்றி
செறிவதுவே சயபோற்றி தேசே போற்றி
சிவப்பிரகா சக்கனியே போற்றி போற்றி (௩)

என்றுமொரு படியாகி நின்றே யிந்த
வுலகுயிரா கித்தழைத்த வெந்தாய் போற்றி
பொன்றுமுடம் பளவதுவா யுழல்வேன் றன்னைப்
பூரணமா வெளித்த புனிதா போற்றி
குன்றலிலா மெய்ஞ்ஞானக் கோவே போற்றி
குணாகடலே யடிபோற்றி குருவே போற்றி
சென்றடையாப் பதமளிக்க சிவமே போற்றி
சிவப்பிரகா சக்கனியே போற்றி போற்றி. (௪)

ஒப்புனக்கு நீயேயா முணர்வே போற்றி
யோங்கிமையோர்க் கறிவரிய வொளியே போற்றி
யிப்பியப்பை யறுத்திடுவா னேழை யேற்கே
யெளிவந்த பெருமையனே யீசா போற்றி
யப்புறத்துக் கப்புறமா யனேக வொன்று
மாதார மேபோற்றி யணியாய் போற்றி
செப்புதற்கு நாவொன்று மறியேன் போற்றி
சிவப்பிரகா சக்கனியே போற்றி போற்றி. (௫)

மாறாத பத்தியினுக் கெளியாய் போற்றி
மதியிலேன் றனையாண்ட மைந்தா போற்றி
வேறேது மில்லாத விணையே போற்றி
வித்தகனே யடிபோற்றி விமலா போற்றி
யாறாத பெருவனைக் கண்ணீ ரன்ப
ரகம்விட்டோ ரடிநீங்க வறியாய்போற்றி
தேறாதா ருண்ணின்றுந் தெளியாய் போற்றி
சிவப்பிரகா சக்கனியே போற்றி போற்றி (௬)

அறிவேது மில்லாத கடையே னாத
லறிந்தருளி வைத்துமெனை யாண்டாய் போற்றி
குறியேது மில்லாநல் லடியார் செல்வக்
கோதில்குலத் தெனைச்சேர்த்த குரவா போற்றி
முறியாத வானந்த மூறு வெள்ள
மூலமே போற்றியருண் முகிலே போற்றி
செறியாத செறிவேயென் றெளிவே போற்றி
சிவப்பிரகா சக்கனியே போற்றி போற்றி.

எல்லாமா யீறின்றி நின்றாய் போற்றி
யேதுமிலா வென்னையுமாட் கொண்டாய் போற்றி
கல்லாமை யடியேற்குக் கல்வி யெல்லாங்
கடந்தபெரும் பதமளித்த கண்ணே போற்றி
யல்லாதொன் றில்லாத வறிவே போற்றி
யத்தனே போற்றியரி யானே போற்றி
சொல்லாலீ தெனவரிய சுகமே போற்றி
சுரூபானந் தக்கனியே போற்றி போற்றி.

இன்னிசையா யியலாகிப் பயனாய் நின்ற
வின்னமிர்தே போற்றியிணை யிலியே போற்றி
மன்னியமா னிடனாகி யன்பர்க் கெல்லாம்
வாழ்வறவாழ் வளித்தாண்ட மணியே போற்றி
யன்னையினு நல்லன்பா யருளா னாயே
னூழாமைக் காத்தெடுத்தாட் கொண்டாய் போற்றி
துன்னியநற் பேரின்பச் சுகமே போற்றி
சுரூபானந் தக்கனியே போற்றி போற்றி.

போற்றுமவ ருளத்தமிர்தாம் பொன்னே போற்றி
பூரணனே போற்றிபுரா தனனே போற்றி
வேற்றுவிகா ரங்களெலாந் தீர்த்தாட் கொண்ட
வேதியனே விண்ணவனே விமலா போற்றி

சாற்றியமா மறையோடு மூவர் காணுத்
தத்துவனே சயபோற்றி தலைவா போற்றி
தோற்றமெலா மாய்நிகழுஞ் சுடரோ போற்றி
சுரூபானந் தக்கனியே போற்றி போற்றி (௰)

போற்றிசங்கீர்த்தன முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

## ஸ்வரூபானந்த சுவாமிகள்

### திருநாம சங்கீர்த்தனம்.

---

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

திருமாலுஞ் சேவின்மிசைத் திகழ்வானும் பூவின்மிசை
செறிவானுஞ் சீர்பெருகு மறைநாலுந் தேடின [ச
மருமாலங் காயபர வடியேனென் றுகவெனை
தகமேவின் றாமிர்த மிகமேவும் பாதநம
வெறிமாகங் காலொடுயிர் தனைநீயொன் றாழ்மதியெ
னிருநாலங் காதியவை யலவாகுங் கோலநம
துரிசாமென் றீயவினை யறநாருங் கூரவருள்.
சுரூபானந் தாயநம சுரூபானந் தாயநம (௧)

பலவாயொன் றுநிகழ் பரமானந் தாயநம
பாவாநின் றார்கள்பரு கமிர்தாரும் பாதநம
மலைவாகந் தீரவெனை * தலைமேவும் பாதநம
வலிதாநெஞ் சுடுருக வருவாயுன் பாதநம
நிலைவாவன் பாலுருகி யுடையாயென் றேவைமிட
நெரியார்கண் காணவரு மொளியாரும் கோலமொரு

---

* என்னென்பது எனவெனவகரச் சாரியையிசைநோக்கிவந்தது.

சொலவ்வாலென் பாலருள விசைவாயுன் பாதநம
சுரூபானந் தாயநம சுரூபானந் தாயநம.

மதியாதுன் பாதமலர் மருவாவென் பாவிமன
மருவாநின் னாமிர்தம் வளராநின் னுய்பெருக
விதியாதென் னேதவினி யினியாய்நின் காருணிய
வியல்போவென் னேதிலல திறைவாவெஞ் சாதனுடு
நிதியாயன் பாயெனது ணிறைவாயன் போடுபக
னிசிதானெஞ் சானதுக வுருகாநின் னேகழல்க
டுதியாநின் னொழிய வறியாய்நின் பாதநம
சுரூபானந் தாயநம சுரூபானந் தாயநம

கனியேயென் கோபெரிய களியேயென் கோகடலு
ளமிர்தேயென் கோவரிய கதியேயென் கோவினிய
தனியேயென் கோவடியர் சரணேயென் கோவென,
தவமேயென் கோவெனது தலைவாவென் கோமுனிவ
முனியேயென் கோவென்முழு முதலேயென் கோக
ணை,முகிலேயென் கோவிறைவ முறையோவென் கே
வெனது, துனியேகும் பார்வையருள் சுகமேயென் கே
வருள்செய், சுரூபானந் தாயநம சுரூபானந் தாயநம.

உலகாய்நின் னுய்விரவி யுயிராய்நின் னுயலகி
லுணர்வாய்நின் னுபடைய வுடையாயென் னுலொளிெ
திலகாருன் கோலமல தெதுதானுண் டாய்நிகழ்வ
திதுதானன் னுகுமென வெதுவே றுண்டாமிறைவ
கலகாய்நின் னுலுமிது கலகாநின் சீரலது
கதிவேறுண் டாகமதி கருதாதென் றாயமுடி
* துலகாநின் னுளலது சுமவாதன் பாகிவினோ
சுரூபானந் தாயநம சுரூபானந் தாயநம (ரு)

---

* துலகவென்பதிடைக்குறை - அர்த்தம் துலக்கமுள்ளவன்.

குறையாதொன் றாலுமற நிறைவாகும் பாதநம
குறியாநின் சோதிதரு குரவாநின் பாதநம
சிறையாவென் றீமனமு ணுறைவாய்நின் பாதநம
சினமார்வந் திரவருள் தெளிவாகும் பாதநம
மறையாலங் கோர்முனிவர் கணமாகஞ் சேரமரர்
மதியாலுன் றாளில்வழி படுமாநின் றூயமறு
துறையாலுஞ் சார்வரிய சுடரோநின் பாதநம
சுரூபானந் தாயநம சுரூபானந் தாயநம. (௬)

வழுவாவன் பாவினிய மனனால்வந் தார்மதுர
மொழியானன் றானமது மலராலுன் றாள்கடொழு
தெழுவாரிங் காதரவொ டிறைவாவென் றோலமிட
வெழிலாருந் திமெழுக தெனவேநின் றாளுட
னழுவாரிங் கிராதியர னயன்மாலங் காகவருள்
வலியாருங் காணும்வகை யடியேனுன் றாளிணைக
டொழுமாவந் தாருமென துணையாகும் பாதநம
சுரூபானந் தாயநம சுரூபானந் தாயநம. (௭)

அழலாலுண் டாயகட லதுவாகும் பியபவ
மதிலேநின் றாழுமெனை யருளாலன் போடரிய
கழலாகுஞ் சீர்பெரிய கனையேவந் தேறவருள்
கனியேநின் கோலமல ரடியேகண் காணவரு
ளெழிலாருஞ் சீரடிய ரடியாலங் கேவுதொழி
லினிதாமன் போடுமென சிரமேகொண் டாருமிது
தொழிலாநெஞ் சோடினை கடியேனுங் கூடவருள்
சுரூபானந் தாயநம சுரூபானந் தாயநம. (௮)

உடையாடுந் தோறுமென துளமானந் தாதிசய
மொழியா தன்பாயுருகி விழியாறுங் கோடிமிகு
திரையாய்வந் தாலுமென செயலாலன் றீதொர்செயல்
சிறியேனென் றாலுமிகு தெரியேனந் தோவருள்செய்

புனையாதொன் றுலுமறு புலையேனெஞ் சாரும்வ
புகுதாவெஞ் சாமலுழல் புலமாகுந் தியமிகு
* துனையாவுந் தீரவெழு சுடராகும் பாதநம
சுரூபானந் தாயநம சுரூபானந் தாயநம.

அறவாநின் பாதநம வறிவாநின் பாதநம
வமலாநின் பாதநம வருளேநின் பாதநம
திறவாநின் பாதநம செறிவேநின் பாதநம
சிவமேநின் பாதநம தெளிவேநின் பாதநம
வுறவாநின் பாதநம வுயிரேநின் பாதநம
வுணர்வேநின் பாதநம வொளியேநின் பாதநம
துறவாநின் பாதநம சுகமேநின் பாதநம
சுரூபானந் தாயநம சுரூபானந் தாயநம.

திருநாம சங்கீர்த்தன முற்றிற்று.

உ

சிவமயம்.

---

## மஹாதேவம்.

——(※)——

கலிவிருத்தம்.

தேறுமைய துற்றேதினி கற்போலவன் னெஞ்சுற்
றுறுவெனை யாராவமிர் தந்தோசெய்த தென்று
னீறுயெழ வன்பாசமே னெஞ்சார நிறைந்தே
மாறுத மஹானந்த மஹாதேவ மஹாதேவ.

பற்றேதையு மற்றுரவர் நிற்கப்பழு துற்றே
யற்றேனென வாராவமிர் தந்தோசெய்த தென்றுன்

---

* துனை - வேகம்.

துற்றா நிறைந்தேசுக சிற்சாகர மாயே
வற்றாத மஹானந்த மஹாதேவ மஹாதேவ. (௨)

ஆசைக்கட லுற்றேயழி வேனைப்பொரு ளாவந்
தாசற்றநல் லாராவயிர் தந்தோசெய்த தென்றான்
தேசுற்றென துள்ளேசுக சிற்சத்தது வாயே
மாசற்ற மஹானந்த மஹாதேவ மஹாதேவ. (௩)

குடியாவடி யோமாவெனை யாட்கொண்ட தனக்கே
கெடிதாகிய வன்பாயிட நிந்தன்செய்த தென்றான்
படியேது மிறந்தேபரு காநல்லயிர் தாயே
வடிவாய மஹானந்த மஹாதேவ மஹாதேவ. (௪)

முட்டாகிய மத்தேனலன் முத்திக்குற முற்றும்
விட்டேனல னற்றேனலன் வீரன்செய்த தென்றான்
கட்டாயிரு பாதிக்கறை யற்றார்கரி மேலா
மட்டாய மஹானந்த மஹாதேவ மஹாதேவ. (௫)

விதியார்கலை மேவும்மெலை யின்றாயொழி வின்றா
யிதமோட்க மல்லானெனை யந்தோசெய்த தென்றான்
கதியாயொளிர் கண்ணேயென தெண்ணேது மிறந்தே
மதியாய மஹானந்த மஹாதேவ மஹாதேவ. (௬)

* எழிலுற்றெலை யின்றாயவி யோனிக்கதி தோறு
மழலுற்றழி வேனைப்பா ளந்தோசெய்த தென்றான்
பொழிவுற்றல கெங்கும்புர ணப்பூரண மாயே
வழுவற்ற மஹானந்த மஹாதேவ மஹாதேவ. (௭)

அற்றார்த மகத்தேயமிர் தச்சாகர மாயே
வற்றாதவ ளத்தானெனை யந்தோசெய்த தென்றான்
நற்றாயினு மிக்கார நலத்தானுவ மத்தான்
மற்றேது மஹானந்த மஹாதேவ மஹாதேவ. (௮)

* எழில் — வலி,

கருவுற்ற பவச்சாகர முற்றேகழி வுற்றே
வெருவுற்றழி வேனைப்பா னந்தோசெய்த தென் ன்
னுருவற்றரு வற்றேயெ னுளத்தேயமிர் தானுன்
மருவற்ற மஹானந்த மஹாதேவ மஹாதேவ. ௯)

முந்தாவம ரர்க்கும்மறி வொண்ணுனடி யார்பா
னந்தாத நலத்தானெனை யந்தோசெய்த தென்ரு
தந்தாளிணை தந்தானுயிர் கொண்டானொரு தானு
வந்தாரு மஹானந்த மஹாதேவ மஹாதேவ. ௧0)

மஹாதேவ முற்றிற்று.

உ

சிவமயம்.

## ஸ்வரூபானந்தசுவாமிகள்

## அருட்கழல்விளக்கம்.

---*---

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

புகழ்மிகு கனவி சிறக்கவோ புவியகம் விளைவ ...பெ
ருக்கவோ, மகிழ்தரு மூவகை யுயிர்க்கெலாம் ... மி
டை யறமிக வைக்கவோ, தருமறை மறையவர் ...ங்க
தா பதர்சுரர் பசுவின முற்றெலா, மிகமிகு பெ... ளா
முய்க்கவோ விறைகழ லடியர் விளக்கலே. க)

மனுநெறி யுலகில் விளக்கவோ மவுனரு *ளு... ன்
முழுத்தவோ, நினைவரு முலகி லுயிர்க்கெலா நி... ிய
விதம தளிக்கவோ, வுனவரு முயிர்க ளுளத்... பா

* உள் - மனம்.

மொழிவரு முணர்வொளிர் விக்கவோ, வெனதிறை கம
ல மலர்ச்செய்தா ளெழில்பெற வடியர் விளக்கலே. (௨)

அருளற மெவையும் விளக்கவோ வறுசமயமுமெய்
விளக்கவோ, பொருணெறி யெவையும் விளக்கவோ
பொழிலவை முழுதும் விளக்கவோ, வெருளறு சிவம
நெறித்துநே ரிலகிடு மியல்பு விளக்கவோ, வெருளறு
கமல மலர்ச்செய்தாள் விரைவுட னடியர் விளக்கலே.

தொலைவினை முழுது மறுக்கவோ துயருறு பிறவி
தொலைக்கவோ, வலைகெழு மவல மறுக்கவோ வளவறு
மருளு விலக்கவோ, நிலையுறு மடியர் நினைத்தசீர் நிகழ்
தரு முழுது முடிக்கவோ, வெலையறு சுருபன் மலர்ச்
செய்தா ளெழில்பெற வடியர் விளக்கலே. (௪)

கதுவிய மயல்கள் கலுழ்ச்சிநோய் கடுகிய வெகுளி
கழற்றவோ, விதமுறு முலக மழித்துளே மிருதரு பு
ண மளிக்கவோ, விதமுட னகமு மழித்தபி னெழில்பெ
ற விசைய விழித்துநேர், பொதுவுறு நிறைவை தளிக்க
வோ புனிதன தடிகள் விளக்கலே. (௫)

அறைவுறு சமய வகைக்கெலா மமைவுறு சமமவை
யளிக்கவோ, நிறைவொடு குறைவை இறக்கவோ நிலவிய
நிறைவை நிகழ்த்தவோ, விறைவுறு பரம சுகத்தையே
யெவருளு மிலக முழுத்தவோ, செறிதரு குரவன் மல
ர்ச்செய்தா டிகழ்தர வடியர் விளக்கலே. (௬)

அலைதரு கலைக ளகற்றவோ வமைவுறு மிரத மளி
க்கவோ, விலதுள தடைய விறக்கவோ வெழின்மிரு
மொருமை யெறிக்கவோ, நலமிரு மடியர் நினைத்ததாய்
நவையற நிகழு நலத்தையே, யிலகிட வெளிநி னளிக்
கவோ விறைகழ லடியர் விளக்கலே. (௭)

அசைவறு முனிவர் தவத்திலே யழலொடு புனை ளவற்றுளே, வசையற முயலும் வருத்தமார் வளர்த துயர மரிக்கவோ, நசைகொடு விஷைய விடத்துதே நடலைசெ யெனையு நினைத்துநே, ரிசைதரு கழல்க ளக்கவோ விறைகழ லடியர் விளக்கலே. (௬

அதிசய மிகவு மெனக்குமா லயன்முத லமர ர்ப்பொடே, யிதமக மதனி லிலக்கவே யிடருறு மன வெனக்குளே, யுதிசெயிவ் வுலக முயிர்க்கண்மே லு பர முழுது மொளித்தசீர், நிதியினை நிகழ வளிக்கமே நிமலன தடிகள்விளக்கலே. (௭

அருட்கழல்விளக்க முற்றிற்று.

௨

சிவமயம்.

## அபயம்.

---

கலிவிருத்தம்.

வேண்டே னிமையோர் பதமே விடமுந்
தீண்டேன் மணில்வாழ் சிதைபோ கமது
மாண்டே யறுவேன் மயறீர் வகைவந்
தாண்டா யடியே னபய மபயம்.

வேண்டா மையைவேண் டுதலா கியகோள்
பூண்டே யுழல்வேன் புரைதீர் பொருளாத்
தூண்டா தொளிர்சோ திபுதாம் வகைவந்
தாண்டா யடியே னபய மபயம்.

பொய்யா முடலு முலகும் பொருளென்
றுய்யா வகையா லுழல்வே னுளமே

மெய்யே புகுதா வினையா வினைவா
மையா வடியே னபய மபயம். (௩)

போதோ னெடுமா லரன்வா னவரு
மேதே தெனவை யுறவே யெனையாண்
டீதே யிவனே யெனவந் தருளு
* மாதா வடியே னபய மபயம். (௪)

நரிசா தியசுற் றமதா தியதொல்
லரவா டியெழுந் தனையா வகைதா
னுருவா யெனையாள் பவனே யொழியா
வருளா பரனே வபய மபயம். (௫)

தாய்தந் தைகுலம் பொருள்கல் வியெனும்
பேய்வந் துறவே பிரிதொன் றறியா
நோய்வந் துறவே னுளமே யுணர்வே
யாய்வந் தவனே யபய மபயம். (௬)

தன்னால் வினையுந் தசகி வபரந்
தன்னா லழியுந் தனதாம் விழியா
லென்னா லெனையென் னிலெனக் கருளு
மன்னே யடியே னபய மபயம். (௭)

வேதா கமமே முதனூ லவைவா
மீதா மிதுவன் றெனவோ திடமப்
பேதா திகளா யொருபே தமிலா
வாதீ யடியே னபய மபயம். (௮)

அன்பா மிமையோ ரயர்வெய் திடவே
* யின்பான் முருடா மெனையா ளழிவாக்

---

* ஆதன் - குரு.

* இன்பான்முருடு - பராய்மரம்.

தென்போ லுருவா யெனையுண் டொளிரு
மன்பே யடியே னபய மபயம். (௯

இருளே வெளியே யிழிவே யுயர்வே
தெருளே மருளே செறிவே புறமே
மருளேன் மனனே மனிவீ டறியா
வருளே யடியே னபய மபயம். (௧௦

அபய முற்றிற்று.

உ

சிவமயம்.

—](*)[—

ஸ்வரூபானந்த சுவாமிகள்

சரணம்.

---

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பவமற முனிவோனே சரணஞ் சரணம்
பகவற முழுதானாய் சரணஞ் சரண
மவமற வெனையாள்வாய் சரணஞ் சரண
மடியிணை தருவானே சரணஞ் சரண
நவமறு முணர்வேயுன் சரணஞ் சரண
நணுகரு மொளியேயுன் சரணஞ் சரணந்
தவமுறு பயனேயுன் சரணஞ் சரணஞ்
ஜயஜய குரவாவுன் சரணஞ் சரணம். (௧

உயர்வற வுயர்வோனே சரணஞ் சரண
முலகமொ டுயிரானாய் சரணஞ் சரண
மயர்வறி வறுநாதா சரணஞ் சரண
மவமுறி லணுகோனே சரணஞ் சரணங்

ஐயவரு ளிருளானாய் சரணஞ் சரணங்
கரதல மணியேயுன் சரணஞ் சரணஞ்
செயலறு முணர்வேயுன் சரணஞ் சரணஞ்
செயசெய குருவாவுன் சரணஞ் சரணம். (உ)

அறுசம யமுமானாய் சரணஞ் சரண
மறைமறை மகல்வோனே சரணஞ் சரணம்
நெறுமறி வுருவானாய் சரணஞ் சரணம்
விளைவறு விளைவேயுன் சரணஞ் சரண
மறுகலில் பதமேயுன் சரணஞ் சரண
மறுவறு மணியேயுன் சரணஞ் சரணஞ்
செறிதரு தெளிவேயுன் சரணஞ் சரணஞ்
செயசெய குருவாவுன் சரணஞ் சரணம். (௩)

படருறு வினைநாசா சரணஞ் சரணம்
படிமுதல் முழுதானாய் சரணஞ் சரண
மிடரற வெனையாள்வாய் சரணஞ் சரண
மெனையெளி லருள்வானே சரணஞ் சரண
முடலுயி ருணர்வானாய் சரணஞ் சரண
முருகுள நிறைதேனே சரணஞ் சரணந்
திடமுறு முணர்வேயுன் சரணஞ் சரணஞ்
செயசெய குருவாவுன் சரணஞ் சரணம். (௪)

களிமய லறுகாய்வாய் சரணஞ் சரணங்
கருதரு பரனேயுன் சரணஞ் சரண
மொளியினி லொளியேயுன் சரணஞ் சரண
மொழிவறு முணர்வேயுன் சரணஞ் சரண
மளிதரு கனியேயுன் சரணஞ் சரண
மருள்பொழி யமுதேயுன் சரணஞ் சரணந்
தெளிதரு சிவமேயுன் சரணஞ் சரணஞ்
செயசெய குருவாவுன் சரணஞ் சரணம். (௫)

சுகமது வடிவானாய் சரணஞ் சரணஞ்
சுருதியின் முடிமேலாய் சரணஞ் சரண
மிகபர மறுமீசா சரணஞ் சரண
மிணையிலி யிறைவாவுன் சரணஞ் சரண
மகமுறை யமலாவுன் சரணஞ் சரண
மடியர்த மரணேயுன் சரணஞ் சரணஞ்
சகமது முழுதானாய் சரணஞ் சரணஞ்
ஜயஜய குரவாவுன் சரணஞ் சரணம். (௫

அறிவறி பவனானாய் சரணஞ் சரண
மறிபொரு ளதுவானாய் சரணஞ் சரண
முறிவறு சுகமேயுன் சரணஞ் சரண
முழுதுணர் முனியேயுன் சரணஞ் சரணங்
குறைவறு நிறைவேயுன் சரணஞ் சரணங்
* குணகட லமிர்தேயுன் சரணஞ் சரணஞ்
செறிதரு பவநாசா சரணஞ் சரணஞ்
செயசெய குரவாவுன் சரணஞ் சரணம். (௬

விரகரு ளரியாயுன் சரணஞ் சரண
மிகுமொளி விமலாவுன் சரணஞ் சரண
மரனரி யயனேயுன் சரணஞ் சரண
மகமித மறுசோதீ சரணஞ் சரணம்
பரவுற வினியாயுன் சரணஞ் சரணம்
பழுதறு முணர்வேயுன் சரணஞ் சரணஞ்
சிரமுறு தவமேயுன் சரணஞ் சரணஞ்
செயசெய குரவாவுன் சரணஞ் சரணம். (௭

செருவது மிகவேகொண் டலையுஞ் சமயஞ்
செறிவற வழகாருங் கழறக் துளமே

* குணக்கடலென்பது - குணகடலென இசைநோக்கி விகாரப்பட்டது.

மருவியென் மதியாயென் மதியன் றியிலே
மலர்தரு சுரூபாவுன் சரணஞ் சரண
முருவுட னருவாயொன் றதுவன் றியிலே
யுறையுட னுணர்வாய்நின் றவையொன் றறவே
தெரிதரு தெளிவாமுன் சரணஞ் சரணஞ்
செயசெய குரவாவுன் சரணஞ் சரணம். (கூ)

சடவுடல் வடிவாய்நின் றழல்வேன் றனையுங்
கரவொரு பொருளாவிங் கிலங்தனிலே
யிடைதரு மிமையோராங் கலம்வந் திடவே
விரைவொடு வருவாயுன் சரணஞ் சரணந்
தடையற வடியார்தங் திரள்சென் றவர்முன்
றழன்முக மெழுகாநின் றுருகும் படியென்
னிடவுள மேகவேதங் தருளுன் சரணஞ்
செயசெய குரவாவுன் சரணஞ் சரணம். (கய)

சரணமுற்றிற்று.

உ

சிவமயம்.

# அடைக்கலம்.

—(*)—

கலிவிருத்தம்.

தந்தை தாய்மனை வீடெனுந் தன்மையிற்
சிந்தை யானது சென்றழி யாவகை
யெந்தை யேகுருவிக் கொண்டெனை யேன்றுகொ
ளந்த மாதியி லாயுன் னடைக்கலம். (க)

மேன்மை கல்வி விழுப்பம் வியப்பினிற்
றுன்னு முள்ளஞ் சலித்து விழாவகை

சுகமது வடிவானாய் சரணஞ் சரணஞ்
சுருதியின் முடிமேலாய் சரணஞ் சரண
மிகபர மறுமீசா சரணஞ் சரண
மிணையிலி யிறைவாவுன் சரணஞ் சரண
மகமுறை யமலாவுன் சரணஞ் சரண
மடியர்த மரணேயுன் சரணஞ் சரணஞ்
சகமது முழுதானாய் சரணஞ் சரணஞ்
ஜயஜய குரவாவுன் சரணஞ் சரணம். (௬

அறிவறி பவனானாய் சரணஞ் சரண
மறிபொரு ளதுவானாய் சரணஞ் சரண
முறிவறு சுகமேயுன் சரணஞ் சரண
முழுதுணர் முனியேயுன் சரணஞ் சரணங்
குறைவறு நிறைவேயுன் சரணஞ் சரணங்
* குணகட லமிர்தேயுன் சரணஞ் சரணஞ்
செறிதரு பவநாசா சரணஞ் சரணஞ்
செயசெய குரவாவுன் சரணஞ் சரணம். (௭

விரகரு ளிரியாயுன் சரணஞ் சரண
மிகுமொளி விமலாவுன் சரணஞ் சரண
மரனரி யயனேயுன் சரணஞ் சரண
மகமித மறுசோதீ சரணஞ் சரணம்
பரவுற வினியாயுன் சரணஞ் சரணம்
பழுதறு முணர்வேயுன் சரணஞ் சரணஞ்
சிரமுறு தவமேயுன் சரணஞ் சரணஞ்
செயசெய குரவாவுன் சரணஞ் சரணம். (௮

செருவது மிகவேகொண் டலையுஞ் சமயஞ்
செறிவற வழகாருங் கழறந் துளமே

* குணக்கடலென்பது - குணகடலென இசைநோக்கி விகாரப்பட்டது.

மருவியென் மதியாயென் மதியன் றியிலே
மலர்தரு சுரூபாவுன் சரணஞ் சரண
முருவுட னருவாயொன் றதுவன் றியிலே
யுணாயுட னுணர்வாய்நின் றவையொன் றறவே
தெரிதரு தெளிவாமுன் சரணஞ் சரணஞ்
செயசெய குருவாவுன் சரணஞ் சரணம். (௯)

சடவுடல் வடிவாய்நின் றழல்வேன் றனையுங்
கரவொரு பொருளாவிங் கிலந்தனிலே
யிடைதரு மிமையோராங் கலம்வந் திடவே
விரைவொடு வருவாயுன் சரணஞ் சரணந்
தடையற வடியார்தந் திரள்சென் றவர்முன்
றழன்முக மெழுகாநின் றுருகும் படியென்
றிடவுள செகமேவுதந் தருளுன் சரணஞ்
செயசெய குருவாவுன் சரணஞ் சரணம். (௧0)

சரணமுற்றிற்று.

உ

சிவமயம்.

# அடைக்கலம்.

—(*)—

கலிவிருத்தம்.

தந்தை தாய்மனை வீடெனுந் தன்மையிற்
சிந்தை யானது சென்றழி யாவகை
யெந்தை யேகுறிக் கொண்டெனை யென்றுகொ
ளந்த மாதியி லாயுன் னடைக்கலம். (௧)

மேன்மை கல்வி விழுப்பம் வியப்பினிற்
றுனை னுள்ளஞ் சலித்து விழாவகை

ளகநின்று திகழ்ந்திடு கின்றமை
யறிவங்கயர் வொன்ற தரும்படி
தகவிங்கிது கண்டுகொ ளென்றிறை
சரணந்தலை தந்திட முன்றிகழ்
செகநன்பர மங்குயி ரிங்கிலை
சிவசங்கர சங்கர சங்கர.

சடவன்பிணி துன்ப தரஞ்செறி
தசைவன்பிணம் வன்கழு குண்டியிவ்
வுடலின்பம தென்றழி யும்பொரு
ளுடன்மங்கிடு மொன்றறி வின்றிய
சடனென்றன புன்றலை தன்றிகழ்
சரணந்திசை யெங்கு நிறைந்துள
திடம்வந்து தெளிந்து திகழ்ந்தது
சிவசங்கர சங்கர சங்கர.

உலகங்களு மும்பர் பதங்களு
மொருவுந்திண மென்பது மொன்றற
நிலவும்பர னன்கழ றங்கிய
நிகழன்பர்த நெஞ்சு நிறைந்தது
கலகங்கொள் பவங்க ளிறந்தன
கரணங்க ளடங்க மடிந்தன
செலவுஞ்செய லன்றி யிருந்தது
சிவசங்கர சங்கர சங்கர.

இதமங்கக மென்ப திறந்தன
விகநன்பர மின்றி யொழிந்தன
விதமங்குறு வன்சம யங்களும்
வெறுமொன்றல தின்றி முடிந்தன
பொதுவொன்றற வெங்கு நிறைந்துள
புனிதன்கழ லெங்கு நிகழ்ந்தது

* திதம்வந்து தெளிந்தொளிர் கின்றது
சிவசங்கர சங்கர சங்கர. (௫)

விரதங்க டவங்கண் மூடிந்தன
வினைவெம்பவ பந்தி செறிந்துள
† கரமொன்றிய கந்தூல் கழிந்தது
கரையின்றிய வின்பம் விளைந்தது
சாதந்தனை யன்றிய தொன்றுமி
றலைவன் சரணங்கள் சமைந்தென
சிரமவந்து செறிந்து திகழ்ந்தது
சிவசங்கர சங்கர சங்கர (௬)

எவமன்றிய தொன்றறி வின்றிய
வெனையன்பரொ டங்குற நன்றிசெய்
துவவன்பர்க டம்பர மன்றனை
சரணங்களை யென்றலை தந்திட
நவமொன்றற வெங்கு நிறைந்துள
நயனந்திக ழின்ப நெடுங்கடல்
சிவநின்று திகழ்ந்திடு கின்றது
சிவசங்கர சங்கர சங்கர. (௭)

இறைநன்கரு ளின்செய லென்சொல
வெழினன்கண மொன்றிலை யங்கதின்
மறைபொங்கனு நின்று புகழ்ந்திடு
வளம்வந்து வரம்பதி றந்தது
வறிவங்கயர் வின்றி நிறைந்தென
வெகுநின்றயிர் தம்பொழி கின்றது
சிறைவன்பவம் வெந்து விழுந்தது
சிவசங்கர சங்கர சங்கர. (௮)

* திதம் - இருக்கை. † கரம் - சிறுமை.

பனுநன்கலை யின்கண றைந்திடு
பருவங்கள் கழன்றொளிர் பங்கய
தனநன்கழ றன்றிக ழன்பர்க
டலையன்றிபு மென்றலை தங்கொரு
வினமின்றிய வின்பம் விளைந்திட
விருவென்றிறை வன்செய்த விஞ்சையோர்
தினையும்புக ழுந்திற மொன்றிலை
சிவசங்கர சங்கர சங்கர.

புணியங்கண் மறங்கள் பொலிந்திடு
புலனங்கர ணங்கண் மடிந்தன
பிணிதங் (*கவ வென்பது) தன்றிகழ்
பெருவன்குல சண்டை கழிந்தது
விணையின்றிப வின்பமெ னன்கழ
லிரவங்கொடு நண்பக லின்றியோர்
திணமங்கொழி வின்றொளிர் கின்றது
சிவசங்கர சங்கர சங்கர.

சிவசங்கர முற்றிற்று.

உ

கணபதிதுணை.

---

## ஸ்வரூபானந்தசுவாமிகள்
## அபயவரதம்.

---

கலிவிருத்தம்.

அத்த னேயறி வானந்த நாடனே
சுத்த னேசுரூபா னந்தச் சோதியே

---

(* அவாவென்பது - அவவெனக்குறியதன் கிழாக்குறுகிற்.

நித்தனே யபயந் நிகழ்ந் திட்டிடச்
சித்த னேதிரு வுள்ளத் தடைத்திடே. (௧)

அமல மாகிய வானந்த நாடனே
மும்மல மாமிருள் போக்கிய மூலமே
விமல மாமப யம்விளங் கிட்டிட
வமல னேதிரு வுள்ளத் தடைத்திடே. (௨)

அருள னேநிக ழானந்த நாடனே
பொருள லேனையு மாளுடைப் புண்ணியா
தெருள னேயப யந்திகழ்ந் திட்டிட
வருள னேதிரு வுள்ளத் தடைத்திடே. (௩)

ஆசி லாவழி வானந்த நாடனே
மாசி லாமன மூன்றுஞ் சுருபனே
யீச னேயப யம்மிலங் கிட்டிடத்
தேச னேதிரு வுள்ளத் தடைத்திடே. (௪)

ஏக னேயொழி லானந்த நாடனே
சோக மேது மிலாருட் சுருபனே
※ யாக னேயப யம்மமர்ந் திட்டிட
யோக னேதிரு வுள்ளத் தடைத்திடே. (௫)

நண்ண லேனவி லானந்த நாடனே
யெண்ணி லேனையு மாண்டரு ளீசனே
திண்ண மாரப யந்திகழ்ந் திட்டிட
வண்ண லேதிரு வுள்ளத் தடைத்திடே. (௬)

மாறி லாமகிழ் வானந்த நாடனே
யாறு வாருளத் ※ தண்ணிக்குங் கன்னலே

---

※ ஆகனென்பதற்கருத்தம் - சகளீகரித்தவனென்பதாம்.

※ அண்ணித்தல் - தித்தித்தல்.

யீறி லாவப யம்மிலங் கிட்டிடத்
தேற லேதிரு வுள்ளத் தடைத்திடே.

அருத்த னேயம லானந்த நாடனே
கருத்த னேயெனை யாள்கரு ணாலயா
நிருத்த னேயப யந்திகழ்ந் திட்டிட
வொருத்த னேதிரு வுள்ளத் தடைத்திடே.

ஐய னேயரு ளானந்த நாடனே
பொய்ய னேனுள மேவும் புனிதனே
மெய்ய னேயப யம்விளங் கிட்டிடச்
செய்ய னேதிரு வுள்ளத் தடைத்திடே.

நம்ப னேஞான வானந்த நாடனே
வம்ப னேனுள மன்னுஞ் சுரூபனே
யம்பொ னேயப யம்மணைந் திட்டிடச்
செம்பொ னேதிரு வுள்ளத் தடைத்திடே.

அபயவரதமுற்றிற்று.

உ

சிவமயம்.

---

## சிவப்பிரகாசசுவாமிகள்

## அருட்பத்து.

---

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

கருணை யாகின்ற கண்ணுடைக் கரும்பே
கன்ன லேநற் கலைக ளாப்பொருட்
பொருள னேபுலை யேனையும் பொருளாப்
பூமி தன்னில்வந் தாண்டதோர் புனிதா

தெருள னேசிவ ப்ரகாசனே தேனே
திகழு மன்பர்தங் கவலையை நீக்கி
யருள னேயஞ்ச லஞ்சலென் றன்ப
ரின்ப நன்குற வங்கணு வருளே. (௧)

ஓது மாமறை யாயிரங் கோடி
யுணரு மாற்ற வோங்கொளி யாய
நாத னேநனு காருளத் திருளே
ஞான வாரமிர் தேநலஞ் சுவையே
நீத வாரருட் சிவப்பிர காசா
திகழு மன்பர்தங் கவலையை நீக்கிப்
போத வின்பமும் போகமும் புகழும்
பொருவி லன்பனாப் பொருந்திட வருளே. (௨)

தேவ தேவனே சிவப்பிர காசா
சிற்சு ரூபநற் செழுஞ்சுடர்த் தேனே
பாவ நாசனே பத்தர்த மெய்ப்பிற்
பழுதி லாதநற் றுணைவனே பரமா
வாவ வென்றன்பர் கவலையை நீக்கி
யளவி லாவின்ப மறுகுற வருளா
யொழி லாவரு ளேவடி வாய
வுத்த மாமந்த னேனுளக் கனியே. (௩)

நின்னை யன்றியோர் பொருளிலர் நினையு
நினைவு வேறிலர் நின்னையே திகழும்
பொன்னும் போகமும் புகழொடு வலியும்
பொருந்து மூர்மனை காணியும் புகலு
மன்னை யுந்தையுந் தமுமற்ற துணையு
மாக வெனினைந் தன்றியொன் றறியா
வன்ன வன்பர்தங் கவலைய தகல
வளவி லின்பநன் கழகுற வருளே. (௪)

தென்ன வன்சேரன் றிகழ்தரு சோழன்
றேச மங்கங்கு திகழ்ந்தர சாளு
மன்னர் நீயமைச்சர் நாற்படைத் தலைவர்
மற்று நீயவர் மதியுநீ மனநீ
யுன்னை யேதுணை யாகநன் குடைய
வொப்பி லன்பர்தங் கவலையை யொழித்துத்
தென்ன னேசிவப் பிரகாசத் தேனே
திகழு மன்பருக் கின்பநன் கருளே. ( )

வேத கீதனே விண்ணவர்க் கரசே
மெய்யர் மெய்யனே பொய்யர்தம் பொய்யே
யாத னேனப ராதமே செய்தே
னாயி னுங்கினை யன்றிமற் றறியேன்
சீத னேசிவப் பிரகாசத் தேனே
திகழு மன்பர்தங் கவலையை நீக்கி
நாத னேயின்ப நன்குற வருளாய்
நாயி னேனையு மடிமைகொண் டானே. (

முனிவி லாதபே ரருளுடை முனியே
முத்த னேயொப்பு மிக்கவ ரில்லாத்
தனிய னாகிய சம்புவே தலைவா
தத்து வாபத்தர் வைத்தமா நிதியே
கனியு மாவருட் கற்பகக் கனியே
காத லாலன்பர் கவலையை நீக்கி
யினிதி னின்பமு முவகையு மருளா
யென்னை யாளுடை யெம்பெரு மானே. (

அன்பி லேனுனக் கழிவுறு போகத்
தாசை வெள்ளமு மயலுமே யுடையே
னென் * பொ லாமணி யேயிவை கண்டு
மிரங்கி யென்றுகொண் டாண்டதுன் னருளே

* பொல்லாமணி - பொள்ளாமணி.

யின்ப னேசிவப் பிரகாசத் தேனே
யேழை யென்குற்றங் குணமெனக் கொண்டு
நன்பொ னேயன்பர் கவலைதீர்த் தின்ப
நல்க வேண்டுமெ னற்றவப் பயனே. (௮)

நின்க ழற்குநா னன்பில னாக
னீயு நானுமே யறிவமத் தனைமற்
றுன்க ழற்குநா னடிமையென் பதுநா
னுலகெ லாமறி யும்பொரு ளதனாற்
றுன்ப முற்றிடி னுனைச் சிரிப்பர்
சுருப நன்குறிற் றறிப்பது முனையே
யன்ப தற்பொருட் டெம்மரு ளாளு
மன்ப ரின்புறத் துன்பறுத் தருளே. (௯)

திருந டத்தர சேசரு பாவென்
றிகழு நல்லருட் சிவப்பிர காசா
வுருவெ டுத்துவிட் டிடைவிடா துழலு
முற்ப வக்கடு வாரிய வொருவா
பருவ துற்றநல் லன்பர்கத் துயரைப்
பாற வெசெய்துன் பழுதிலா வின்ப
மருவி டச்செய்திவ் வுடலுள தனையு
மகிழ வைத்துள மன்னிநீ யருளே. (௰)

அருட்பத்து முற்றிற்று.

சிவமயம்.

காரணற்காணாக் கரணத்திகழ்ச்சி.

## இது, ஸ்வரூபானந்த சுவாமிகள்மேல்.

ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

தொழுந்தேவர் நின்றயரத் துன்பப் பிறப்பி
லெழுந்தே லெனவெனைத்தா னடிப் புறத்தி
உழுந்தார் பொழுதி லுழைத்தா லுழைத்த
செழுந்தேற லுண்ணாச் செவியுஞ் செவியே
தேசிகன்சீர் கேளாச் செவியுஞ் செவியே.

அரும்பி முளையா யலராகிக் காய்த்துக்
குரம்பை பழுத்துதிர்ந்தோர் கொள்கைவா யின்ன
திரும்பிப் புகாமே சிவன்கோயில் கொள்ள
விரும்பத் தவமில்லா மெய்யென்ன மெய்யே
மெய்க்கோயி லாகாத மெய்யென்ன மெய்யே.

ஒளிக்கு மொளியா மொளியுருவங் கொண்டு
வெளிக்க ணெழுந்தருளும் வேதியனைக் கண்டு
துளிக்கு மருவி சொரியச் சொரியக்
களிக்குந் திறமிலாக் கண்ணென்ன கண்ணே
கருணைக் கழல்காணாக் கண்ணென்ன கண்ணே.

பொற்று மனையவனைப் புத்தேளி ராயவர்தஞ்
சற்று மரசாய்ச் சகத்தே பிறந்திறந்து
சுற்று மனைபோற் சுழலா வகையாண்ட
நற்று மனைமுரலா நாசியு நாசியே
ஞான மணங்கவரா நாசியு நாசியே.

மெய்ம்மையா னந்தம் வெறுமின்ப மாய்விளங்குந்
தம்மைப் பெறவில்லார் தரமென்ன தரமே
தற்சுருப ஞகாதார் தரமென்ன தரமே. (௪

காரணற்காணுக்கரணத்திகழ்ச்சி முற்றிற்று.

உ

சிவமயம்.

# ஸ்வரூபானந்தசுவாமிகள்

## சீர்பாதவல்லபம்.



கலிவிருத்தம்.

ஆபத் தனமாகு மாபத் துணையாகு
மாபத் திணைவேரோ டரியும் மயிலாகு
மாபத் ததுமேவா வரணம் மதுவாகு
மாபத் தறுசம்பத் தமலன் கழலுனே. (௧

இடருக் கிடராகு மிடாற் றிடமாகு
மிடரைப் பொடிசெய்தற் கெரிநற் படையாகு
மிடருக் கிசைவொண்ணு வெழிலா ரணுகு
மிடாற் றிடுமின்பத் திறைபொற் கழலுனே. (௨

அழிவுக் கழிவாகு * மழிவற் றிடமாகு
மழிவைக் கருவேரோ டரியும் மயிலாகு
மழிவற் றெழிலாரு மன்பர்க் கருண்மிகுப்
பொழிநற் சுரூபன்றன் புனைபொற் கழலுனே. (௩

துயரைத் துயர்செய்யுந் துயாற் றிடமேவுந்
துயரைத் துகள்செய்யத் தொடுநற் படையாகுந்

* அழிவற்றவிடமாகுமென்பது - அழிவற்றிடமாகுமென ட
ருவிற்று.

துயர்மற் றனுகாதல் லரணத் துணையாகுந்
துயரற் றிடுமின்பச் சுருபன் கழலுமே. (௪)

சோகத் திருளுக்குச் சுடர்பொற் சசியாகுந்
சோகத் திரள்சாடத் தொகுதண் டமதாகுந்
சோகத் தொடுமோகத் தொடர்வற் றிடமாகு
மேகச் சுருபன்ற னின்பக் கழலுமே. (௫)

கோபத் தழலுக்குக் குளிர்நற் புனலாகுங்
கோபத் திருளுக்குக் குளிர்பொற் சசியாகுங்
கோபப் பகைவெல்லக் கூர்நற் படையாகுந்
சார்புற் றவருள்ளத் தலைவன் கழலுமே. (௬)

மயலைத் தடிசெய்யு மதமத் தனைசெய்யுங்
கயமுற் றிடுகாமக் களியைப் படவெய்யும்
பய 0 மற் சரமாதிப் படையைக் கெடமோதுந்
செயநற் சுருபன்றன் செம்பொற் கழலுமே. (௭)

மறுமைப் பிணிதீர்நன் மருந்தாக் கடிவாகுந்
சிறுமைத் தனமத்தத் திரளைப் பொடிசெய்யு
† முறுமைக் குணமிக்கீ டனைக் கெடமோதுந்
செறிநற் சுருபன்றன் செம்பொற் கழலுமே. (௮)

திருவைச் செறிவிக்குந் திகழப் புகழ்விக்கு
முருவைப் பொலிவிக்கு முணர்வைக் கிளர்விக்கும்
பொருவற் றிடுநன்மைப் பொருளைப் புணர்விக்குங்
குருநற் சுருபன்றன் குளிர்பொற் கழலுமே. (௯)

வினைவற் றனைவெல்லா விகற்பிக் கிடுமின்பத்
தனயிக் கிடுஞானத் தொடுநற் குணமிலை

0 மற்சரம் - பொறாமை. † முறுமையீண்டு - மேன்மை.

மினமூற் றிடநல்கு மெழினற் சுருபன்றன்
புனைபொற் கழலன்புற் றவருட் பொலிவுற்றே.

சீர்பாதவல்லப முற்றிற்று.

உ

சிவமயம்.

## சிவப்பிரகாசசுவாமிகள்

## திருப்பல்லாண்டு

—*—

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவரு

குறள்வெண்செந்துறை.

ஊன மொழித்துணை யொன்றுமிலே தானெற்கு
முத்தமற் குப்பல்லாண் டோத வாரீர்
குருவோ டருவாகி யன்றாகி யொன்று
மூனார்வினுக் குப்பல்லாண் டோத வாரீர்
ஞானமு ஞேயமு ஞாதுரு மாயல்லா
நாதருக் குப்பல்லாண் டோத வாரீர்
நல்ல சிவப்பிர காசற்குப் பல்லாண்டு
நாத்தழும் பப்போற்றி யோத வாரீர்.

என்னே யெனையும் பொருளாக வாண்ட
வியல்பினுக் குப்பல்லாண் டோத வாரீ
ரிப்படி யென்னவொண் ணுவின்ப வெள்ளத்துக்
கெப்பொழு தும்பல்லாண் டோத வாரீர்
முன்னேயெல் லாமாய் முனைத்தன்றி நின்ற
முதன்மைக்குப் பல்லாண் டோத வாரீர்
முத்தி திருவாய் மொழியும் விரகற்கு
முப்பொழு தும்பல்லாண் டோத வாரீர்.

கல்விக் கடலைக் கடக்கும் படிபார்த்து
கண்ணனுக்குப் பல்லாண்டென் றோத வாரீர்
கற்போலு நெஞ்சங் கரைத்தாள வல்ல
கருணைக்குப் பல்லாண் டோத வாரீர்
செல்வத் திருக்கழல் சூட்டு மடியார்
திருவுக்குப் பல்லாண்டென் றோத வாரீர்
செய்ய சிவப்பிர காசற்குப் பல்லாண்டு
சித்தங் களிக்கவின் றோத வாரீர். (௫)

வாவென் றழைத்தென் பிறந்திறச் சுழல்தீர்த்த
வள்ளலுக் குப்பல்லாண் டோத வாரீர்
மாமறை தேடிட மாலிட றய்வந்த
வல்லவற் குப்பல்லாண் டோத வாரீர்
காவில்லா மாலயன் றேடியுங் காணாத
தத்துவற்குப் பல்லாண்டென் றோத வாரீர்
சாற்றுஞ் சடங்கெல்லாஞ் சாடிய கண்டற்குச்
சந்ததம் பல்லாண்டென் றோத வாரீர். (௬)

பந்தப் பெருங்கடல் பாற்படப் பார்த்த
பரிசுக்குப் பல்லாண்டென் றோத வாரீர்
பாத மளித்த பரிசுக்குப் பல்லாண்டு
பல்லா யிரந்தாண்டென் றோத வாரீர்
சிந்தைப் பரப்பற வீட்டென்னைக் காட்டிய
செல்வற்குப் பல்லாண்டென் றோத வாரீர்
செய்ய சிவப்பிர காசற்குப் பல்லாண்டு
சித்தங் களிக்கவின் றோத வாரீர். (௭)

ஈற்றடி மிக்கு நான்கடியான்வந்த
கலித்தாழிசை.

ஏர்க்கின்ற பெருமறியா முழுமுதல்வன் கேசருணை
யார்த்தபெரும்பாசமெனுமாதிருள்வாயுறேனுக

கோர்த்துணரும்வகையருளியொருநொடியிற் பிறப்
பார்த்தெனையாட் கொண்டவற்குப் பல்லாண்டுகூ[
றுதுமே, பரவரிய நாதனுக்குப் பல்லாண்டு கூறுது(

நீங்காதபெருந்துயரா னெருக்கியெனைச் சுழற்றியிடு
மாங்காரந்தவிர்த்திடவோ ராரியனா யெழுந்தருளி
யோங்காரத்துட்பொருளை யொருமொழியி லளித்(
னையும், பாங்காகவாண்டவற்குப்பல்லாண்டுகூறுது(
பத்திவலைப் பட்டவற்குப் பல்லாண்டு கூறுதுமே (

மண்பாலப் பாதலர்பால் வானோர்பால் மற்றுமுள
வெண்பாலு மெய்தரிய பேரின்பம் யானெய்த
நண்பாக வந்தருளி நல்லடியா ருடனெனையும்
பண்பாக வாண்டவற்குப் பல்லாண்டு கூறுதுமே
பாராமற் பார்த்தவற்குப் பல்லாண்டு கூறுதுமே. (௨

மயலதனுன் மறந்துபிறந் துழன்றிடுமிம் மதியிலியே
டயமதெலாந் தீரவரு வானுருவா யெழுந்தருளி
நயமதுற வுட்புகுந்து ஞானகனப் பேரொளியாம்
பயனதுவாய் நின்றவற்குப் பல்லாண்டு கூறுதுமே
பத்தருயி ருண்டவற்குப் பல்லாண்டு கூறுதுமே. (ங

முத்தியுமுத்திப்பயனுமுழுதுணர்மெய்ஞ்ஞானமுமா(
சித்தியுமச் செய்தவமு மாயசிவப் பிரகாச [லா
னெத்தியெனை யாண்டுள்ளங் குடிகொண்டாங் கெல்லை
பத்தியுமாய் நிறைந்தவற்குப் பல்லாண்டு கூறுதுமே
பராவமிர்தாய் நிறைந்தவற்குப் பல்லாண்டு கூறுது(

செற்றமுட னார்வமதஞ் செறிகோப முலோபமெனு
பற்றதனாற் பவக்கடலுட் பதைத்துழன்று சுழிவெற்(
நற்பதமு நன்னெறியு ஞானமுமாந் தம்பதமே

பற்றதுவா வளித்தாற்குப் பல்லாண்டு கூறுதுமே
பால்புணரி றணிந்தாற்குப் பல்லாண்டு கூறுதுமே. ௧௧

திருகலுறுந்திண்மனத்தைச் செப்படைவேதிருத்தியிட
வுருவருவமொன்றுமிலா வுத்தமஞரோருருவாய்ப் [பப்
பெருகியவெம்பேதைமையாம் பிணிகெடுத்துப்பேரின்
பருகயிர்தாய் நிறைந்தவற்குப் பல்லாண்டு கூறுதுமே
பாமாலை புகந்தவற்குப் பல்லாண்டு கூறுதுமே. (௧௨)

போக்கிவெறு வரவதுவாய்ப் பொன்றுமுடம் பளவாகி
நீக்கமிலா நெடுந்துயரா மீன்கழிப்பட் டழிவேனை
யாக்கமுட னழிவதிலா வானந்த மாக்கியென்றன்
பாக்கியமாய் நிறைந்தவற்குப் பல்லாண்டு கூறுதுமே
பார்முழுது முண்டவற்குப் பல்லாண்டு கூறுதுமே. ௧௩

இகபரமா யெண்டிசையா யெல்லாமா யிறின்றிப் [னாய்
பகவெனலாம்பகிர்ப்புறவேபணைத்தல்லாப்பரம்பொரு
மிகல்குறைவொன்றின்றியெலாந்தானேயாய்வெளிப்ப
பகர்வரிய நாதனுக்கே பல்லாண்டு கூறுதுமே [டுப்
பங்கயத்தா ளளித்தவற்குப் பல்லாண்டு கூறுதுமே ௧௪

அரிபிரமன் முதலாய வமரரெலா மலமாக்குத்
தெரிவரிய செய்யவிவப் பிரகாச னெழுந்தருளிப்
பொருவதிலா நாயேனைப் பொருளாக்கி யுடபுகுந்து
பரிவதுசெய் தாண்டவற்குப் பல்லாண்டு கூறுதுமே
பார்ப்பரிய சோதிக்குப் பல்லாண்டு கூறுதுமே. (௧௫)

திருப்பல்லாண்டு முற்றிற்று.

---

சிவமயம்.

# ஸ்வரூபானந்தசுவாமிகள் திருவந்திக்காப்பு.

---

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

முருகலர்தார் வரைமார்பா மூவர் கோவே
முத்திநெறி யறிவிக்க நாயி னேற்குந்
தருகழலாய் பருகமிர்தே தத்துவதற் கடந்தோ
தயாதரனே தவளநகைத் தையறிருக் கணவா
வரிகருகப் பெருகியமர்த் தரித்தநற் கணைநட்
டருளறயிக் கிருகுழைசெற் றவனிகொளப் பிறழுந்
திருநயனத் திருவனையா ரந்திக்காப் பெடுத்தார்
செய்தருளத் திருவுளமென் றிருநடநா யகனே. (௧

அருண்மேனி யமர்ந்தானே யானந்த மலையே
யணைந்தவர்தம் பெருவினையை யடர்த்தருளு மருந்தே
செருவாரும் பிறவியறுத் தெனையாண்ட தேனே
திருவிருக்கும் வரைமார்பா தெய்வவலஞ் சுழியாய்
பொருவேலை யிடமழித்துக் கயவினையும் வெருட்டிப்
பொங்கியிரு குழைதாக்கு பொருகிளையோ ருயிரைட
பருகுசின விழிமடவா ரந்திக்காப் பெடுத்தார்
பழுதறுநின் றிருவுளமென் பரம்பொருளா முருகே (௨

இலகுமறைக் கெழின்முனிவர்க் கிமையவர்கட் கரியா
யெனையடிமைக் கொளவெனையொத் திசையுருப்புனை
யுலகுயிர்க்கற்பரமெனத்திகழ்வொடு*நெற்றுகனே வா
யுணர்வுணர்வைக் கழியமிகுத் தொளிருசிவக் கடலே

---

* நெற்று -- முதிர்வு.

# திருவந்திக்காப்பு.

## தரவு கொச்சகக்கலிப்பா.

ஊனாகி யூன்றுமிட முள்ளளவுங் கள்ளமறத்
தானான தன்மையினைத் தானளித்த தன்மையனே
தேனாரு மொழிமடவார் திருவந்திக் காப்பெடுத்தா
கானாரு மலரலங்கற் கற்பகமே காண்பாயே. )

வானாடர் மால்பிரமர் மறைகலைக டெரிவரிய
ஞானனந் தச்சுடரோ நாயேனை யாட்கொள்வாய்
மானாரும் விழிமடவார் வந்தந்திக் காப்பெடுத்தா
ரானதிங் கவர்செய்பணி யருளாயென் னுடையா

## எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

அரவணியுஞ் சடைமுடியா யந்திக் காப்பு
வன்றயன்மாற் கரியானே யந்திக் காப்பு
பரவடியார் விரவரியா யந்திக் காப்புப்
பாதகருக் கரிவரியா யந்திக் காப்பு
வரைமகடன் பங்குறைவா யந்திக் காப்பு
மாதேவ னேசிவனே யந்திக் காப்பு
சுரர்பரவும் பெரியோனே யந்திக் காப்புச்
சுயம்பிரகா சப்பொருளே யந்திக் காப்பு. (

கன்றுகுணி லாயெறிந்தா யந்திக் காப்புக்
கற்றுணர்ந்தோ ருளத்துறைவா யந்திக் காப்பு
குன்றுகுடை யாயெடுத்தா யந்திக் காப்புக
கோகனகைத் திருமார்பா வந்திக் காப்பு
வன்றிலங்கை செற்றவனே யந்திக் காப்பு
வரவணையிற் றுயில்வோனே யந்திக் காப்பு
மன்றல்கமழ் துளவணியா யந்திக் காப்பு
மதகரிக்கொம் பொசித்தவனே யந்திக் காப்பு. (௧௦

திருவந்திக்காப்பு முற்றிற்று.

சிவமயம்.

# ஸ்வரூபானந்த சுவாமிகள்

## திருநீற்றுக்காப்பு.

---*---

நேரிசைவெண்பா.

எல்லையிலா வூழியெலாம் யானெனதென் றெய்த்துவரு
மல்லலறுத் தென்னை யாண்டவனே - தொல்லை
யறிவே யனைத்துமா யன்றியென்று நின்ற
செறிவே திருநீற்றுக் காப்பு. (௧)

சுரூபானந் தாவென்றோர் தொல்வினைநீ காப்பாய்
கருமாறன் சேராமை காப்பாய் - யரவணிகைக்
காப்பா யயனைப் படைத்துமா லாயுலகைக்
காப்பாய் திருநீற்றுக் காப்பு. (௨)

செல்லுலவுஞ் சோலைச் சிராப்பளியா யென்பானை
நல்லபுகழ் நன்றுடையா யென்பானை - வல்லபடி
நாப்பாழ் இடவாமை நம்பாகா வென்பானைக்
காப்பாய் திருநீற்றுக் காப்பு. (௩)

காதி வருமறலி கைப்பாசந் தாற்பிணிப்புண்
டேகுமுற நாயே னிறவாமை - லாதி
புரியார் புகழு மொருவனே கண்டங்
கரியாய் திருநீற்றுக் காப்பு. (௪)

எவ்வுலகு மோடி யிளைத்தெய்த்த யோனிதொறு
மவ்வுருவாய் நாயே னுழியாமை - லெவ்வ
மறுத்தா யடியா ரலைப்பவங்கண் மாளக்
கறுத்தாய் திருநீற்றுக் காப்பு. (௫)

திருநீற்றுக்காப்பு முற்றிற்று.

சிவமயம்.

# அநுபவரூபம்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

முத்தியைமேவ நாளிங்ஙன் முற்படமேவி மொய்
பத்தியைமேவ மேனிகொண்டு பத்தர்கள்சூழமேவ
தெத்தியெறேவி வாரியுண்டு மெற்றுதிபேறு மீசீ
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படிகாண லாவ

தத்தமறேவி காரமென்று ※ தற்குணராது விடுற
புத்தகமோதி மாறுகின்ற புத்தர்முன்றனை வாதிக
கத்தில் விழாத வாறுவந்து கைக்கொளு நாய னார்த
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படிகாண லாவ

பொத்திய வூன மாகிவந்த புற்புத மாகி நானெனு
சத்திய ஞான மானவின்ப தத்துவ மாகு வானெ
வித்தக வேட மேவிவந்த மெய்க்குரு நாய னார்தன
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படி காணலாவ

அத்தனை வேறி லாதெழுந் தத்தமி யாத சோதிசிற்
சத்தெனவேதமோதுதொந் தற்பொருடானிதாமெ
சித்தநல் வேட மாகிவந்து செப்பிய நாய னார்தனை
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படிகாணலாவ

சித்த விகார மாகிநின்று சிற்சட வேறு பாடுசெய்
பெத்தமும் விடு மாய்மயங்கு பித்தது நிரு மாறுச
சித்தென தாக மாகவொன்று செப்பிய தேசி கே
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படி காணலாவ

※ தன்னையுணராதென்பது = தற்குணராதென வேற்றுமை யுங்கிற்று.

வித்தகமாக வேபரந்து மெய்ப்பொருள்போலமேநினி
கத்தலை மேவு மூனையம்பு கட்டமூல் சோம சூரியர்
சித்தியமான ஞானினங்க சித்திரகாரி யார்தமை
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படிகாணலாவதே. ()

இத்தனையோர்வு ருகநெஞ்சி னிட்டிடை மாதர் பாலுழ
மத்தரின்விழுமா றுகண்டினைவுக்கெனை மாரில் சோதிமெ
த்துவமாகவேதகஞ்செய் சற்குருநாய ஞர்தமை [யத்
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படிகாணலாவதே. ()

முத்தனை மூல நாடிலொன்றை முற்படுமாதி மூலனைச்
சுத்தனைமேனிதானிதென்று காட்டவொறுத்த சாதியை
சித்தனை வெளிலாவனைந்த சிற்சுகலோக நாயினை [ச்
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படிகாணலாவதே. ()

ஒத்தசொல்வாத தாயலைந்த வுற்பவவேலை பாழ்பட
நித்தமெய்ஞ்ஞான மாமனைந்த நிற்குணதீர மேவிநற்
பத்தர்கள்பாடி யாடவந்த பதும (*விராச) பாதனை
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படிகாணலாவதே. ()

தொத்தறமாடுவிடுமைக்கர் சுற்றமொடாசைமாறிநற் [ற
பத்திமெய்ஞ்ஞானமேவுசிந்தை பற்றிவிடாதுமேவுமின்
வுத்தமசில சோடிம்வக்கெ ஞசியின்மேவு பாதனை
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படிகாணலாவதே. (௰)

அனுபவரூப முற்றிற்று.

---

* விராசம் — ஒளி.

சிவமயம்.

உசு-வது.

# சிவப்பிரகாசசுவாமிகள்

## பிரார்த்தனை.

கட்டளைக்கலித்துறை.

ஊனா யுயிரா யுணர்வா யுருகிக் கரைந்தொழியாத்
தேனாகி நின்றுதித் திக்கிடு வாய்சிவ னேசிறியே
னூனா ருரோமஞ் சிலிர்ப்பவொண் கண்ணீ ரருவி
வானா துருக வடியே னுளமென் றனுகுவதே. (க)

அணுவுக் கணுவா யகண்டமு மாயழி யாமுதலா
யுணர்வுக் குணர்வா யொழியாது நின்ற வுனை நினை
கணமுற்ற போது மமையாது கற்று வெனக்கதறி
பிணையற் றமுது திரிதர வென்றெனக்கெய் துவதே (உ)

துவந்துவ மாகி வருகின்ற பற்றுந் துடைத்தினிய
நவந்திகழ் பாத நினைந்துள் ளுருகிக் கோலமிட்டு
* கவந்தியுங்கையி லிடும்பலியுமன்றி யொன்றுமி
யுவந்தடியேனெய்த நீயருளாயெனக் குள்ளவனே (ங)

உள்ளவனேயொன்று மன்பரல்லார்கட்கொளித்து
கள்ளவனேயுன் கடைக்கண்படாதவர் போலடியே
னள்ளலிலேநின் றழுந்தாதவண்ண மடிக்கடிமைக்
கொள்ளவனேகுரவாகோதிலானந்தக் கொள்கையு (ச)

கொள்ளும்பொருளனைத் தும்மழித்துக்குறையாநிலை
யுள்ளும்புறம்பு மொழியாதுநின்றொளி ரும்முணர்
யெள்ளும்பலியும்புறந் திண்ணையு மன்றியொன்றுமி
வள்ளும்படியருளாய் மெய்யருள்ளத்துமெய்ப்பொரு (ரு)

* கவந்தி – கோவணம்.

மெய்ப்பொருளேமெய்யடியார்கள்வாரி முகந்துகொண்
கைப்பொருளேகலங்காவறிவேகலங்கும்மவர்க்குப் [ட
பொய்ப்பொருளேயென்றன்புந்தியில்வந்துபுகுந்துநின்ற
செப்பொருளேசிறியேனறியேனென்கொல்செய்வதுவே

செய்வதுசெய்யாச்செயலதுவாய்ச்சினமாசையென்று
மையல தின்றி மறையறி யாத வடிவமதா
யையம தேபண்ணி யார்க்கும் பரமன்றி யாருமின்றி
வையமெல்லாம்பித்த னாமனென்றேசவருவதென்றே

வருவதும்போவதுமாய்வருகின்றவழக்கறுத்துப் [னே
புரிவதுஞ்செய்தென்னை யாண்டுகொண் டாய்பரிபூரண
பரிவதுன்பாலன்றிப் பாவையர்மாட்டென்றன் பையுனெஞ்சந்
திரிதருகின்றதென் னேசிறியேன்செய்ததீவினையே (அ)

தீவினை யேன்சிறி யேனறி யேனென் றறிந்துகொண்டு
நீயெனையாண்டன்று கொண்டதெனின் றுமக்கியலையோ
நீவிடி லன்று பிடித்தவக் காடென தேயதன்றோ
நாயடி யேனறி யேனுடை யாய்நலந் தீமையுமே. (௯)

மேவிடு கின்ற பதிதனை மோடெவை யும்வெறுத்துப்
* பாவிடு நூலிற் பாங்கெழு கின்ற படைகட்புமின்றி
யோவிடு கின்ற கரணத்து னுயுள் விழித்துணையே
யாய்விடு கின்றிடு நாளடி யேற்கென் றருள்வதுவே. ௧௦

அருளது வேவடி வாகிப் புவியில்வந் தாண்டுகொண்டு
மருளது தீர மறவா நினையா வரமருளித்
தெருளது செய்த சிவப்பிர காசச் செழுங்கனியே
யருளது வேயுடை யாயறி யாயிந்த ஊனினையே. (௧௧)

பிரார்த்தனை முற்றிற்று.

---

* பாவிடுநூலியென்னும் பாடமுண்டு

சிவமயம்.

உரு - வது.

# சிவப்பிரகாசசுவாமிகள்.

## அருணெறிவிளக்கம்.

———)(*)(———

அறுசீர்க்கழிநெடிலடி யிரட்டை ஆசிரியவிருத்தம்.

ஆரிய னூர்திரு மேனியை யங்க னளைந்*திடு மாகா
யண்டமு மாயையு மங்கழி வாவறி வாயிடு மாகா
காரிய காரண மான வுபாதி கழிந்திடு மாகா
கற்பனை முற்று மிறந்த பெருங்க ளிகைப்படு மாகா
பாரியல் பாகிய பந்த வினங்கள் பறிந்திடு மாகா
பாதகனேனை யுயக்கொள் பரன்கழல் பாடுது மாகா
யேரியல்பாகிய வின்பவெள்ளம்பெரி தெய்திடுமாகா
யெந்தை சிவப்பிரகாசனருட்க ணெழிற்கடைபட்டிடி

அன்றெனவாமென நின்றெழு சங்கையழிந்திடுமாகா
யாசை யினங்க ளடங்க மடிந்தழி யாவிடு மாகா
சென்றுபரந்தெழு சிந்தைதிரிந்து தெளிந்திடுமாகா
தேவர்களும்மறையுந்தெளியாதமை திண்ணமதாகா
தூன்றிவரும்பொறி யும்பலனுந்துக ளாய்விடு மாகா
துன்பமுமின்பமு மாகுபலங்க டொலைந்தன மாகா
யென்று நிரந்தர வின்பமதிங்ஙன மெய்திடு மாகா
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடைபட்டிடி

தன்னழு காரடி யென்றலை மீது தழைப்பன வாகா
தானல தேது மலாதமை நெஞ்சு தரித்திடு மாகா
பொன்னணியாரடியிற்பொடியேயுடல் பூசுதுமாகா
பூசுர னூர்புர ணத்திரு மேனி பொலிந்திடு மாகா

---

* இடுதலுமென்பது — இடுமெனவிகாரமாயிற்று.

யுன்னியபின்னுணராமையொளித்தமையோர்வரிதாகாதே
யொன்றெனிலன்றி யொழிந்துகழன்றதொ ரொண்பொருளாகா
தே, யென்னையென்று ணுணர்கின்றதுதானு மிறந்ததி
தாகாதே, யெந்தைசிவப்பிரகாச னருட்கணெழிற்கடை
பட்டிடினே.

(௩)

கற்பனையானவை முற்றினினுஞ்செல் கருத்தருமாகாதே
கங்குல்கழிந்துணர் வாகியநண்பகல் கண்ணுறுமாகாதே
யற்பமகந்துண ராமையில்வந்துள வானவை யாகாதே
யங்கையிலாமல கக்கனிபோல்வதொ ரற்புத மாகாதே
பற்பலவாயெழு முற்றும்வெறும்பரி பூரண மாகாதே
பாவகமேது மிலாவுளமேவு பரம்பொரு ளாகாதே
யுற்பவமுற்று மொழித்தவருட்டிற *மோதுதுமாகாதே
யொப்பில்சிவப்பிரகாசனருட்கணினுட்கடைபட்டிடினே.

எல்லையிலூழி யெலாம்வருநாளென தேகிய தாகாதே
யென்பணியன்பருடன்கொளவெந்தையிசைந்திடுமாகாதே
கல்லைநெருங்கனி செய்தனையாரு கணக்கிது வாகாதே
காதன்மெய்யன்பர் கருத்துமிகக்களி கூர்தரு மாகாதே
யல்வி னுடன்பக லின்றி யருட்கட லாடுது மாகாதே
யண்ட மெலாமறி வாய்ந மகத்து ளடங்கிடு மாகாதே
சொல்லிறந்த சுகக்கனி வாய்மகிழ் தூங்கிடு மாகாதே
சோதிசிவப்பிரகாசன்விழிக்கடைதுண்ணெனவைத்திடினே

சம்புவி னன்பத மெங்கு நிறைந்து ததும்பிடு மாகாதே
தம்மையு ணர்தவர் தம்மு ணிறைந்தது தாமப லாகாதே
கம்ப மெழுந்து கரங்கள் குவிந்துக ணீர்தரு மாகாதே
காரண னடி யார்நடு வெய்தல்† கடைப்படு மாகாதே
யும்பருமிம்பருமின்றயரொண்பொருளுள்ளொளியாகாதே

---

* ஓதுவதுமென்பதும் † கடைப்படுதலுமென்பதும் – ஓதுது மெனவும் – கடைப்படுமெனவும் விகாரமாயிற்று.

யூழிதொறூழி யெலாம்வருமாயையொழிந்திடு மாக
யெம்பர மின்றி யிருந்தவிழின்னரு ளெய்திடு மாக
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடைபட்டிடி

கன்றிவருஞ்சமயங்கள்பொய்ம்மாயைசெய்கற்பிதமாக
கல்வியெ னும்மல லக்கலை க்கடல் கையறு மாக
நன்றிபு மன்றிபு மாமலை நாச மடைந்திடு மாக
நாமுமெய் யன்பர்த மக்கடிமைத் தொழி னண்ணுது மாக
வென்றுபகைத்திற மாயையும்வேரற வீசுது மாக
வேண்டிய வாவிலை யாடியு மூத்தி விளைந்திடு மாக
யின்றித மும்மல மும்மறி வாகி யிலங்கிடு மாக
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடை பட்டிடி

பாடிய நான்மறை யீறுவிரின்று பணைத்திடு மாகா
பாவக மேது மிலாவுள மேவு பரம்பொரு ளாகா
கூடிய சாதி குலங்கள் குணங்கள் குலைந்திடு மாகா
கோரணி யாகிய கோமுழு தின்குடி கேடிது வாகா
தேடிய தாமல தின்றி யிருந்து திகைப்புறு மாகா
தேவர்களுஞ்சக முந்தெளியாதமைதிண்ணம தாகா
யேடியல்செங்க மலப்பதமென்றலை யெய்துவதாகா
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடை பட்டிடி

புண்ணியபாவ வினைத்தளையும் பொடியாய்விடுமாகா
போகமெலாமினிமெய்யடியார்கள்புணர்ச்சியதாகா
பெண்ணலியாணவையன்றியிருந்துளபேரொழிலாகா
பேயனையேனையுமாளவிசைந்தபெருந்தன்மையாகா
விண்ணவர்தேடட்மேதினிமேல்வரும்விச்சையதாகா
மேவரும்வேதவிழுப்பொருள்வந்துவெளிப்படுமாகா
யெண்ணமெலாமடியாரடியேவிடலென்றெழுமாகா
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடைபட்டிடி

அருக்கருருத்திர ரிந்திரன்மாலய னுமவ ராகாதே
யலக்கணுறக்கொடி யேனையுமாட் லருட்கழ லாகாதே
திருக்குறினும்முறினுஞ்சிவமாய்விடல்திண்ணமதாகாதே
தேசிகனாருளின்பெருமைத்திற மாவதி தாகாதே
யுருக்கியுருக்கியுளத்தையழித்தமுதூறிடு மாகாதே
யோதறியேனுடையாய்முறையோவெனவோதுறுமாகாதே
யிருக்கைதனக்கியலிப்படியாகியிருக்கும தாகாதே
யெந்தைசிவப்பிரகாசனருட்கணெழிற்கடைபட்டிடினே

அருணெறிவிளக்க முற்றிற்று.

௳

சிவமயம்.

உகா-வது.

ஸ்வரூபானந்தசுவாமிகள்

# சிவப்பிரகாச சுவாமிகள் குயில்.

---

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

மேலையமரர்க்கு மேலாம் விண்ணவன் மண்ணிலிழிந்து
மாலையுங்காலையு மில்லா வகையென் றலைமிசைவைத்த
காலையருணற் கடந்த காலுடை யானையென் கண்ணைச்
சோலையில்வாழுங்குயிலே சுருபனை நீவரக்கூவாய். (க)

அச்சந்த மாலு மயனு மல்லா தவரு மறியா
ரிச்சந்த மென்றுமறையு மியம்புவ தொன்றெனவென்ற
னுச்சந்தலைமிசையேதன் னொண்மலர்ப்பாதங்கள்சூட்டி
யச்சந்தவிர்த்தெனை யாண்டவழகனை நீவரக்கூவாய். (உ)

முத்திக் கரசென்று தன்னை மூவாத மூவருந் தேட
வெத்திக்கடையேனையாண்டிங்கிர்த்தெனை யென்று
க்கிப், புத்திக்கும்வாக்குக்கு மென்னைம்புலன்களுக்
புலமாகித், திக்திக்குமின்னமிர் தத்தைச்சிவப்பிர
னைக்கூவாய்.

சாத்திரங் கற்றுப் பிதற்றித் தமையுண ராதவரோ
காத்திர மேவடி வாகிக் கழிந்து விடக்கட வேனைப்
பார்த்திரங் கிப்பழ வேதம் பன்னும் பரம பதத்தை
மாத்திரையொன்றின்வழங்கும்வள்ளலை நீவரக்கூவ

ஓதி யுணரப் படாத வொன்றென் றுபநிட மோது
மாதியு மந்தமு மில்லா வானந்த நாட னருளால்
வேதிய வேடம் புனைந்தென் விரகை யழித்த விரக
கோதிக் கனியுண் குயிலே குருபரனை வரக் கூவாய்.

மரித்தல் பிறத்த லிலாத மாசறு சோதியை நீயென்
றிருத்தலை மாற்றம தாக வுபநிடந் தோதி விடா
யிருந்திவீதிப்பரி சென்னவின்ப வெள்ளத்தெனையிட
நிருத்தனை யாவையு மான நிமலனை நீவரக் கூவாய்.

காலமு ஞாலமும் விண்ணுங் காலுங் கனலும் புன
மூலமு நேர்மையு மாகிச் சொல்லும் பொருண்முற்று மல்ல
கோலங்கொடுவந் தடியேன் குடிமுழு தாண்டகுழ
நீலநிறக் குயிற் பிள்ளாய் நிமலனை நீவரக் கூவாய் (

கந்த மலர்ப்பொழி றோறுங் கனியுண்டு வாழுங்குயிலே
தொந்தவினையறநோக்கித்துணையடியென்றலைவைத்
சந்தமிதுவென்னவொண்ணாத்தன்னையெனக்கருள்செய
பந்தமும் வீடு மிலாத பரஞ்சுடரை வரக்கூவாய். (

* சோத்த முனக்குக் குயிலே சுராதிபர் நின்று துவள
ஆத்தை யுடம்பள வாகி யூகாரி யாயழி வேற்கு
மோத்தின் முடிவுரைத்தற்கு முன்னவு மொன்றாத வொன்றை
வார்த்தையொன்றாலேயளிக்கும்வல்லபனைவரக்கூவாய்.

பொன்னலர்சோலைக்குயிலேபுக்கேளிர்பொன்னடிகூட
வின்னலங் கெய்த விம்மண்ணி லேழையேன் றன்னுள் புகுந்த
கன்னலைத் தேனை யமிர்தைக் கனியைப் பிறவிக்கடுவை
யென்னலங்கொண்டபிரானை யிறைவனைநீவரக்கூவாய்.

மூன்றான்மறையின் முடிவுமொழியு முழுமுதறன்னைத்
தன்னாக வென்னை யுவந்து தாளிணை யென்றலை தந்த
வென்றாயகனை யென்கண்ணை யென்னுயிர்க் கின்னமிர்தத்தைப்
பொன்றுன வாயாற் குயிலேபுண்ணியனை வரக்கூவாய்.

சுந்தர நீல நிறத்துச் சோலையில் வாழுங் குயிலே
யிந்திர சாலம தென்ன யாவையுங் காட்டி மறைப்பா
னந்தர நாடுபுல் லென்ன வவனியில் மானிட னாகி
யெந்தர யாள விசைந்த வின்னமிர் தைவரக் கூவாய்.()

தன்றுடைச்சோதியிற்றுஞ்சல்பிறப்பறவிந்தச்சகத்தே
மின்னிடையாளொடுங் கூடிமேவிய வேடத்தின் வந்து
பொன்னடிகூட்டியென் றுள்ளேபூரணவானந்தமாக்கி
யென்னிடர் தீர்த்தபிரானை யிளங்குயிலே வரக்கூவாய்.

குயில் - முற்றிற்று.

---

* சோத்தம் - அஞ்சலியத்தனம்.

உ

சிவமயம்.

௨௭ - வது,

# அன்னைப் பத்து.

கலிவிருத்தம்.

தனியி லிருத்தித் தமைத்தந்த நாதா
ரினிய படியென்று னன்னே யென்னு
மினியவர்க் கொப்பது மின்னமிர் தாம்பால்
கனியுள தன்றுகா ணன்னே யென்னும்.

அச்ச மறுத்திங் கடிதலை வைத்தவர்
நிச்சம் புதியர்கா ணன்னே யென்னு
நிச்சம் புதிய நிமல னருளினை
யிச்சந்த மென்னவோ வன்னே யென்னும்.

தோற்றுவ தெல்லாஞ் சுரூபமாய்த் தோற்றவோர்
மாற்ற மருளினா ரன்னே யென்னு
மாற்ற மருளிய வல்லபங் கண்டெனக்
காற்றவொண் ணாதுகா ணன்னே யென்னும்.

நாரா யணனய னாடரி தானவர்
வாராது வந்தார்கா ணன்னே யென்னும்
வாராது வந்தென்னை வாழ்வித்த நாயனார்
சீரா ரருளென்னே யன்னே யென்னும்.

விண்ணாதி தோன்று விழியளித் தாண்டது
மெண்ணா திருவென்று ரன்னே யென்னு
மெண்ணா திருந்த வியல்பை யிதுவென்ன
வொண்ணா துரைக்கவு மன்னே யென்னும்.

ஏகமாய் நின்றானை யிங்கிரண் டென்பவர்
மோக மணைவர்கா ணன்னே யென்று
மோக மணைவரொன் றெங்கண் முதல்வனு
ராகமஞ் சொன்னார்கா ணன்னே யென்னும். (௬)

தற்பதந் தொம்பதந் தாமாய வப்பத
மிப்பத மானவ ரன்னே யென்று
மிப்பத மாய வியல்பை யிதுவென்று
செப்ப முடியுமோ வன்னே யென்னும். (எ)

ஊனு டுயிரா யுணர்வா யறிவேனைத்
தானாக வாண்டவா றன்னே யென்னுந்
தானாக வாண்ட தகைமை நினைதொறு
மானு துருகுமா லன்னே யென்னும். (அ)

இரண்டடியாயீற்றடிமிக்குவந்த

கலித்தாழிசை.

வேண்டிய வாவிளை யாடட வீடளித்
தாண்ட வருளன்னே யன்னே யென்று
மாதி யருளன்னே யன்னே யென்னும். (௯)

செய்யாமை யுஞ்செய லும்மறுந் தாண்டவா
வையா வதிசய மன்னே யென்று
மழியா வதிசய மன்னே யென்னும். (௧0)

அன்னைப்பத்து முற்றிற்று.

---

உ

சிவமயம்.

உஅ-வது.

ஸ்வரூபானந்த சுவாமிகள்

# சிவப்பிரகாச சுவாமிகள்

அடியவர்திறத்து நிந்தாஸ்துதி.

...................

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

காயமா ளிகைய துண்டு மூவர்கா தலிக ளுண்டு
வாயல்காப் பறிவு முண்டு வளம்படு சமதை மாதி
யாயநற் சுற்ற முண்டங் கடக்கரும் பொருளு முண்
தூயநற் சுரூபா னந்தன் றொண்டர்க டுறந்த தென்

அன்பர்பா லார்வ முண்டங் கரும்பவச் செற்ற மு
வன்பதார்விஷயந் தன்மேன்மாறிடாக் குரோத மு
முன்புறப் பக்க மேல்கீழ் முழுதுமா கிதியு முண்டு
துன்பமில்சுரூபா னந்தன்றொண்டர்கடுறந்ததென்

ஒன்றொடுங் கலந்தி ராத வுறவின்மை பெரிது மு
பொன்றினு மசைவு றாத மூரண்வலி புகலி லுண்டு
கன்றிடும்வயிரி யோடுங் கலக்கமி லன்புண் டென்
துன்றருட்சுரூபா னந்தன்றொண்டர்கடுறந்ததென்

கல்லுறுசிந்தையெல்லாங் கரைக்கும்வல் லபமு முண்
வல்லவர்க் கொருகாலத்து மிரங்கிடா மறமு முண்ட
கெல்லையற் றிடுமிரக்க மிறையொடு மிகவுண் டென்
றொல்லைநற்சிவப்பிரகாசன்றொண்டர்கடுறந்ததென்

முன்பினு மலைவு தீர மொழிதரு விரக துண்டு
நன்கொடு தீங்கு காணு ஞானமாஞ் செருக்கு முண்

வன்புறு துன்பம் வந்தான் மயக்கமில் களிப்ப துண்டு
துன்பமில்சுகருபானந்தன் றொண்டர்கடுறந்ததென்னே.

கோத்தவைகுலைத்துமேலாங்குணமின்மைபெரிதுமுண்டு
பார்த்தவாருயிர்கண்ணுறலே வாங்குபண்பின்மையுண்டங்
கேத்துறுமறைகட்கே யெளிவருமியல்புண் டென்று
லாத்தனன் சுகருபா னந்த னென்பர்க டுறந்த தென்னே.

உலகியல் புருவு ணர்ந்த வுன்மத்த மிகவு முண்டு
தலைவனை தருளா தன்றித் தணிப்பரும் பித்து முண்டு
மலைவுறு பருதி போந்து வாதனை மாண்ட துண்டு
நிலையுடைச் சுகருபா னந்த னேசர்க டுறந்த தென்னே.

தள்ளிறு மிறைவ னன்பர் தமைவிடாப் பாச முண்டு
நள்ளிறு மிதரர் தம்மை நணுகிடாத் துவேஷ முண்டு
துள்ளுறும்வன்னெஞ்சவஞ்சர்க்கருளிடாச்சோர முண்டாற்
றெள்ளுநற் சுகருபா னந்தன் சித்தர்க டுறந்த தென்னே.

* எத்தினர்க்கருத்தேசெய்தங் கெளிவருமிச்சையுண்டு
தோத்திரச் சூழலுற்றுச் சுழலும்வன் பற்று முண்டு
சாத்திரப்பேய்களுக்குச்சலனஞ்செய்தவமுண் டென்றுந்
நித்தனற் சுகருபா னந்தன் சித்தர்க டுறந்த தென்னே.( )

கரையில்பே ரின்பத் தாராக் காமுகர் விஷய போக
முரையறு பொருடமுள்ளே யொளித்தப்பே ரணிமுலோபர்
முரிவில் பேரின்பத் தீசன் வயமுயிர் காணுமோகர்
விரையுமெம் மகமுந் தாமா நிமலர்க டுறந்த தென்னே.

வரும்பவத் தாருச் சீற்ற மாற்சரி யத்தர் தன்னைத்
தருங்குரு பானுளன்றித் தாழ்ந்திடாத் தெம்பர்தீரா
வரும்பவ நாச னெங்கட் குண்டெனு மகங்காரத்தர்
பரம்புமா யாவை சூன்ய பண்பினர் துறந்த தென்னே.

---

* எத்தினர்க்கருத்தென விசைநோக்கியிருந்தது.

நிலவருட் பொறையர் நேதிநேதியே நிருபகத்தாற்
குலவுறுநற்சந் தோஷர் குருபரன் முழுது மென்ன
சொலிதைையுற்றிடும்விவேகர் தோய்வெதிரிக்த்தசா
தொலைவில்சித்தவிரோதத்தர் தூயவர் துறந்ததென்(

உற்றவா ரோபி தங்க ளொழிந்தவா றுதரு மாமான்
முற்றுமாய் மொழியிறந்து முடிந்தமோ னத்தராம
பற்றுவீ டின்றி நின்ற பராமிர்தா னந்தர் தாமாற்
றுற்றசீர்ச்சுரூபானந்தன் றொண்டர்கடுறந்ததென்(

சுட்டியவெவையுந்தாமாய்த்துறக்கவேறென்றின்று
விட்டதும் விடாதுமன்றி வேதமோர்நான்கும் பே
பட்டிடு மளவு மல்லாப் பரம்பரன் சுரூபா னந்தன்
சிட்டர்கடுறந்தாரொன்னும் வார்த்தையுஞ்சிறப்பதன்

அடியவர்திறத்து நிந்தாஸ்துதி முற்றிற்று.

உ

சிவமயம்.

உகூ-வது,

## நெஞ்சிற்கமைவுரை.

---

நேரிசைவெண்பா.

உப்பகன்ற நீர்க்கூழு முண்டாற் பசிகெடுமா
லப்பதுண்டு கூவல்குள மாறதனி - லிப்படியைப்
பார்த்தமையாய் நெஞ்சே பரந்தெழுந்து சென்றாலு
பேர்த்துளதின் மேல்வருமோ பேறு. (

பல்காய நற்கறியும் பானெய்பழத் தோடடிசில்
செல்வாய தேசஞ் செறிந்தாலு - மெல்லவுணை

பூட்டாவூ றாண்டே யுறுபிணிமற் றியாதொன்றால்
விட்டாதோ நெஞ்சே விரைந்து. (௨)

நல்ல வறுசுவைதா னாக்கினுனி மாத்திரமே
யெல்லை யிருவிரலே யல்லதிலை - மெல்ல
விருவிரலைத் தான்கடக்க மாட்டாதே நெஞ்சே
பொருகடலைத் தான்கடப்பாய் போய். (௩)

ஆடை யழுகினைநன் காதரித்தே யாங்கதற்கென்
றோடி யுழுபொருளுக் குற்றுழன்றாய் - கூடியதேல்
வண்ணா னொலிமருவார் வைப்பிடமற் றின்னவற்றா
லெண்ணாயோ நெஞ்சே யிடர். (௪)

கங்கையொடு வெண்ணீறு கன்றாழைபாழ்க்கோயில்பல
றாந்தையுள சீத றாறுமென்னில் - வெந்துயரக்
கோடையினிற் கோவணமுங் கூடமிசை யித்தனைகா
னாடையினிற் காரியந்தா னாங்கு. (௫)

நீயா யமையாய் நினைந்தோடிக் கிட்டாமை
யேயா வமைந்தா யிடர்நெஞ்சே - சாயோ
கடையானார் காய்பசிக்கே கால்குலைவர் கற்றோ
ரடையாரோ வாங்கமைவின் பால். (௬)

அமையாதே பெற்றதனா லாங்காங்கு நன்றென்
றிமையா தெழுந்தோடு கின்றாய் - சமையாச்
சிறுமைக்கு வித்ததுவாந் தேறாய் மனனே
மறுமைக்கு மஃதே மறைப்பு. (௭)

ஆற்றாங் கரைப்பசுந்தா னக்கரையோ டிக்கரையாய்த்
தோற்றும் * பசப்பைத் தொடர்வுறுமே - யாற்ற

---

* பசப்பு — பசுமை.

வதுவேபோ னெஞ்சே யலைந்தலைப்பட் டோடு
மிதுவே யுனக்கிதனுற் பேறு. ( )

இருந்தவிடத் தேதும்வரக் கண்டிருப்ப தன்றே
பெருந்தகைமைக் காபரணம் பேதாய் - மருந்தென
யாங்கினியார் தங்கடையிற் சென்றிடினு மாதரியா
பாங்கிதுகாண் பாழ்நெஞ்சே பார். (

உணர்ந்தார்க் குடம்பு மிகையென் றுலக
முணர்ந்தா ருணர்ந்தே யுரைத்தா - ரிணைந்தாம்
பொருண்முழுதும் விட்டாலும் பொய்யுடம்பிற்கா
மருளதுவா நெஞ்சே மறித்து. (

இல்லாத தில்லை யுளதுதவி ராதென்று
நல்லார் துணிபொருளை நாடுங்கா - லெல்லா
மமைந்தபடி யேவருமா லாங்கசைவெ னெஞ்சே
சமைந்தபொரு டாமறிவார் தாம். (க

இங்கேதன் னுனுயிரை யேதமறக் கண்டவிடத்
தங்கே யெலாமமைய லாயிருக்க - வெங்கேனுங்
காடு மலையுங் கடந்துடம்புக் காய்வருந்தி
யோடுவதெ னெஞ்சே யுரை. (கஉ

அமைதற் குபாய மறிந்திடநீ வேண்டிற்
கமையுற்ற ஞானக் கரும்பைத் - தமையுற்ற
வாரியர்பாற் பெற்றங் கவரடிக்கே யேவலினை
யோரியல்பாற் செய்நெஞ்சே யுற்று. (கந

நீடுந் தலைகீழ்கான் மேலாகி நின்றாலுங்
கூடும்படி யொழியக் கூடாதா - லோடி

வருந்தாம லுள்ளபடி வந்திடக்கண் டாறி
* யிருந்தாலோ நெஞ்சே யினிது. (௧௪)

நல்லோரை மேவி நலங்கிடக்க வங்குள்ள
பொல்லாங்கு கொண்டாடிப் போகாதே - யெல்லா
மருளியவா செய்தங் கலதொழிநீ நெஞ்சே
பொருளியல்வே றில்லையினிப் போற்று. (௧௫)

வைதலும் வாழ்த்துதலும் வார்த்தையினிற் கற்பித்து
கையுமது நெஞ்சே நலமன்று - மெய்யும்
புரையிடத்து வாயுப் புரைக்குமொலி யென்றே
யுரையிடத்துக் கோளொழிநீ யுற்று. (௧௬)

ஒன்பதுவா யாலு மலஞ்சொரிய யாக்கைகமழ்
புன்புலையாங் குற்றப் புலாலுடம்பை - யன்புடனே
யேத்துவார் வைவா ரிழிவுரைப்பா ரல்லாதா
ராத்தமா மெய்யுணர்வார்க் காங்கு. (௧௭)

வாயுவன னீர்பிணிதான் மற்றும் பலபலவா
வாயசட வேதுவினு லாம்பயனுக் - கேயவொரு
செற்றநலங் கொண்டிலையேற் சேதனவே துத்தனாய்
மற்றவனை நெஞ்சே மதி. (௧௮)

ஆர்வமொடு செற்றத்தை யாரிடத்துங் கொள்ளாதே
சாரமுள தெவ்விடத்துந் தான்கொண்டு - சீரவுணர்
நல்லோர்தஞ் சொல்லை நழுவாமை நீகொண்டு
நில்லா யிதுவே நெறி. (௧௯)

பெற்றதுவே கொண்டமைந்து பேரிறவிற்கொல்காதே
குற்றநல மென்கோள் குறுகாதே - மற்றும்

---

* இருந்தாலன்றேவென்பது - இருந்தாலோவெனமருவிற்று.

பயனின் மொழியாதே பார்த்துளமே நல்லோர்
நயமுமற வாதே நட. .0)

பொய்க்கனவும்பேய்த்தேரும் போலுமுடல்போய
சிக்கெனவே நாதன் றிருவடியை - நெக்குருகிப்
பூண்டுவிடா தேகிடந்து போற்றியிடு நெஞ்சேநீ
மீண்டுபிற வாதே விட. .க)

ஆண்ட வியல்லை நினைந்து நினைந்துருகி
வேண்டிமிக மெய்யன்பை மேன்மேலு - மாண்ட
வடியிணையே பூண்டமைவா மாரமிர்தை நெஞ்சே
யொடிவறவே நீயுண் டிரு. உ)

நெஞ்சிற்கமைவுரை முற்றிற்று.

உ

சி வ ம ய ம்.

ந0-வது.

# சிவப்பிரகாசசுவாமிகள்

## திருச்சாழல்.

---

நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

இறையுணர்த்துமளவினிலெக்காலமுமெய்யுணர்வா
கறையுடல மளவெனமுன் கலங்குவதங் கென்டே
னிறையவனல்லிறகிருக்கநிகழ்மதனமில்லாக்காற் [
சிறுகறையானரித்துணல்போற் றிகழ்ந்திடுங்காண்

அருமறையா கமமனந்த முகங்களினு லுணர்ந்தா
மரியபரம்பொருளினையிங் கறியவொண்ணாதென்

யருமறையாகமமறைந்தென் னரியனுயெழுந்தருளித்
திருவடியை யருளிலல்லாற் றெரியாகாண்சாழலோ (௨)

மாத்திரையிலொருமொழியான்மாமுனிபீட்டுணர்த்திடமேற்
சாத்திரநூற் பார்ப்பதனாற் றருபயனென்சாற்றேடி
சாத்திரத்தாற்றற்பரத்தைத்தானிதெனவறியவொண்ணு
வார்த்தைபிறகலகலென வடித்திடலாஞ் சாழலோ. ( )

எங்குமொழி வறநிறைந்த வெல்லையிலாப் பேரின்ப
மிங்கொருமானிடனுகி யெழுந்தருள்வ தென்னேடி
சங்கைகெடமான்கொடுமான்பிடித்தாற்பொற்றுனுடம்
நங்களுடம்பழிப்பதற்குநடந்ததுகாண்சாழலோ. [பாய்

ஒப்பரியாறெண்மலர்த்தா ளளித்தலுமே யுலகுயிர்மற்
றெப்பொருளுங்கண்டதிலை யென்செய்தவாறியம்பேடி
யெப்பொருளு மாய்நின்ற இணையடியே யாதலினுன்
மெய்ப்படவேகண்டவர்க்குவேறிலைகாண்சாழலோ (௫)

உடம்பதிலா னுடம்பாகி யுடம்பழித்துத் தானுக்கத்
திடம்படவேமொழியுமதங் கென்பெறத்தான்செப்பேடி
யிடம்படவே மறுபயனங் கில்லாத பயன்மறைபோ
லடங்கவழியாப்பொருளா வருளினன்காண் சாழலோ.

இப்படிவேறற விறைவன் யாவையுந்தா னயிருக்க
மெய்ப்படவேசமயங்கள் பிணங்குவதென் னிளம்பேடி
செப்பிடவே இயிரமுறு நயனத்தோர் மதிபலவா
மப்படியே யறுசமய மலந்திடுங்காண் சாழலோ. (எ)

இருந்தபடி சிவமாகி யிருந்ததனை யெமக்களித்த
பெருந்தவற்குக் கைமாறு தானுண்டோ பேசேடி
யருந்தவற்குக் கைமாறென் றிலையருளை நினைந்ததனு
லெரிந்தவழன் மெழுகெனவென் புருகிடல்காண்சாழலோ.

---

சாழல் — ஓர்விளையாட்டு.

வானோரு மண்ணோரு மறையுமறு சமயமுமங்
கேனோரு மலமாக்க வெமக்களித்த தென்னோடி
யேனோரு மலமாக்க வெமக்களித்த தெம்பெருமா
மானாய சுதந்தரமே மற்றிலைகாண் சாழலோ.

செய்யசிவப் பிரகாசர் சிறியோமை யாண்டருளி
யையமற நங்குலமுன் னாட்கொண்டான் காணோடி
யையனருட்டிறநினையேனழிந்துவிழுந்தெழுந்தல
மெய்முழுதும்விதிர்விதிரேன்வினையேனான்சாழலே

திருச்சாழல் - முற்றிற்று.

உ

சிவமயம்.

௩௧ - வது.

# பழித்துரைமாலை.

---

அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

விரித்தகண்ணிற்றிரித்தகண்ணில் விழித்தகண்ணி
மிகுத்துருவினின்றேயும்விளம்பவொண்ணாவீசன்
றரித்துவந்த திருமேனி தன்னையெனக் களித்துந்
தானேதா னாக்கவந்த தன்மைவேடங் கிடிகொள்.

உரைத்தபொருள்யாவையிலும்புரைத்தலின்றிநின்
புரைபுணர்வா லுரையொண்ணா வொளிமிகுத்த
வரைத்துவந்ததிருமேனிமண்ணின்மயக்கறுத்து
மலர்க்கழல்கள்சூட்டவென்றேவந்தவேடங்கிடிகெ

தோன்றிநின்றபொருள்களெல்லாந்தொட்டுநின்றே
தோன்றுமைதோன்றிநின்றதொன்றலொடுவந்து

னூன்றிநின்ற வுணர்வுதன்னை யுணர்வாணி லிருத்தி
யுள்ளநிறங் கொள்ளவந்தகள்ளவேடங்கிடிகொள். (௫)

நிகழ்ந்துநின்றபொருள்களெல்லாஞ்செருமி நின்றேயா
தெரிவரிய பெரியபிரான் நீர்ந்துவந்த கோல [வுங்
நிகழ்ந்துவந்து முகந்தரித்து நிகழ்வுகெட மூழுத்தி
நிகழ்வாணி னிறங்கவர நிகழ்ந்தவேடங் 0கிடிகொள். (௬)

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

உருத்தவவ்வ விடந்தோறு மொப்பிலாப்பெருங்
கண்ணே யுதய மாக்கிக்
கருத்தற்ற விடந்தோறுங் காண்பானு
யெனையங்கே கரந்தா னென்னே. (௫)

கெட்டவவ்வ விடந்தோறுங் கேடில்லாப்
பெருங்கண்ணே கெழுமு வித்துப்
பட்டவென் றுயர்நீரப் பழையதன்
னிலையிலே பதித்தா னென்னே. (௬)

வேறு.

உன்னரிய தன்மமே யென்னுயிரை யொடுக்கி
யொழியாமை யெவ்விடத்து மழியாமை காட்டித்
தன்னடியே னுமாறு பின்னையெனக் களித்த
தத்துவனுர் தங்கருணை சாற்றலா மளவோ. (எ)

பழித்துரைமாலை முற்றிற்று.

---

0 கிடிகொளென்பது - பழிப்புரை - இசைச்சொல்.

சிவமயம்.

௬௨ - வது.

# தோழிக்குரைத்தல்.

———(*)———

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மூத்தே வருந்தேடு மூலப் பொருடன்னை மொய்
லாயேடி கேளாய், பித்தா மூபாதிப் பெருந்துயர்ப்
வப் பிறவிப் பிணிக்கோர் மருந்தா, மத்தாடு மைப்
ன் றன்னின் வழிமாறி மனவுரை மாண்ட வருளே
தா யொளிருஞ் சிவப்பிர காசர் திருவடித் தாமரை
ணே.

சொல்லிய ஞானிக் கினிப்பிறப் பில்லாமை தூ
யாயேடி கேளாய், நெல்லு முதலாம் விதைகளை
யில் வறுத்தான் முளையாதாற் போல, வல்லும் ப
மறவே சுட்டரு மறிவாம் வடவை யெரியில், வெல்
ரும்பவ வித்தா மவிச்சையும் வேவலான் மென்
யாவே.

தூய்யமெய்ஞ் ஞானிக் கிருவினை கூடாமை கோதை
லாயேடி கேளாய், பொய்ய வுடற்செயல் புத்துடம்
தலாற் போந்த வவிச்சையற் றுத்தான், பொய்
ஞானி லறிவுக்கு முன்புள்ள விச்சையோ டேவெ
மான், மெய்ய வறிவால் விளங்கலான் மேல்வினை
வாது வெந்தறுந் தானே.

கோதற்ற ஞானி யிருந்திடுந் தன்மையைக் கொ
நல் லாயேடி கேளாய், வாதற்ற வாமறை முற்று
ரங்களால் வந்தது வாழ்த்திடின் றேத்தி, யோதற் க
வுணர்வின்ப மேயா யொருகற் பனைகளு மின்றி, யா
கு மங்கந் கதுவாகி யன்பர்க் கறிவா யிருந்திடுந் தா

மெய்ஞ்ஞானி கட்கு விரதங்கள் கூடாமை மெல்லிய லாயேடி கேளா, யஞ்ஞான மாயையைச் சுட்டுக்கொ டல்ல தறிவுதி யாது தித்த, விஞ்ஞான மாயையி னுல தன் காரியத் தாகும் விரத மயருன், மெய்ஞ்ஞான மாகி விளங்கலான் மேல்வினை மேவலொன்றுனு மேவாதே.

உரைமன மாண்டுள்ள வொண்கழ லான்றன்னை யொ ப்பிலா தாயேடி கேளாய், புரைநன வோடு கனவு சுழு த்தி புகலுந் துரியமுன் ருக, வரைமுழு துங்கழன் றே பரத் தோடுயிர் வையமுங் கண்ணில் விழுங்கிக், கரை யிறந்தின்பக் கடலாயிருந்திடுங் கண்ணேகண் ணுயிடல் காணே.

(கூ)

தோழிக்குரைத்தல் - முற்றிற்று.

உ

சிவமயம்.

௬௬ - வது.

## அருகியுரைத்தல்.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த

குறள்வெண்செந்துறை.

இந்த வுடலம் விடுவதன் முன்வினைத் திப்பவந் திரவி டில், வந்துவந் துடல நூதிப் பிறந்தெய்த்து மாண்டே விடுவர் கிடீர்.

(க)

சாதல் பிறத்த லெனுங்கேடு தானறத் தம்மை யுணரா விடிற், போதல் வருதலாற் பொன்னூரை லாட்டோரு காலத்தும் போகா கிடீர்.

(உ)

உம்மை யுணர்ந்து பவச்சுடு காட்டையொப் போ
கழலா விடி, லிம்மை மறுமையிலேப்பிடித் தும்மை
ல்லாம் படுத்துங் 0 கிடீர். (

ஊனே வடிவென்றல் விட்டுத்தன் னுண்மையை யுள்
வா காணு விடின், மானு மழுவுமாய் வந்தாலும் வ
வ மாளா திருக்குங் கிடீர். (

இப் * பிறப் பில்லே தமையுணர்ந் தெல்லாப் பிற
மொழியா விடிற், றப்பி யுடல்கொண்டு கொண்டு
ங்கையுங் காலுமாய் நிற்பர் கிடீர். (

ஆறி யறிவே வடிவென் றிருந்தல்ல லெல்லாங் கழி
விடிற், கூறைகொண் டேமாவை யும்மையூ ணாக்கித்
ற் பாவைக்கூத் தாட்டுங் கிடீர். (

மேலா லறிவோ மெனுதே விணாந்தும்மை மெய்கண்
கொள்ளாவிடிற், கோலா கலஞ்செய்து வந்தும்மை
சா பசாசங் குமைக்குங்கிடீர். (

பந்தசங் கற்பனே யிற்றலே வைத்துப் படாநெலாம்
டிடாதே, யெந்தை கழல்சூடி லெங்கெழி லென்ன
றென்றிருக் கல்லாங்கிடீர். (

நாடிக்குரவன் கழற்றலே வைத்துண ராதானே நானெ
றிடிற், கூடிப் பெருஞ்சுற்ற † மத்தின் றலேயிலே கொ
ளியை வைக்குங்கிடீர். (

---

* பிறப்பிலேயென்பது - பிறப்பிலேயென விரித்தல்விகார
யிற்று.

0 கிடீரென்பது - பழிப்பிடைச்சொல்-தேசிகம்,

† அதின்றலேயென்பது - அத்தின்றலேயென விரித்தல் விகா
மாயிற்று.

மெய்யே யுரைத்த வுறுதிசொற் கொள்ளார் விலங்கு வே தாளமொப்பார, ரையோ பவங்கடந் தேறலோர் காலத்து மாணையே யில்லையில்லை. (கO)

அறுதியுரைத்தல் முற்றிற்று.

௩௪ - வது.

## அருமையுரைத்தல்.

---

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

நான்மறை யோதிப் பொருளுரைத்து நாடறி யக்கல்வி சாற்றினாலும், தானது வாகை யரிதுகாணுஞ் சலிப்பற நிற்கை யரிதுகாணும். (க)

இணங்காமை யெல்லா மறத்துறந்தே யிருட்டற வேதாந்த மோதினாலும், பிணங்கா திருக்கை யரிதுகாணும் பேரின்ப மாகையரிது காணும். (உ)

எல்லை யிலாகம மேறவோதி யேதுக்களெல்லா மியம்பினாலு, மல்லலறுக்கை யரிதுகாணு மறிவாயிருக்கை யரிதுகாணும். (௩)

சைனசந்நியாசம்.

பற்றற விட்டுத் தலைபறித்துப் பாணியைப் பண்ணிப் பயின்றக்காலு, முற்ற நிலைநிற்கை யரிதுகாணு முடிய நிலைநிற்கை யரிதுகாணும். (௪)

ஆறுசமயப் பொருளுங் கற்றே யங்குள்ள தர்க்கங்கள் சாற்றினாலு, மாறியிருக்கை யரிதுகாணு மதுவிது வாகை யரிதுகாணும். (௫)

வேறு பிறிதிலா மெய்மைதன்னை வித்தாரமாக வி
பினுலு, மாறியிருக்கை யரிதுகாணு மவிரோத மா
யரிதுகாணும். ( )

தேறி யுலக மனைத்தினையுஞ் சிற்பர மாகநாஞ் செ
னுலு, மாறி யிருக்கை யரிதுகாணு மவிரோத மா
யரிதுகாணும். ( )

அருமையுரைத்தல் முற்றிற்று.

௩௫ - வது.

## வளவியுடன்படுத்தல்.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த

குறள்வெண்செந்துறை.

இமைத்து விழிப்பதற் கில்லைவாணு ளிதிலுள்ள து
பங்க ளெண்ணில்கோடி, யமைத்துனைப் பார்த்தல் எ
றுநெஞ்சே யாண்டவ னென்றென் றாற்ற* வாரீர்.(

மின்னிலு நொய்திவ் வுடம்பின்றன்மை மேன்மேலு
வந்திடும் வேதனைக, ளன்னதே யிவ்வுடம் பாவதா
லாய்வானை யெப்போது மாயவாரீர். (

இல்லாது வேண்டினும் வந்திசையா வுள்ளது தள்ளி
மூட்டுமாறு, லெல்லாம் வரக்கண்டோ ரிச்சையின்
யிருந்த படியே யிருக்கவாரீர். (

என்றனைக் கேளிஃ தொன்றுநெஞ்சே யேதேனுஞ் செ
ய்தினி யுள்ளகாலந், தன்றுக னாயோமை யாண்டுகொ
ண்ட தாள்களை போவாது சாற்றவாரீர். (

* வாரீரென்பது - நெஞ்சையுயர்த்திக்கூறல்.

பொன்று முடம்பு பொருந்துமின்பம் புன்னுனை நீரா கும் புன்மை நெஞ்சே, யென்றபி னெல்லாம் வீழவிட் டே யிருந்த படியே யிருக்கவாரீர். (ரு)

ஒன்றெனி லாயிர கோடி துன்ப மோய்வின்றி யேவரு மோரினெஞ்சே, யொன்றுமற் றுள்ளநா மாயிருந்தே யுளநாள்கழிக்க வொருப்படீரோ. (சா)

வளவியுடன்படுத்தல் முற்றிற்று.

ருசா - வது.

## மனோரதம்.

---

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

முகுந்தனு நாலு முகனுங்கேட மூலமொருகுரு மூர்த் தியாகிப், புகுந்தடி யார்தொழ வீற்றிருக்கும் பூங்கோயி லாகநான் பெற்றிலேனே. (க)

மறைகளு லென்று மறிவரிய மலரடி கண்டுநான் வா ழும்வண்ணம், மிறைவனூர் தன்றிருக் கோயிறன்னி லே தேனு மொன்றாகப் பெற்றிலேனே. (உ)

பாசங்கள் வேரைப் பறிக்கும்வண்ணம் பபேக்கென்று பேரிட்டுப் பையப்பையத், தேசிக னூர்கா மெழுந்தரு ளுந் திருவீதி யாகநான் பெற்றிலேனே. (ங)

உள்ளுறு நோய்கண மொன்றின்மாற்று மொப்பிலா னந்தனை யுள்ளுதோறு, மள்ளுறு பிங்கையார் கண்வெ சா ரியு மானந்தக் கண்ணீர்நா னுக்கிலேனே. (ச)

பாமாலை கொண்டு தனையருளப் பாவியேன் கண்காணப் பாரில்வந்த, சீமான் புகழ்கேட்க வாகமெங்குஞ் செவி யாய்த் திகழ்ந்திடப் பெற்றிலேனே. (ரு)

அச்சந் தவிர்த்தென்னை யாண்டுகொண்ட வருளோ
தொறு மன்புகூர, வுச்சி தொடங்கி யடியளவு மு
யிருக்கநான் பெற்றிலேனே.

கருவேலை யுள்விழுந் தாழுமென்னைக் கண்டஞ்ச
றுவந் தாண்டுகொண்ட, வருண்மேனி காண வ
கோடி யாகத்திற கண்ணாகப் பெற்றிலேனே.

அவமே பிறந்திறந் தாழுமென்னை யாழாம லஞ்ச
ருண்டுகொண்ட, தவராசனைப்பா டடமயிர்க்கா ரு
லலாம் வாயாகப் பெற்றிலேனே.

போதந் திரண்டருண் மேனியாகிப் புலையேனை யா
புவியில்வந்த, பாத மணமுண்டு வாழநாசி பதினா
கோடி பெற்றிலேனே.

கழலிணை யாவருங் காணவந்த காரணனார் நாமெ
தருளும், பழவடி யார்திரு வாசகமும் படியாய்
டக்கநான் பெற்றிலேனே.

மனோரத முற்றிற்று.

உ

சிவமயம்.

௬௭ - வது,

## ஸ்வரூபானந்தசுவாமிகள்

### ஏவலுக்கிசையாக் கரணத்திகழ்ச்சி.

---*---

அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த இரட்டைக்
குறள்வெண்செந்துறை.

ஓவாதே பிறந்திறந் தழிகரு மென்னை
யோகோவென் றருள்செய்யு மொளியாருஞ் சுருப

றேவாநற் றிருமேனி இளையாத கண்க
ளைவையெல்லாங் கண்ணல்ல செந்நீர்பாய் புண்ணே. ()

தடையில்லைத் திருவாசல் சகலமுஞ் சுரக்குந்
தன்னையே தரவல்ல தலைவள்ளல் சுரூப
னெடிவரக் கொடிகட்டி யிருக்கவு முயிர்க
ளோடிவந் தடையாத வுணர்வின்மை யென்னே (உ)

கல்லாத முழுமூடரையுங் கற்பித்தோர் மொழியாற்
கடையோமைப் பொருளாகக்கடைக்கண்வைத்தளித்த
வல்லாளன் சுரூபன்சீர் நினையாத மனந்தான்
வன்பாறையிரும்பன்று வலிதிது வலிதே. (ங)

ஏவலுக்கிசையாக் கரணத்திகழ்ச்சி முற்றிற்று.

உ

சிவமயம்.

ஙஅ - வது,

## சிவப்பிரகாச சுவாமிகள்

ஏவலிசைத்தல்.

---

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

கேளாய் செவியேயெங்கிற்மைகண்டும்புகுந் தாண்டவன்
மாளாத சீர்த்தியே மன்று மொழியெங்குமாகவே. (க)

உடலேநீ மேவும் பரிசெலா நம்மை யுடையவன்
றிடமாந் திருமேனி யானதிண் மைகண்டுந் தேராய்நீ.

வாராய் நயனமே வாராதேவந் தெம்மையாண்டானைப்
பாராய் முழுது மவனுறைநின்ற பரிசினை. (ங)

நாவேநீ புண்ணுஞ் சுவையெல்லா நம்மையுடை ர்ன்
றேவா ரடியாய தின்மைகண்டுண்ணவுந் தேராய் ச)

*வாச முழுதுமவ் வாசாமு கோசர மானவ
ஞச மிலிகோல் மானான் மைகண்டு நாசியே. (ரு)

வாராப்பிரவிர்த்தியேவாராதேவங்கெம்மையாண் வன்
சீரார் திருப்பணியாகவே செய்யாய்செயலெல்ல .()

ஓராய்நிவிர்த்தியே யொன்றுமொழியர விறைவல
சேரா தவருடன் சிந்தைகனவிலுஞ் சேராதே. எ)

மனமேநீ சங்கற்ப மாக நினையும் பொருளெல்லா
கனமாம் பாஞ்சுடர் கற்பனை யாகக் கருதாய்நீ. அ)

சித்தமே நீசிந் தனையாய் நினையும் பொருளெல்ல
வைத்த மலரடி யல்லதின் மைகண்டு வாழாய்நீ கூ)

ஐயமறவிட் டறுதியிடுமிப் பொருளெல்லாஞ்
செய்யசிவப்பிர காசமொன்றேதெளி வாய்மதிநீ. ம)

ஏவலிசைத்தல் முற்றிற்று.

கடகூ - வது, நற்குறி.

---

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

பாரும் பாரு ருள்வருங்குறி பாதாதிகேசமுங்க ர்த்
தோர்வுமிறந்து வரோமமுகிழ்த்து வுள்ளமுந்தி( ழு
காய்விடுமே. க)

---

* இச்செயுளிற் பயநில்லெதாக்கது.

கலையும்வலையுடன் கற்புமிழந்தறிமாலுங்கரையறுமே யலையுங் கடலே மூனுவெனு மன்பர் பாலையன் வருங் குறியே. (௨)

என்புமுருகி யெதிரிலின்பவ் வெள்ளமெங்கும் பரந்தி டுமே, தன்பெருந் தன்மை தன்னாலு மறிவொண்ணாச் சம்புவருங்குறியே. (௩)

ஊனுமுயிரு முணர்வு முணர்விடை யாதுமுருகி யொ ன்றாய்ந், தேனு மபிர்துமாய் நின்றுதித் தித்திடுஞ் செ ய்யோன் வருங்குறியே. (௪)

சதுரைமறந்தறிமால் கொண்டு தன்னையுந் தானிறைந் தோ வியம்போ, லெதிர்வுங்கழிவு மற்றின்ப மீதாருமா லெந்தைவருங்குறியே. (௫)

விச்சையவிச்சை விவேகாவிவேகங்கள் வீடுபற்றுங்க ளவிற், றுச்சதுணர்த விலாமைபோற்றுன்றுதூ தூ யோன்வருங்குறியே. (௬)

உரையுந்தழுத்துள மும்முருகிக்கண்ணு மொப்பிலா று கியோடும், புரையுமறவினை தின்பமீ தாரும் புரணன் வருங் குறியே. (௭)

நற்குறிமுற்றிற்று.

௬௰ - வது, பல்வி.



அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அருவுரு வலானுருவ மாகிவரு மாகி
லாதிமறை தேடரிய வண்ணலவரு மாகிற்
சுரூபனென்னை யுடையநல தோழன்வரு மாகிற்
றுளக்கமற நல்லதிசை சொல்லுசிறு பல்லி (௧)

ஓடுமன நம்மினுட னுறவுசெயு மாகி
லுள்ளமிலே மெள்ளவுணர் வாகிவரு மாகி
னூடுமிட மெங்குமறி வாகிவிடு மாகி
னல்லகுர னல்லதிசை சொல்லுசிறு பல்லி.

செப்பமுடி யாதபொருள் செப்பவரு மாகிற்
சிலுப்பற விழுத்தவல தீரன்வரு மாகி
லிப்பவ மறுத்தகழ லிங்கன்வரு மாகி
லின்னமொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி.

ஆறவடி வைக்கவல வாதிவரு மாகி
லருஞ்சிவ மெனக்கெளிய வையன்வரு மாகி
வேறுமொழி யாவிரகன் வீதிவரு மாகின்
மீளவொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி.

இரவுபக லொழியவரு மிரவிவரு மாகி
லின்பவடி வானசிவ லிங்கன்வரு மாகில்
விரவியெனை யாளவல வீரன்வரு மாகின்
மீளவொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி.

என்னுளமிர் தூறிநிறை யின்பம்வரு மாகி
லென்றுமொழி யாதபர மீசன்வரு மாகின்
மன்னுமுணர் வாகிய மணாளன்வரு மாகில்
வாழவொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி.

உம்பர்க டமக்கரிய வும்பன்வரு மாகி
லுரையுணர் விறந்தவுணர் வுருவன்வரு மாகி
லெம்பர மறத்திகழு மின்பம்வரு மாகி
லின்னமொரு கால்வரவு சொல்லுசிறு பல்லி.

பல்லி முற்றிற்று.

சிவமயம்.

## ௬௧ - வது, கொடி.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

கருவார் புழுச்சிறைக்கே கடையேன் புகாதவண்ணங்
குருவாகி வந்தான்வரிற் கொடியே யுவகைகூறே. (௧)

மாறும் பிறவிமயன் மாத்திரையொன் பிற்றீரக்
கூறும் விரகன்வரிற் கொடியே யுவகைகூறே. (௨)

தோலான் மறைத்தமலச் சுமையினைநா னென்கின்ற
கோலாகலந் தீர்த்தான்வரிற் கொடியே யுவகைகூறே.

தொண்டில்லையல்லர்நாயேன்றெழும்புகந்தாண்டுகொண்ட
கொண்ட லெழுந்தருளிற் கொடியே யுவகைகூறே (௪)

நற்றேவர் நின்றுணங்க நாயேனை யாண்டகோலங்
குற்றேவல் கொள்ளவரிற் கொடியே யுவகைகூறே. ௫

நாமாதீத மானதன்னை நாயேற்கு நல்கவந்த
கோமா னெழுந்தருளிற் கொடியே யுவகைகூறே. (௬)

உரையுணர்வற்றதொன்றையுள்ளங்கைநெல்லிபோலக்
குரைகழ றந்தான்வரிற் கொடியே யுவகைகூறே. (௭)

திண்டாடத்தேவரெல்லாஞ்சிறியேனைக்கண்டுகொண்டு
கொண்டாள வந்தான்வரிற் கொடியே யுவகைகூறே. ௮

ஞாலமும் விண்ணுநிற்க நாயேனை யாண்டுகொள்ளக்
கோலமாய் வந்தான்வரிற் கொடியே யுவகைகூறே. (௯)

நெடியானு மயனுநிற்க நேயமிலா நீசனெனைக்
குடியாக வாண்டான்வரிற் கொடியே யுவகைகூறே. ௧0

வேறு.

கோகிலக் குஞ்சுதம் பிள்ளைபோலுங் குறித்தே ர்க்
குங் குலக்கொடியே, யேகநற்சோதியை யென் யா
ரு மெம்பிரானை யிங்கெழுந் தருளென்னே. (க)

கொடி முற்றிற்று.

## சஉ - வது, கோழி.

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

சாவாது மூவாது தன்னைத்தந்த தம்பிரா னிங்ே ெய
ழுந்தருள, நாவார நாதன் றிசையைநோக்கி யை ழ
டாய்கோழிக் குலக்கொடியே. (க)

கண்டா ருயிருண்டு நம்மைநல்குங் கருணையனி ெ
ழுந்தருள, வண்டனிருந்த திசையைநோக்கி யை தி
டாய்கோழிக் குலக்கொடியே. )

மோன மொழியான் முழுதுமோதி முடித்தவெ நா
மா னெழுந்தருள, ஞானவிநோதன் றிசையை தி
யழைத்திடாய்கோழிக் குலக்கொடியே. )

கோழி முற்றிற்று.

## சங - வது, கூடல்.

கலிவிருத்தம்.

மாலும் பிரமனு மற்றுள்ள தேவரு
ஞாலமு நிற்பா ரெருபந்தான் சாற்றி
யால மெனைக்கொண் டமிர்தந் தனைத்தந்த
கோலம் வருமாகிற் கூடுவாய் கூடலே.

கூடல் முற்றிற்று.

சிவமயம்.

சுசு-வது.

## சிவப்பிரகாசசுவாமிகள்

### கிளிப்பயிற்று.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

மூலந் தனக்கில்லா மூல மென்னீர்
முழுதுமாய்த் தானே மூளாத்தா னென்னீர்
காலங்கண் மூன்றுங் கடந்தா னென்னீர்
கண்ணுக்குங் கண்ணாய்க் கழன்றா னென்னீர்
கோலங் குருவுருவாய் வந்தா னென்னீர்
குடிமுழுது மாட்கொண்ட கொண்ட லென்னீர்
சீலம் பாவரிய செல்வ மென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (க)

பந்தமாய் வீடாய்ப் பரந்தா னென்னீர்
பாவிப்பார் பாவனைக ளானா னென்னீர்
சந்த மிதுவென்ன வொண்ணா தென்னீர்
தன்னை யருள்குருவாய் வந்தா னென்னீ
ரந்தமிலா வன்பிறவி தீர்த்தா னென்னீ
ரருட்கழல்க ணந்தலையில் வைத்தா னென்னீர்
சிந்தைதன்னிற் றித்திக்குந் தேனே யென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (உ)

சாற்றுஞ் சடங்கறுத்த தாளா னென்னீர்
தத்துவ னேயென்னீர் தலைவா வென்னீர்
போற்றுவார் தம்மைவிடாப் பொன்னே யென்னீர்
புரையறவே தானினைந்தாற் போகா னென்னீர்
காற்றுங் கறங்கு மெனச்சு விக்குங்
கருத்தைக் கலக்க மறுத்தா னென்னீர்

சிற்றமி னெஞ்சகத்துச் சேர்வே யென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்.

உலவாத * பூமாரா யோங்கு கின்ற
வுள்ளொளிமிய யென்னி ருடையா யென்னீர்
கலவாமெதல் லாங்கலந்து கண்டு நின்ற
கண்ணே கருமணியே பாவா யென்னீர்
பலவாகி நின்றேப கிர்ப்பொன் றில்லாப்
பரமனே யென்னீர் பழையா யென்னீர்
சிலைபோலு மென்னெஞ்சிற் சேர்ந்தா னென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்.

கற்பனைக ளெல்லாங் கழித்தா னென்னீர்
கருவாகி நின்றொளிருங் கண்ணே யென்னீர்
நிற்பனவுஞ் செல்வனவு மானு னென்னீர்
நினைவறவே தானினைந்தா னிற்பா னென்னீர்
சொற்பலவா நூல்பலவுஞ் சொன்னு னென்னீர்
துரிசறுத்தாட் கொள்ளவல்ல சோதி யென்னீர்
சிற்பரமாய் நின்றொளிருந் தெளிவே யென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்.

கூறு பலசமயங் கோத்தா னென்னீர்
கூறற்று ருள்ளத்துக் கோற்றே னென்னீ
ராறாறு மையைந்து நாலேழ் தொண்ணூறும்
றுறு மவைவகுத்தங் காகா னென்னீர்
மாறாத வல்வினைநோய் மாற்று னென்னீர்
மாசறுத்தாட் கொண்டருள வந்தா னென்னீர்
தேறாதா ருள்ளத்துச் சேரா னென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்.

---

* பூமார் – மகத்துவமுடையவர்.

இந்திரசா லம்போல வெல்லாந் தன்னு
ளிதமிதமா கக்காட்ட வல்லா னென்னீ
ரந்தரமொன் றின்றியெல்லாங் காண்பா னென்னீ
ரண்டர்க் கறிவரிய வந்த னென்னீர்
தொந்த விருண்மாய்த்த சுடரோ யென்னீர்
துணையடியென் சென்னிமிசை வைத்தா னென்னீர்
சிந்தையுள் ளேமன்னிச் செறிந்தா னென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரொன்னீர். (எ)

அன்னையிலு மென்றனக்கு நல்லா னென்னீ
ரமிர்தத்து வான்சுவையே பயனே யென்னீ
ரென்னை யெனக் கென்றுமிலே யென்னிற்றந்த
விண்ணமிர் தேயென்னி றைவாவென்னீர்
பண்ணுமறைக் கெட்டாத பாதா வென்னீர்
பழவடியார் பண்டாரப் பொருளே யென்னீர்
சென்னிமிசைக் கழல்சூட்டி யாண்டா னென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரொன்னீர். (அ)

பொல்லாவென் போல்வாரைத் தேடி யாளப்
பூமியினின் மானிடனாய்ப் போந்தா னென்னீர்
நல்லார்க ளெல்லாரு நிற்க நாய்க்கு
நற்றவிசிட் டெனையாண்ட நாதா வென்னீர்
கல்லாமை கற்பித்த காளா யென்னீர்
கருணைத்த டங்கடலே யென்னீ ரென்னீர்
செல்லாத மீளாத செல்வ மென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரொன்னீர். (கூ)

ஒப்பொருவ ரில்லா வொருவ னென்னீ
ருத்தமர்க் கேகண்ணுறை புரிந்தா னென்னீ
ரெப்பொருளுந் தானா யிசைந்தா னென்னீ
ரிடையறு வானந்த வெள்ள மென்னீர்

தப்பறவே யென்னைவலிந் தாண்டு கொண்டு
தாளிணையென் சென்னிமிசை வைத்தா னென்ன.
செப்பரிய சுவானுபவத் தேற லென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். )

அள்ளூறு முள்ளத் தடியார் மெய்யி
லணுகிநோ யிணையறுத்திட் டினிமே லொன்று
நள்ளாமை காத்துவந்த நம்பா வென்னீர்
நானேநீ யாய்நயந்த நாதா வென்னீர்
விள்ளாமை யோர்கணமு மடியார் கூட்டம்
விரவியினிக் குறைக்காலம் போக்க நாயேற்
குள்ளானே யருளியினி யுடலம் வீபோ
துணர்ந்திருந்தே யொழிவிப்பா யென்னீ ரென்னீர் )

கிளிப்பயிற்று முற்றிற்று.

௪௫-வது.

## குறையுரைத்தல்.

---

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

கொண்டாள் குரவனே கூர்மய றீரானேற்
கண்டா ருயிருண்ணுங் கண்டக னென்பேனே. )

என்பணி கொண்டென்று மின்புரு னேன்மாயை
வன்ப ருயிருண்ணு மறவன்கா ணென்பேனே. )

குறையுரைத்தல் முற்றிற்று.

சிவமயம்.

சசுா - வது,

# வரவுசாற்றல்.

———*———

அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

தோரணங்க ளூட்டு * மேடோ சோலையெங்குஞ்செய்யுமேடோ
தூணுறைகள் பொதிந்தெங்குந் தூய்யவிளக் கேற்றுமேடோ
வாரணமு மயன்முதலா மமரருமங் கயர்வுறவே
யாதனெனை யாண்டுகொள்ள வாரியன்காண் வருகின்றான். (க)

வீதியெங்கும்வெள்ளைமணல் பரப்பிநீரை விடுமேடோ
வெற்றிக் கொடியுடனே விதானமேற் கட்டுமேடோ
வாதிவேத நாலுமுரா சாகவறைந் தாடுமேடோ
வன்பருள்ளங்கோயில்கொள்ள வெங்களுதர்வருகின்றார்.

சோகமோ காதியெல்லாந் துணிந்துநீர் விடுமேடோ
தொந்தமுற்ற பந்தமுற்றுந் துவக்கறுத் திருமேடோ
வாகமாக வருளாலே யவையவங்க ளதுசாத்தி
யாறவடிவைக்கவெங்க ளண்ணலார்காண் வருகின்றார்.

வீணைவங்கி யங்களாலே வேதகீத மோதுமேடோ
விழுந்தெழுந்திங் கோலமிட்டு விரகழிந்திட்டாடுமேடோ
பேணுமன்ப ராவியுண்டு பேராதுள்ளங் கோயில்கொள்ளப்
பெத்தமுத்தமற்றவின்பப் பெருமானார்தாம்வருகின்றார்.

பூமியெங்கும்பொற்பூமாரி பொழிந்துமின் மிடுமேடோ
பூரணப்பொற் குடங்களும் பூவிரியு மெடுமேடோ
தாமமெங்கு நாற்றுமேடோ தலையினு லாடுமேடோ
தம்மையன்பர்க்களிக்கவென்று தம்பிரானார்வருகின்றார்.

வரவுசாற்றல் முற்றிற்று.

---

* ஏடர்களோவென்பது ஏடோவெனப்பன்மை ஒருமையாய் வந்த வழுவமைதி.

சிவமயம்.

௯௭ வது,

# சிவப்பிரகாசசுவாமிகள்

## ஸ்வரூபானந்த சுவாமிகள்

## அர்ச்சனை.

---

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த

குறள்வெண்செந்துறை.

என்னைக் குறித்தா ளெழிலார் திருமேனி
மன்னார்க் கிடும்பீட மதியிலேலன் காதலே. (௧

ஓது மறைக்கு மும்பர்க்கு மரியவவர்
பாதம் விளக்குநீர் பண்பிலே னீர்மையே. (௨

தேசுக்குத் தேசாந் திருவான மேனிக்குப்
பூசப் படுஞ்சாந்தம் புலையேன் மனத்தன்பே. (௩

பார்த்ததெல்லாந் தானாய்ப் பழுதற்ற சோதிக்குச்
சாத்தும் பரிவட்டந் தமியேனேத் தூஞ்சொல்லே. (௪

தேடிமூவர் வாடச் சிறியோமை யாண்டவர்க்
* காடு மஞ்சன மறிவி லேலன் கண்ணீரே. (௫

ஏத்துமன்ப ருள்ளத் தின்பமா மீசர்க்குச்
சாத்துங் களபமுஞ் சதுரிலே னாசையே. (௬)

இணையேது மில்லாத வெழிலார் திருமேனிக்
கணியா பரணமு மறிவிலே னார்வமே. (௭)

தனையன்றி யொன்றிலாத் தம்பிரான் றிண்டோண்மேற்
புனையுந் திருமாலை புலையேன்சொன் மாலையே. (௮)

---

ஆட்டுமென் பது- ஆடுமெனப்பிறவினை- தன்வினையாய்வந்தது.

பாங்காக வந்தெம்மை யாட்கொண்ட பண்பர்க்குப்
பூங்கோயி லாவதென் புழுவார் குரம்பையே. (௯)

நூற்றுஞ் சுருதிக டொடர வரியவவர்க்
கேற்றுநந் தாவிளக் கெழிலாரு ஞானமே. (௧0)

செல்லறீர்த் தென்சிந்தை மேவிய செல்வர்க்கு
நல்லதூ பந்தீப நாயேன் மனத்தன்பே. (௧௧)

எங்காத லுள்ளேனின் றின்பஞ்செ யீசர்க்குச்
சிங்கா சனமென்றுந் தெளிவிலேன் சிந்தையே. (௧௨)

சாற்றுமறைக் கெட்டாத தம்பிரா னார்தமக்
கேற்றும் பரிகல மேழையே னுள்ளமே. (௧௩)

நோக்கரிய மேனியது நுண்ணுணர்வா மீசர்தமக்
காக்கிய போனக மறிவிலே னாவியே. (௧௪)

ஐயமறுத் தாளு மழகார் சுருபர்க்குச்
செய்ய வமிர்தென்றுந் தெளிவிலேன் சீவனே. (௧௫)

ஆனதி லாகாத வானந்த நாடர்க்குப்
போனக மாவது புலையே னுயிர்தானே. (௧௬)

தெள்ளத் தெளிவாகுஞ் சிவப்பிர காசர்க்குக்
கள்ளப் பொறிபுலன் கறியமு தாகுமே. (௧௭)

போற்றுமன்பர் நெஞ்சிற் பொருவில் சுருபர்க்குக்
கேற்றுங் கறியென்ற னீடணை யாவுமே. (௧௮)

கண்ணுக்குக் கண்ணாருஞ் சுருதரு மீசருக்
கெண்ணப் படுங்கறி யெல்லாமென் பாவமே. (௧௯)

செப்பரிய மேனியெங்கள் சிவப்பிர காசர்க்கு
முப்பழ மென்குண மும்மல முற்றுமே. (௨0)

சிற்றமி னெஞ்சகத்துச் சேர்வே யென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்.

உலவாத * பூமாரா யோங்கு கின்ற
வுள்ளொளியே யென்னி ருடையா யென்னீர்
கலவாதெல் லாங்கலந்து கண்டு நின்ற
கண்ணே கருமணியே பாவா யென்னீர்
பலவாகி நின்றே பகிர்ப்பொன் றில்லாப்
பரமனே யென்னீர் பரையா யென்னீர்
சிலைபோலு மென்னெஞ்சிற் சேர்ந்தா னென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்.

கற்பனைக ளெல்லாங் கழித்தா னென்னீர்
கருவாகி நின்றொளிருங் கண்ணே யென்னீர்
நிற்பனவுஞ் செல்வனவு மானா னென்னீர்
நினைவறவே தாநினைந்தா னிற்பா னென்னீர்
சொற்பலவா நூல்பலவுஞ் சொன்னா னென்னீர்
துரிசறுத்தாட் கொள்ளவல்ல சோதி யென்னீர்
சிற்பரமாய் நின்றொளிருந் தெளிவே யென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்.

கூறு பலசமயங் கோத்தா னென்னீர்
கூறற்றா ருள்ளத்துக் கோற்றே னென்னீ
ராறாறு மையைந்து நாலேழ் தொண்ணூற்
றாறு மவைவகுத்தங் காகா னென்னீர்
மாறாத வல்வினைநோய் மாற்றா னென்னீர்
மாசறுத்தாட் கொண்டருள வந்தா னென்னீர்
தேறாதா ருள்ளத்துச் சேரா னென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர்.

---

* பூமார் — மகத்துவமுடையவர்.

இந்திரசா லம்போல வெல்லாந் தன்னு
ளிதமிதமா கக்காட்ட வல்லா னென்னீ
ரந்தரமொன் றின்றியெல்லாங் காண்பா னென்னீ
ரண்டர்க் கறிவரிய வத்த னென்னீர்
தொந்த விருண்மாய்த்த சுடரோ யென்னீர்
றுணையடியென் சென்னிமிசை வைத்தா னென்னீர்
சிந்தையுள் ளேமன்னிச் செறிந்தா னென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (எ)

அன்னையிலு மென்றனக்கு நல்லா னென்னீ
ரமிர்தத்து வான்சுவையே பயனே யென்னீ
ரென்னை யெனக் கென்றுமே லென்னிற்றந்த
வின்னமிர் தேயென்னீ ரிறைவா வென்னீர்
பன்னுமறைக் கெட்டாத பாதா வென்னீர்
பழவடியார் பண்டாரப் பொருளே யென்னீர்
சென்னிமிசைக் கழல்சூட்டி யாண்டா னென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (அ)

பொல்லாவென் போல்வாரைத் தேடி யாளப்
பூமியினின் மானிடனாய்ப் போந்தா னென்னீர்
நல்லார்க ளெல்லாரு மிருக்க நாய்க்கு
நற்றவிசிட் டெனையாண்ட நாதா வென்னீர்
கல்லாமை கற்பித்த காளா யென்னீர்
கருணைத்த டங்கடலே யென்னீ ரென்னீர்
செல்லாத மீளாத செல்வ மென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். (கூ)

ஒப்பொருவ ரில்லா வொருவ னென்னீ
ருத்தமர்க் கேகண்ணா யுதித்தா னென்னீ
ரெப்பொருளுந் தானா யிசைந்தா னென்னீ
ரிடையறு வானந்த வெள்ள மென்னீர்

தப்பறவே யென்னைவலிந் தாண்டு கொண்டு
தாளிணையென் சென்னிமிசை வைத்தா னென்னீ!
செப்பரிய சுவானுபவத் தேற லென்னீர்
சிவப்பிரகா சக்கனியே யென்னீ ரென்னீர். ( )

அள்ளூறு முள்ளத் தடியார் மெய்யி
லணுகிநோ யினையறுத்திட் டினிமே லொன்று
நள்ளாமை காத்துவந்த நம்பா வென்னீர்
நானேநீ யாய்நயந்த நாதா வென்னீர்
விள்ளாமை யோர்கணமு மடியார் கூட்டம்
விரவியினிக் குறைக்காலம் போக்க நாயேற்
குள்ளானே யருளியினி யுடலம் வீபோ
துணர்ந்திருந்தே யொழிவிப்பா யென்னீ ரென்னீர்.

கிளிப்பயிற்று முற்றிற்று.

சஎ-வது.

## குறையுரைத்தல்.

---

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

கொண்டாள் குரவனே கூர்மய நீரானேற்
கண்டா ருயிருண்ணுங் கண்டக னென்பேனே. )

என்பணி கொண்டென்று மின்புறு னேன்மாயை
வன்ப ருயிருண்ணு மறவன்கா ணென்பேனே. )

குறையுரைத்தல் முற்றிற்று.

உ

சிவமயம்.

௬௯ - வது,

# வ ர வு சா ற் ற ல்.

---*---

அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

தோரணங்க ளாட்டு* மேடோ சோலையெங்குஞ்செய்யுமேடோ
தூணுறைகள் பொதிந்தெங்குந் தூய்யவிளக் கேற்றுமேடோ
வாரணமு மயன்முதலா மமரருமங் கயர்வுறவே
யாதனெனை யாண்டுகொள்ள வாரியன்காண் வருகின்றான். (௧)

வீதியெங்கும் வெள்ளைமணல் பரப்பிநீரை விடுமேடோ
வெற்றிக் கொடியுடனே விதானமேற் கட்டுமேடோ
வாதிவேத நாலுமுர சாகவறைந் தாடுமேடோ
வன்பருள்ளங்கோயில்கொள்ள வெங்கணாதர்வருகின்றார்.

சோகமோ காதியெல்லாந் துணித்துநீர் விடுமேடோ
தொந்தமுற்ற பந்தமுற்றுந் துவக்கறுத் தீருமேடோ
வாகமாக வருளாலே யவையவங்க ளதுசாத்தி
யாறவடிவைக்கவெங்க ளண்ணலார்காண் வருகின்றார்.

வீணைவங்கி யங்களாலே வேதகீத மோதுமேடோ
விழுந்தெழுந்திங் கோலமிட்டு விரகழிந்திட்டாடுமேடோ
பேணுமன்ப ராவியுண்டு பேராநுள்ளங் கோயில்கொள்ளப்
பெத்தமுத்தமற்றவின்பப் பெருமானார்தாம்வருகின்றார்.

பூமியெங்கும்பொற்பூமாரி பொழிந்துநின் றிடுமேடோ
பூரணப்பொற் குடங்களும் பூவிரியு மெடுமேடோ
தாமமெங்கு நாற்றுமேடோ தலையினு லாடுமேடோ
நம்மையன்பர்க்களிக்கவென்று தம்பிரானார்வருகின்றார்.

வரவுசாற்றல் முற்றிற்று.

---

* ஏடர்களோவென்பது ஏடோவெனப்பன்மை ஒருமையாய் வந்த வழுவமைதி.

உ

சிவமயம்.

சுஎ வது,

# சிவப்பிரகாசசுவாமிகள்

## ஸ்வரூபானந்த சுவாமிகள்

## அர்ச்சனை.

---

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

என்னைக் குறித்தா ளெழிலார் திருமேனி
மன்னர்க் கிடும்பீட மதியிலேன் காதலே. (க

ஓது மறைக்கு மும்பர்க்கு மரியவவர்
பாதம் விளக்குநீர் பண்பிலே னீர்மையே. (உ

தேசுக்குத் தேசாந் திருவான மேனிக்குப்
பூசப் படுஞ்சாந்தம் புலையேன் மனத்தன்பே. (ந

பார்த்ததெல்லாந் தானாய்ப் பழுதற்ற சோதிக்குச்
சாத்தும் பரிவட்டந் தமியேனேத் துஞ்சொல்லே. (ச

தேடிமூவர் வாடச் சிறியோமை யாண்டவர்க்
* காடு மஞ்சன மறிவிலேன் கண்ணீரே. (ரு

ஏத்துமன்ப ருள்ளத் தின்பமா மீசர்க்குச்
சாத்துங் களபமுஞ் சதுரிலே னசையே. (சா

இணையேது மில்லாத வெழிலார் திருமேனிக்
கணியா பரணமு மறிவிலே னார்வமே. (எ

தனையன்றி யொன்றிலாத் தம்பிரான் றிண்டோண்மே
புனையுந் திருமாலை புலையேன்சொன் மாலையே. (அ

---

* ஆட்டுமென்பது — ஆடுமெனப்பிறவினை — தன்வினையாய்வந்த

பாங்காக வந்தெம்மை யாட்கொண்ட பண்பர்க்குப்
பூங்கோயி லாவதென் புழுவார் குரம்பையே. (௯)

தூற்றுஞ் சுருதிக டொடர வரியவவர்க்
கேற்றுநந் தாவிளக் கெழிலாரு ஞானமே. (௧0)

செல்லநீர்த் தென்சிந்தை மேவிய செல்வர்க்கு
நல்லதூ பந்திப நாயேன் மனத்தன்பே. (௧௧)

எங்காத லுள்ளேநின் றின்பஞ்செ யீசர்க்குச்
சிங்கா சனமென்றுந் தெளிவிலேன் சிந்தையே. (௧௨)

சாற்றுமறைக் கெட்டாத தம்பிரா னார்தமக்
கேற்றும் பரிகல மேழையே னுள்ளமே. (௧௩)

நோக்கரிய மேனியது நுண்ணுணர்வா மீசர்தமக்
காக்கிய போனக மறிவிலே னாவியே. (௧௪)

ஐயமறுத் தாளு மழகார் சுருபர்க்குச்
செய்ய வமிர்தென்றுந் தெளிவிலேன் சிவனே. (௧௫)

ஆனதி லாகாத வானந்த நாடர்க்குப்
போனக மாவது புலையே னுயிர்நானே. (௧௬)

தெள்ளத் தெளிவாகுஞ் சிவப்பிர காசர்க்குக்
கள்ளப் பொறிபுலன் கறியமு தாகுமே. (௧௭)

போற்றுமன்பர் நெஞ்சிற் பொருவில் சுருபர்க்குக்
கேற்றுங் கறியென்ற னிடரெல்லா யாவுமே. (௧௮)

கண்ணுக்குக் கண்ணுருங் கருகரு பீசருக்
கெண்ணப் படுங்கறி யெல்லாமென் பாசமே. (௧௯)

செப்பரிய மேனியெங்கள் சிவப்பிர காசர்க்கு
முப்பழ மென்குண மும்மல முற்றுமே. (௨0)

ஞாலமெலா மாகி நின்றிடு நாதர்க்குப்
பாலுடன் றேனுமென் பாவக முற்றுமே. ( )

திக்காலா தியொன்று மில்லாத செல்வருக்
கக்கார மாவது மென்மதி யாகுமே. (ச )

அறிவு வடிவாக வருள்செய்த வீசர்க்கு
நறுநெ யமிர்தென்று நாயேன் பவந்தானே. (உ )

விண்ணோர்கள் வாடமண்ணோர் வீறெய்தவந்தார்க்ந்
தண்ணீ ரமிர்தென்றுந் தாவில்லா மாயையே. (ε )

உணாயற்றே யென்னை யுண்டார்க் கடைகாயும்
வருமென்மூவேழ் சுற்றமும் வன்பவம் யாவுமே (ச )

சிலுகற்ற சிற்பர மாகிய செல்வர்க்கு
நலகற்பூர மென்னை நண்ணுவோ ராவியே. (ε )

வார்த்தையொன் றுலேயென் வன்பவ மாய்த்தார்க்ந்
தோத்திரந் தானென்னுச் சொல்லுவ தெல்லாமே T

தாமே தமக்கொப்பாந் தத்துவ நாதர்க்குப்
பூமாரி யாவதென் புன்றலை தாழ்வதே. (உ )

அர்ச்சனை முற்றிற்று.

சஅ - வது,

## அனுபூதிநிலயம்.

---

கலித்தாழிசை.

தல்லுந் தொம்மூமானு யென்றுநீர் போகாதீர்
சற்றே மறித்துக் காட்டீர்
புல்லியுமைத் தந்தினிப் போகலா மோதான்
பொன்னீ வலஞ்சு ழீரோ

போதக் கயிற்றாலே கட்டிக்கொண் டுள்வைத்தேன்
போகலா மாகிற் போகீர்
போதப் பெருமாளே பூரண போதரோ
போகலா மாகிற் போகீர். (க)

வேதங் கீதைசொல் விற்றென்றுநீர் போகாதீர்
மெய்யும்மைக் காட்டித் தந்தீ
ராதிபுராணரோ யானந்த நாடரோ
யங்ஙனே போக லாமோ
வள்ளுறு முள்ளத் தளையிட்டு வைத்தே
னங்ஙனே போக லாமோ
வாதிபுராணரோ யானந்த நாடரோ
யங்ஙனே போக லாமோ. (உ)

அனுபூதிநிலய முற்றிற்று.

சகூ - வது, உயிருணி.

---

கலிவிருத்தம்.

மறைநான்முக னரன்வானவர் மயல்கொண்டின மயரப்
பொறையாமுட லளவாயுழல் புலையேன் பொருளாக
முறியாவெள முழுவின்பம தருவாகிய முதல்வ
னறைகூவியெ னகமன்னிய வருடானதி சயமே (க)

பூதங்களை நானென்றுள போதம்முண ராதே
வாதம்பல சொல்லியவ மேமாய்வுறு வேனை
வேதங்களு மறியாமல ரடிசூட்டிய விகிர்தன்
பேதங்கெட வுள்வந்தமை பேசவறி யேனே. (உ)

காணேனவ னன்றிப்பிறி தொன்றும்முள வாக
நாணேனய மில்லாமையி னன்றும்மது வன்றும்

பூணேனினி யொன்றும்புனி தன்றாளிணை யன்றி
வீணேசெய்தே னுளமன்னிய விகிர்தன்செய்த வி க.

எறிமாருத மெனவேகுலை மனமா மயறவிர
மறியாவுள மழியாவறி வுருவாகிய வளவன்
செறிவார்கழ லடியென்றலை சேர்த்தியெனை யாண்
தறியேனுள மழியேனரு வினையேன்செய்த வவ ( )

பலவொன்றென வறியேன்பக விரவென்ப துமறி
னலதொன்றையு மறியேனறி வானந்தம தறியே
னலனென்றிய மறையீறவை நவில்கின்றிடு பிரம
குலவுங்குரு பரனெனைக் குறிக்கேடுசெய் தனே (ரு)

தத்தொம்பத மோதியொரு சற்றும்முண ராதே
மத்தம்முறு வார்தம்முடன் மால்கொண்டுழல்வே
யத்தன்னடி சூட்டியறி வாக்கியொளி காட்டி
மெய்த்தன்மையவருள்செய்தமைவினையேனறியே ன

மூன்றாய்முழு துங்கண்டிடு மூவாமுத லொருவன்
கன்றாருரி கொண்டேன்கன வஞ்சங்களை வித்து,
தன்றாரரு ளடியாரொடு தகுவித்தெனை யாண்டே
வென்றாருயிர் முழுதுண்டதோ ரின்பமறி யேனே )

நற்றாயொடு சுற்றம்பொருண் முற்றும்முற வற்று
கற்றாரொடு கற்பார்களை யற்றம்மற விட்டுத்
தெற்றார்மனஞ் செற்றுச்சிவ னற்றாளிணை பற்றிக்
கற்றாவென வுற்றுக்கசிந் துருகித்திரி வேனே. )

அன்றாமென வொன்றாயறி வின்றாயறி இன்றா
யொன்றாவது மன்றாயொழி வின்றாயொழி இன்றா
நன்றாயது மன்றாய்நடு வின்றாய்முடி வின்றாய்
நின்றாய்பிறி தன்றாயெனை யுண்டாயுள நின்றே. )

சீரார்சிவன் வந்தென்றனி நெஞ்சஞ்சிவ மாக்கிப்
பாராவிழி யாலேபவ பாசம்பறி வித்து
நேராவினை யுந்தானெடி துண்டானுள நின்றே
யோராவமிர் தானானிது வென்னே யிதுவென்னே.(க0)

உயிருணி முற்றிற்று.

## ருO - வது, அச்சோ.

——(*)——

அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த

குறள்வெண்செந்துறை.

எழுகடலுங் குலவரையு மேழுலகு மெவ்வஞ்சத் தி
றைக்கும்போதா, விழிகடையே ஞானமன்னி யிணையிலே
நீங் காதிருந்தா னச்சோ வச்சோ. (க)

துடித்துமனம் புலன்வழியே தூறுசெய்து மாறுபடுந்
துணையிலேனை, யடித்தடித்துப் பாலூட்டி யானந்த
மெனக்களித்தா னச்சோ வச்சோ. (உ)

சாதலென்றும் பிறத்தலென்றுந் தடுமாறு மிருவினையி
ன் றளையை வாங்கி, யாதலென்று நடராசன் றிருவுருவை
மெனக்களித்தா னச்சோ வச்சோ. (ரு)

நட்டார் 0 ருந் தம்முடனு நலம்போலப் பொய்நடித்து
நலமிலாதேன், பட்டார்*ருங் கண்டிருந்தும் பழவடியா
ருடனுண்டா னச்சோ வச்சோ. (ச)

---

0 உம்மையிடைச்சொல்.

* பட்டாருதலுமென்பது பட்டாருமென விகாரமாயிற்று.

குடிமைகுல மாச்சிரமங் கோத்திரசூத் திரமனை துங்
குலைந்து போக, வடிமைகொண்ட நடராசன் ற மே
ணி யெனக்களித்தா னச்சோ வச்சோ. (ரு)

அச்சோ முற்றிற்று.

ருக - வது,

சிவப்பிரகாச சுவாமிகள்

# நல்லேன்.

—※—

குறள்வெண்செந்துறை.

செய்ய மேனிக்கு நல்லேன் றுய்ய
செங்கனி வாயிற் சிரிப்புக்கு நல்லேன்
மைய றீர்த்தார்க்கு நல்லே னென்னை
வாழ்வுற வாழ்வித்த வண்மைக்கு நல்லேன். (க)

ஆரா வழகுக்கு நல்லே னேய
வணிந்த மாலைக்கு மார்புக்கு நல்லேன்
சீரார் கருணைக்கு நல்லே னேயன்
றித்தித்த வார்த்தைக்கு நல்லே னல்லேன். (உ)

பார்த்த பார்வைக்கு நல்லேன் செய்ய
பங்கயக் கண்ணுக்கு நல்லே னல்லேன்
வார்த்தைக் குச்சால நல்லே னென்னை
வாழ்வித்த காலுக்கு நல்லே னல்லேன். (ந)

கூரு நோக்குக்கு நல்லேன் ஞானக்
குற்றுடை வாளுக்கு நல்லே னல்லேன்
வீரன் காலுக்கு நல்லேன் கட்டும்
வீரக் கழலுக்கு நல்லே னல்லேன். (௪)

மீட்ட விரகுக்கு நல்லேன் மேனி
விட்டுப் பொழியுங் கருணைக்கு நல்லே
னூட்ட வருளுக்கு நல்லே னெங்க
ளுதர் சிவப்பிர காசர்க்கு நல்லேன். (ரு)

நல்லேன் முற்றிற்று.

ருஉ - வது, ஐ ய கோ.

———(*)———

ஊடிலும் போகில னையகோ
வுதறிலும் விடுகில னையகோ
பாடிலன் பழியில னையகோ
படிறுசெய் தெனைமாய்த்தா னையகோ. (க)

வலியப் பிடித்தாண்டா னையகோ
வாயைப் புதைத்தாண்டா னையகோ
கலவிக்க ணூட்டாண்டா னையகோ
கண்ணேகண் ணுக்கண்டா னையகோ. (உ)

ஐயகோ முற்றிற்று.

ருங - வது, தாய்வார்த்தை.

## இது, ஸ்வரூபானந்த சுவாமிகளது

———*———

அடியிரண்டாய்த்தம்மிலொத்துவந்த
குறள்வெண்செந்துறை.

வாசாம கோசரம் வந்ததென்றாள்
வானவ ரோமாக்க மாமலர்த்தாள்
கூசாதென் சென்னியில் வைத்ததென்றாள்
குளித்தாள்கண் ணீர்கொண்டு கோதைதானே. (க)

சென்னியில் வைத்த கரங்களென்று
டிருக்கற நோக்கிய நோக்கமென்றாள்
வன்னிமுன் வைத்த மெழுகதென்ன
மாறு துருகினாள் வாணுதலே. (உ)

தீண்டுவ னேசெய்ய பாதமென்று
டிருமாலுங் கண்டில னேடியென்று
ளாண்டவ னேயென்றாள் பின்னையொன்று
மறிந்தில னேயென்று ளாயிழையே. (ந)

வாசக மொன்றென்று ளிப்பிறவி
மாண்டதென் றாள்செய்த வல்லபந்தான்
பேச விரகில்லை காணுமென்றாள்
பேசா திருந்தாளென் பேதைதானே. (ச)

உன்ன வரிய பொருளதென்று
ளோதவொண் ணாதென்று ளப்பொருளைச்
சொன்ன விரகென்றாள் பின்னையொன்றுஞ்
சொல்ல வறிந்தில டேமொழியே. (ரு)

எத்திக் கடையேனை யாண்டதென்று
ளெப்போது மின்னமிர் தாகுகின்று
தித்திக்கு மேதிரு வார்த்தையென்றாள்
செய்வ தறிந்திலள் சேயிழையே. (சா)

கைம்மாறு காணேன் கருணைக்கென்றாள்
கம்பித்தாள் காயங்கண் ணீர்சொரிந்தாள்
விம்மா வழுதாள்பின் செய்தசெய்கை
விளம்பு மளவோவென் மெல்லியலே. )

எத்துவ தேயடி யேனுமென்று
ளின்ன மறியா மறைகளென்றாள்

சாத்துவ தேதிரு மேனியென்று
டரிக்க வறிந்தில டையருனே. (அ)

உரியேனல் லேன்மற் றொருவர்க்கென்று
ருடையா னடிப்போ தொருசணமும்
பிரியே னெனச்சொன்னாள் பேச்சொழிந்தாள்
பித்தியா னாளென்றன் பெய்வளையே. (கூ)

ஒருமேனி கொண்ட பரிசேயென்று
ருள்ளத்தா லுள்ளமொண் ணாதசென்று
டிருமேனி யெல்லாங் கருணையென்றாள்
செய்ய சுரூபனென் றாடிருமே. (க0)

தாய்வார்த்தை முற்றிற்று.

நிச - வது.

# தோழியுரைத்தல்.

---

குறள்வெண்செந்துறை.

குருபர னென்றாள் கோலமென்றாள்
கோதி லருட்குணக் குன்றமென்றாள்
பெருமறை காணாது பிடுவாடப்
பேயேற் கெளிவந்த பித்தனென்றாள். (க)

கருணை பொழிகின்ற கண்களென்றாள்
கருக்கெட வைத்த கழல்களென்றாண்
மருளற வென்னைத்தா னாக்குவிக்க
வல்லப மென்றாள்பின் வாய்திறந்தாள். (உ)

பூங்கோயி லென்றாள்பொற் பீடமென்றாள்
புனிதனா மென்றாள்பொன் மேனியென்று

றுங்காண வந்த நலமதென்று
ணயனநீர் மல்கி றுணிழந்தாள். (௩)

மீட்ட விரகென்றாள் வேறுகாணுள்
விழியால்வே றித்த வீரமென்று
றுட்ட வரிதென்று றுடவொண்ணு
நலமாஞ் சிவப்பிர காசனென்றாள் (௪)

செய்ய திருப்புன் முறுவலென்று
டிருவான கோலத்தின் சீர்மையென்றுண்
மெய்ய னுரைக்கு முரையிதென்றாள்
விம்மினுண் மேன்மேலு மேவினளே. (௫)

செய்ய வழகென்றாள் சென்றடையாத்
திருவென்றாள் சீமான் சுரூபனென்றாள்
பைய்ப் பவம்பாழ் படவிழித்த
பார்வையென் றாள்பார்ப் பற்றனளே. (௬)

செந்தா மரைமுகஞ் செய்யவாய்கண்
திருப்பாதங் கைகளுஞ் செய்யமேனி
யந்தா மரைபெற்ற தார்பெறுவா
ரகத்தா மரையா லமிர்தமென்றாள். (௭)

தோழியுரைத்தல் முற்றிற்று.

௫௫ - வது, எம்பாவை.

---

குறள்வெண்செந்துறை.

உண்பானு முடுப்பானு முழல்வானு முடல்சாத்திப்
கண்கர்ண வரிலலது கலக்கறுமோ வெம்பாவாய் (௧)

ஆண்பெணலி யனைத்துயிர்க்கு மாதார மாயிடுஞ
காண்படியே வரினலது கலக்கறுமோ வெம்பாவ (௨)

எம்பாவை முற்றிற்று.

சிவமயம்.

## ௬௪ - வது, அக்கைச்சி.

குறள்வெண்செந்துறை.

பிணஞ்சுடு தடியென்ன வென்னைக் கொண்டே
பெரும்பற்றை யெல்லா மறச்சா டி
யணைந்த வென்னையு மப்படி யிறில்போ
தத்தில் விட்டனு போகத் திருந்தானே. (௧)

ஆதி மாயையென் னக்கைச்சி யந்த
வாண்மக னுற்ற போதே கெட்டேன்
போதந் தானுஞ் சுமையென்று வீறில்
போதத்தில் விட்டனு போகத் திருந்தானே. (௨)

ஓது மாயையென் னக்கைச்சி யொப்பிலா
னென்னுற வுற்ற போதே கெட்டேன்
போதந் தானுஞ் சுமையென்று வீறில்
போதத்தில் விட்டனு போகத் திருந்தானே. (௩)

அக்கைச்சி முற்றிற்று.

## ௬௫ - வது.

சிவப்பிரகாசசுவாமிகள்

## மால்.

குறள்வெண்செந்துறை.

சால மாலானே னம்மே யென்னைத்
தானுகப் பார்த்தசெந் தாமரைக் கண்ணுக்குச்
சால மாலானே னம்மே
ஞாலங் காண்கிலே னம்மே யெங்க

ஞாயனார் தந்திரு மேனியல்லான்
ஞாலங் காண்கிலே னம்மே.

பேச வறிகிலே னம்மே தன்றன்
பேரா வருளும் பெருந்தன்மை யுங்காட்டிப்
பேராசை யாக்கினு னம்மே
தேசு திகழுங்கா ணம்மே யெங்கள்
செய்ய சிவப்பிர காசன் றிருமேனி
தேசு திகழுங்கா ணம்மே.

மால் முற்றிற்று.

உ

சிவமயம்.

ருஅ - வது,

## சிவப்பிரகாச சுவாமிகள்

## குறவை.

---

அடிநான்குகாய்த் தம்பிலொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

சதுமறைக் கரியதா டமியனுக் கெளிவந்த
தன்மையைப் பாடியே குரவையிடு
தம்பிரா னெனையாண்ட கருணையின் பெருமையை
சகமெலா மறியவே குரவையிடு
கதுவுமுற் பவந்தனைக் கணத்தினிற் கருவறக்
கடைக்கண்வைத் தமைபாடிக் குரவையிடு
கல்வியு மழிந்தது கருத்தெல்லா மிறந்தது
கண்ணேகண் ணாய்த்தென்று குரவையிடு.

ஓப்பிலா வொருமொழி யதனாலே முழுதையு
மோதிய வளம்பாடிக் குரவையிடு

ஆழிநிலை யாய பவபாச மொருகணத்
தொழித்தவா றதுபாடிக் குரவையிடு
செப்பிட வரியதோர் தெளிவந்தெ னுளநின்று
தித்திக்குந் திறம்பாடிக் குரவையிடு
அறியோமைப் பொருளாகத் தேடிவந் தாட்கொண்டு
செய்யசே வகம்பாடிக் குரவையிடு. (உ)

உலகேழும் விழுங்கிய வொளியாகு முணர்வையு
முண்டவொண் கழல்பாடிக் குரவையிடு
வுருவாகி யருவாகி யலவாகி யொழியாத
வுண்மையா னிலைபாடிக் குரவையிடு
சலமாரு மதியென்னக் குலையுமென் னுளனேதற்
சிவமாக்குந் தகைபாடிக் குரவையிடு
சதுரான மொழியும்புன் முறுவலுந் தமியேனைச்
சதுராழித் தமைபாடிக் குரவையிடு. (ங)

குரவை முற்றிற்று.

உ

சிவமயம்.

ருசுஅ-வது.

ஸ்வரூபானந்தசுவாமிகள்.

---

## குணலை.

அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

மறைசொ லும்பொருண் மனித வேடமாய்
வந்த தென்றிடு குணலை
மாலு மாலுறும் பதமென் சென்னியில்
வைத்த தென்றிடு குணலை

யறைக டற்றிரை மனமி மைப்பிலே
யழிந்த தென்றிடு குணலை
யறிவு ருவமா யல துகண்டிட
வறிதாய்த் தென்றிடு குணலை. ௮)

இறந்து போய்வரும் வழிதூர்ந் துபுல்
லெழுந்த தென்றிடு குணலை
யிவ்வு டம்பொடே யிருந்து முத்திக்கே
யிருந்தோ மென்றிடு குணலை
மறந்து முன்னியு மிராத போதமாய்
வாழ்ந்தோ மென்றிடு குணலை
வள்ள லாரருள் செய்த வல்லப
மறவோ மென்றிடு குணலை.

சுருதி களொரு கோடி சொல்லியுந்
தோன்று தென்றிடு குணலை
சுரூபா னந்தனோர் சொல்லி லானந்தந்
தோன்று மென்றிடு குணலை
கருத வொண்ணுத பொருளைக் கண்ணாலே
கண்டோ மென்றிடு குணலை
கருணை யங்கழ றன்னைக் கண்டுகண்
களித்தோ மென்றிடு குணலை.

சொலவி னில்வரு சுலைய லைவலைத்
தொலைத்தோ மென்றிடு குணலைச்
சொலவ முஞ்சுக சுரூப வாரியிற்
சுகித்தோ மென்றிடு குணலை
மலவு டலினின் மதிசே யும்மதி
மறந்தோ மென்றிடு குணலை
மதிய ழியவே வரும தியையு
மதித்தோ மென்றிடு குணலை.

நிரந்தர வின்ப வெள்ள மெங்கணு
நிறைந்த தென்றிடு குணலை
நிலை மென்பது மறவியுங் கூட
நிகழா தென்றிடு குணலை
யிருந்து பாரொன்ற விரகையெப் பொழுது
மியம்பி நின்றிடு குணலை
யிப்ப டியேநாம் வாழத் தந்தானை
யேத்தி நின்றிடு * குணலை. (௫)

குணலை - முற்றிற்று.

௬௦-வது, பகடி.

அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

கழியாமை யூழியூழி யுறவாகி வருகின்ற
கருவினை நாசனென் றிடுபகடி
கண்டிருந் தெனையாளக் கழல்காட்டிக் கொடியிட்ட
கருணைமா மலையனென் றிடுபகடி
விழியாலே தனையாக வெனைமாளச் சதுர்செய்த
விரகினை யுடையானென் றிடுபகடி
விரவியே யுடலுயி ருலகங்கண் முழுதையும்
விரவாத வீரனென் றிடுபகடி. (௧)

சதகோடி விதமாக வெழுந்திடுஞ் சடங்கினைச்
சாடிய சதுரனென் றிடுபகடி
சதுமறை யொருமூவர் கலையுற வணங்கியுஞ்
சாருதற் கரியானென் றிடுபகடி
மதமானந் துணையாக வஞ்சகத்தே செலுமென்னை
வலிந்துவந் தாண்டானென் றிடுபகடி

* குணலையென்பது - வீராவேசத்தாற் கொக்கரித்தல்.

வாசாம கோசர வடிவினை மலர்க்கையின்
மணியென்ன வளித்தானென் றிடுபகடி.

அறிவானே டறிபொருளாகியே யெழுஞ்செல
லழகுறத் திரித்தானென் றிடுபகடி
யறிபொரு ளறிவினி லறிவித்தவ் வறிவையு
மறிவானி லழித்தானென் றிடுபகடி.
பொறிபுலன் கரணங்கள் புகல்சிவ பரனென்னும்
பொருளற விழித்தானென் றிடுபகடி.
பொருவில்லா வொளியாகிப் புரையற நிறைந்துமே
புரணமே யானேமென் றிடுபகடி.

பகடி முற்றிற்று.

௬௧-வது.

சுரூபானந்தசுவாமிகள்

## கழல்.

கலித்தாழிசை.

ஒன்றிய சிந்தையு ளொன்ருய் நிகழுமே
யின்றென்னை யாண்டவ னின்பக் கழ
லிதுவென்ன வொண்ணுத விறைவன் கழல்.

இருந்துதி கொண்டென் பிறவிநோய் தீர
மருந்தாகி மண்ணின்மேல் வந்தகழ ன்
மற்றொன்று மில்லாத வள்ளல் கழல்.

முத்தி யடியேன்கண் முன்னே நிகழ்ந்திட
வெத்தி யெனையாண்ட வின்பக் கழல்
யெல்லாமா யல்லா விறைவன் கழல்.

நாநா விதந்திர நாடரி தாய்வெறுந்
தானாகத் தந்த தலைவன் கழற்
றூவா மறைதேர் தனிப்பொற் கழல். (௪)

அஞ்சாதே யென்றவ் வரங்கை யழியவென்
குஞ்சிமேல் வைத்த குரவன் கழல்
கூற்றத்தைக் கொன்ற குழகன் கழல். (௫)

ஆறும் படிநல்கி யாறு நெறிகளும்
வேறின்றி நின்று விளங்குங் கழன்
மெய்யுணர் வாய்நின்ற வீரன்கழல். (௬)

ஏழை யடியே னெழுபிறப் புங்கெட
வூழி முதல்வ னுணர்த்துங் கழ
லுணர்வான வானந்த வுண்மைக்கழல். (௭)

எண்ணு வமரர்க்கு மெட்டரி தாகியென்
கண்ணுள கண்ணு ரமிர்தக் கழல்
கடையேனை யாண்ட கருணைக்கழல். (௮)

ஒன்றொரு முற்றுரு மில்லா வகையென்னைத்
தன்னாகத் தந்த சதுரன் கழல்
சங்கை யறுக்குந் தலைவன்கழல். (௯

பத்தி யடியவர் சித்தத்து ளேநின்று
தித்தித்தமிர் தூறுந் தெய்வக் கழல்
சிற்குரு பானந்தர் செம்பொற் கழல். (௰

கழல் முற்றிற்று.

சிவமயம்.

௯௨ - வது.

ஸ்வரூபானந்தசுவாமிகள்

# அம்மானை.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அஞ்சின் பிணக்கை யறுக்கலா மம்மானை
யன்னிய மொன்றற் றிருக்கலா மம்மானை
துஞ்சும் பிறவி துடைக்கலா மம்மானை
சுரூப னடியிணை சூடினு லம்மானை.

கண்மூடிக் காண நினையார்கா ணம்மானை
கண்மூடு வார்தம்மைக் காணுர்கா ணம்மானை
விண்மூடுஞ் சோதி விளங்குமே லம்மானை
விழியா துறங்கா திருக்கலா மம்மானை.

காலதிசை தேசங்கள் கண்டோநா மம்மானை
காணுநமை யவைதாங் காணுகா ணம்மானை
கோல மறிவல்ல தில்லைகா ணம்மானை
கொள்கைகொள் ளாமை குலைந்தோங்கா ணம்மானை

அல்லும் பகலு மறியோங்கா ணம்மானை
யானந்த மேவடி வானோநா மம்மானை
சொல்லும் பொருளுங் கடந்தோநா மம்மானை
சுரூபானந் தத்தின் சுதந்திரமா மம்மானை

அம்மானைமுற்றிற்று.

சிவமயம்.

சுரு - வது, பந்து

இஃது

# சிவப்பிரகாசசுவாமிகள்.

ஸ்வரூபானந்தசுவாமிகளது.

———[*]———

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

ஓதா ரணங்க ளுயர்ந்து போற்று
முண்மை யுணர்வில் வுலகுக் கெல்லா
மாதார மாகிய வப்பொ ருளே
யருளே வடிவா யெழுந் தருளி
யூதாரி யாய்நா னழியா வண்ண
முச்சியின் மேலே யுவந்து வைத்த
பாதார விந்தங்கள் பாடிப் பாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர். (க)

கொடியிடை யார்கனி வாயுங் கண்ணுங்
கொங்கையு மென்று குலாவு மாங்கர்
நொடியிடைப் பட்டு நுடங்கு வேனை
நோவாமே நோக்கியென் னுரா வுள்ளச்
செடியிடை வந்து புகுந்த நல்கிச்
செய்ய சிவப்பிர காச னிந்தப்
படிமிசை வந்த பரிசு பாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர். (உ)

வெண்மை யுகிரச் சிறையிற் புக்குப்
பெருந்துய ரெய்திப் பிறந்துண் டாகும்
புண்மையை நானென்று போற்றி மாய்ந்து
புழுவார் நரகிற் புகுது வேனை

யொண்மை யரவணை யோனுங் காணு
வொண்மலர்ப் பாதங்கள் சூட்டி யாண்ட
பண்மை நினைந்துகண் ணீர்த தும்பிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.

அந்தர வானத் தவருங் காணு
வந்த வொளியி லசைவொன் றின்றிச்
சுந்தர வேடம் புணர்ந்த ருளிச்
சுரூபானந் தனென் றுயரந் தீரச்
சிந்துரச் சேவடி சென்னி சூட்டிச்
செய்ய திருவாய் மலர்ந்த போதே
பந்தனை தீர்ந்த பரிசு பாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.

வேதமு மாகம மிசைத கருந்
மிருதி புராணமும் வேத மார்க்கர்
வாதமும் வல்லவ ருள்ளத் துள்ளு
மன்னியுந் தோன்றுத வள்ளல் வந்து
பூதமும் பவுதிகந் தானு மற்றும்
போதமே யாகிப் புரிந்து தோன்றிப்
பாத மளித்த பரிசு பாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.

ஓரவுஞ் சொல்லவு மொண்ணு தென்ன
வுபநிட முள்ளத்திற் றுணு மன்பு
கூரவுங் கூறு மிறைவன் வந்து
கொடுவினை யேனையாட் கொண்டா மென்று
வாரவ னிங்கிவ ளுமொன் றேநி
யங்கையோ டங்கை யடித்து நக்குப்
பாரவ ரேசும் பரிசு பாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர்.

இருகா வொருகாலுஞ் செவ்வி தாகாச்
சித்தர் திரித்த திறத்தை யுன்னி
யுருகா வருவி சொரியக் கண்க
ளுயரா விழியா வொழியா வென்று
மருகா பெருகா வழியா வாகா
வனுகா வகலா வயரா வுண்ணாப்
பருகா வமிர்தினைப் பாடிப் பாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர். (௭)

ஏதாதி யேதந்த மென்று தேடி
யிமையவ ரோமாந்து நிற்க வின்னம்
வேதாதி நூலால் விளம்ப வொண்ணா
மெய்ப்பொருண் மானிட வேடஞ் சாத்திப்
பேதாதி பேத மிலாத தன்னைப்
பெறவருள் செய்த பெருந்த கையைப்
பாதாதி கேசம் பரவி நின்று
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர். (௮)

அந்தமு மாதியு மில்லா வொன்றென்
றாரண மோது மறையே யன்றிச்
சந்தமி தென்னவொண் ணாதே யென்னுந்
தம்பிரா னென்னைத்தா னாக்கி யென்றாற்
செந்தமிழ் மாலை புனைந்து கொண்டே
செய்ய குருபன் றிருவ ருளாற்
பந்தமும் வீடுமில் லாமை பாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர். (௯)

சாத்திரங் கற்ற சதுர ரெல்லாந்
தத்துவ மொன்று பலவ தென்று
காத்திர மாகக் கழிந்து போகக்
கருணைக் கடல்கண்ணிற் காண வந்து

நாத்திரங் கத்தன் புகழே பாடி
நற்றொண்டு செய்திட நாயேனையும்
பார்த்தருள் செய்த பரிசு பாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர். (

தேகாதி யாகி யழியு மென்னைச்
செய்ய கருணையாற் சீசீ யிங்ங
னாது காணென் றருளிச் செய்தே
யைம்புலத் தாலைம் பொறியை நோக்கிப்
போகாத வண்ணம் புரிந்து நோக்கிப்
போதப் பெருங்கண் பொருந்தத் தந்தப்
பாகார் மொழியினைப் பாடிப் பாடிப்
பந்தடிக் கவ்வாரீர் பாவை நல்லீர். ( )

பந்து முற்றிற்று.

௬௪ - வது

## பாங்கிக்குரைத்தல்.

அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

சொல்லெல்லா நாத மென்னவும் பெற்றோஞ்
சும்மா விருக்கை தொழிலாகப் பெற்றோ
நல்லவ னன்பரு ளுஞ்சேரப் பெற்றோ
நாயனார் தாந்தந்த வாழ்விது பெண்ணே. )

படுக்கை படுதரை யாகவும் பெற்றோம்
பாணியி லேபலி கொள்ளவும் பெற்றோ
முடுக்கையுங் கோவண மாகவும் பெற்றோ
மொன்றுங் குறைநமக் கில்லைகாண் பெண்ணே. )

எல்லாரு நம்மை யிகழ்ந்திடப் பெற்றோ
மிம்மை மறுமையச் சங்கெடப் பெற்றோ
நல்லான் மலரடி நாஞ்சூடப் பெற்றோ
நாயனார் தாந்தந்த வாழ்விது பெண்ணே. (ங)

வேண்டாமை யென்னும் விழுச்செல்வம் பெற்றோம்
வேண்ட லெனும்பிணி வேரறப் பெற்றோ
மாண்டவ னென்றுகு மன்பினைப் பெற்றோ
மையோ விதென்ன தவஞ்சொல்லாய் பெண்ணே. (ச)

எய்ப்பற்ற சீரை யுடுக்கவும் பெற்றோ
மெங்ஙனு முள்ளானை யென்னெனப் பெற்றோம்
பொய்ப்பத்தி மெய்ப்பத்தி யாகவும் பெற்றோம்
புண்ணிய னார்தந்த வாழ்விது பெண்ணே. (ரு)

பாங்கிக்குணர்த்தல் முற்றிற்று.

கரு - வது.

ஸ்வரூபானந்த சுவாமிகள்

## வியந்துரை.

ஆடிநான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

பாழ்த்த பிறப்பற்றுப் பார்ப்பா னும்போய்ப்
பாராப்பற் றற்றபா தத்தைப் பார்த்து
வாழ்த்தவா ரீர்பெண்காள் வாழ்த்த வாரீர்
வளமாஞ் சுரூபனை வாழ்த்த வாரீர். (க)

தோற்றமெ லாந்தாமே யாகும் வண்ணஞ்
சொன்ன விரகினைச் சொல்லிச் சொல்லிப்

போற்றவா ரீர்பெண்காள் போற்ற வாரீர்
பொருவில் சுரூபனைப் போற்ற வாரீர்.

ஊற்றமெல் லாமுடைத் துக்கு ணைந்திங்
குனைமாண்ட பேரின்பத் துய்த்த வெள்ளஞ்
சாற்றவா ரீர்பெண்காள் சாற்ற வாரீர்
தற்சுரூ பன்பொற்றாள் சாற்ற வாரீர்.

ஓர்கொணு வின்பமோர் மாத்தி னைக்கு
ளொளிர்வித்த வல்லப மூன்னி யுன்னி
யார்க்கவா ரீர்பெண்கா ளார்க்க வாரீ
ரழகார் சுரூபனென் றார்க்க வாரீர்.

வியந்துரை முற்றிற்று.

௬௬ - வது, சுதந்தரன்.

———— )(*)( ————

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஏழை யேற்கெளி வந்த சுதந்தர
னென்ன வெண்ணிலெட் டாத சுதந்தரன்
வாழ நாமுமெல் லாமடி யாருடன்
மனித னுய்வர வல்ல சுதந்தரன்.

கருது தற்குமெட் டாதவ னைம்புலன்
காண வேவர வல்ல சுதந்தர
னொருது வட்டமிட் டேகழி யாவனை
மென்னை யாட்கொள வல்ல சுதந்தரன்.

மூவ ரோடுமுப் பத்துமுக் கோடிமா
முனிவ ருக்குமெட் டாத சுதந்தரன்
பாவி யேனை வாகிவந் தென்னையும்
பார்வை தானறப் பார்த்த சுதந்தரன்.

சதுரி மூந்தமு மன்பர்த மன்புளே
தாணி ருந்தழ காருஞ் சுதந்தா
னதிரு தன்சமூல் சென்னிவைத் தென்னையு
மன்ப ரோடுவந் தாண்ட சுதந்தரன். (ஈ)

சுதந்தரன் முற்றிற்று.

ஈஎ - வது, தெய்வம்.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பந்தமறப் பார்த்தருளிப் பாதமலர் சூட்டிப்
பார்ப்பதறத் திரித்தருளிப் பாரொன்று நேரோ
சிந்தையுள்ளே காட்டித்தந்த தெய்வங் கீழோர்தெய்வஞ்
சிஞ்சிலுப்புப்பொத்துந்தெய்வந்தெய்வமன்றுகிடிகொள்.

நடுக்குமிகு முடம்புதனை நடத்திக்கொடு திரிந்து
நாசம்வந்த போதாக நானென்செய்வே னென்றுந்
திடுக்கங்கெடப் பண்ணியிடுந் தெய்வங்கீழோர் தெய்வஞ்
சிஞ்சிலுப்புப்பொத்துந்தெய்வந்தெய்வமன்றுகிடிகொள்.

தெய்வ முற்றிற்று.

ஈஅ - வது.

ஸ்வரூபானந்தசுவாமிகள்.

## சிவப்பிரகாசசுவாமிகள்.

---

இறைவல்லபம்.

அடிநான்காய்த்தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பந்தனை யெல்லா மொருங்கும் படிசெய்ய
பங்கயக் கண்வைக்கவும்

பார்த்த பார்வையே பார்க்கும் படிசெய்ய
பாத மலர்வைக்கவுஞ்
சிந்தை யழித்துச் சிவமாக்கி யிங்ஙனே
தித்திக்கு மாவைக்கவுஞ்
செய்ய சுரூபனுக் கல்லது வேறொரு
தேவராற் செய்யலாமோ.

அழிவின்றி யென்று மொருதன் மையினின்
றருண்மேனி கொண்டிடவு
மண்டரும் பண்டை யருமறை யுந்தேட
வாயா வெனையாளவு
மொழியு மனமுங் கடந்த தமையென்கண்
முன்னே நிகழ்ந்திடவு
முற்று மொழியாச் சுரூபனுக் கல்லது
மூவராற் செய்யலாமோ.

காணும் பொருள்களுங் கண்ணுங் காணும்
படிகடைக் கண்வைக்கவுங்
காட்சியு மாட்சியு மற்ற தமையிங்ஙன்
காணக் கழல்வைக்கவும்
யேனு மடியா ருளத்தைக் களைத்திங்ஙன்
பிச்சாடத் தான்வைக்கவும்
பேரின்ப நாதனுக் கன்றிமா லீசன்
பிரமனாற் செய்யலாமோ.

கள்ளப் புலனுங் கரணங்க ளென்குங்
கருத்தழிந் தோடிடவுங்
கருத்தழிந் தோடித் திரிந்திட் டவையெலாங்
கணேகண் ணாக்கிடவும்
தெள்ளத் தெளிந்து செயலுஞ் சிவமாகச்
செய்யாமை செய்திடவுஞ்

சிவப்பிரகாசனார்க் கல்லது வேறொரு
தேவராற் செய்யலாமோ. (௫)

இறைவல்லப மூற்றிற்று.

௬௯ - வது, பலவகை.

———*———

அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

சந்தமொன் றின்றி யிருக்க வேண்டுந்
தானே யழகிய னாக வேண்டு
மிந்த வுடம்பிலே காண வேண்டு
மெங்குந்தா னாகி யிருக்க வேண்டும். (௧)

காட்சியொன் றின்றி யிருக்க வேண்டுங்
காத்தின் மணிபோலக் காண வேண்டு
மீட்சி செலவற் றிருக்க வேண்டும்
விடாதே பற்றாதே யிருக்கவேண்டும். (௨)

உள்ளதே லாந்தானே யாக வேண்டு
மொன்று மின்றிற்கே யிருக்க வேண்டுந்
தள்ளினும் விள்ளா திருக்க வேண்டுந்
தழுவினு மேதான் றழுவ வேண்டும். (௩)

வித்தின்றி யேநாறு செய்ய வேண்டும்
விளையாதே யெல்லாம் விளைக்க வேண்டுஞ்
செத்தின்றி யேசெத் திருக்க வேண்டுஞ்
செயலுஞ்செய் யாமையுந் தீர வேண்டும். (௪)

அழியாத தாகாத தாக வேண்டு
மன்னிய மாகியொன் றாக வேண்டும்
விழியா திமையா திருக்க வேண்டு
மெய்யும்பொய் யும்மற் றிருக்க வேண்டும். ( )

அல்லும் பகலு மொழிய வேண்டு
மறிவறி யாமை யொழிய வேண்டுஞ்
சொல்லும் பொருளு மொழிய வேண்டுந்
* தூரிய தாயண்ணி தாக வேண்டும் )

உள்ளும் புறம்பு மொழிய வேண்டு
முறங்கி யுறங்கா திருக்க வேண்டும்
வெள்ள வெளியா யிருக்க வேண்டும்
விளங்க வெளிதா யிருக்க வேண்டும் )

பவகதி முற்றிற்று.

எ0 - வது, வாழ்க்கைப்பாடு.

———(*)———

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

தன்னிலே யெல்லா மிருக்கு மாகிற்
றானெல்லாத் துள்ளு மிருப்ப னாகிற்
பின்னிலன் முன்னில னுவ னாகிற்
பெரிது முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. ௬)

குணக்குன் றுதானு யிருப்ப னாகிற்
குணமிலி தானு யிருப்ப னாகி
விணக்கொன் றுமின்றி யிருப்ப னாகி
வின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. ௨)

* தூரியது தூரத்தது - தேசிகம்.

அண்ட மனுவாப் பெரிய னாகி
லணுவண்ட மாகச் சிறிய னாகிக்
கொண்டார்கள் கொண்ட வடிவ னாகிக்
கூடி முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (௩)

நல்லதுந் தீயது மல்ல னாகி
நானுந்தா னாகி யிருப்ப னாகி
யில்லது முள்ளது மல்ல னாகி
யென்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (௪)

ஒளியா யிருளா யிருப்ப னாகி
யுருவா யருவா யிருப்ப னாகிக்
களியாக் களியா யிருப்ப னாகிக்
கடிதின் முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (௫)

ஓரா யிரம்பே ருடைய னாகி
யுண்மைக் கொருபேரு மில்லை யாகில்
வாராதே நம்பால் வருவ னாகில்
வந்து முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (௬)

இருக்கச்செய் தேயெங்கும் போவ னாகி
யிளமைமூப் பின்றி யிருப்ப னாகி
யருக்கற்குந் தானொளி யாவ னாகி
யன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (௭)

சொல்லாதே சொல்லி யிருப்ப னாகிச்
சுகசுரு பன்னா யிருப்ப னாகி
யெல்லாமா யல்லா திருப்ப னாகி
யின்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே. (௮)

கண்ணின்றி யாவையுங் காண்ப னாகிற்
கையின்றி யேகைப் பிடிப்ப னாகி
லண்ணிய னாயதி தூர னாகி
லன்றே முடிந்ததென் வாழ்க்கைப் பாடே.

வித்தின்றி யேநாறு செய்வ னாகில்
விளையாதே போகம் விளைப்ப னாகிற்
சத்திய மும்பொய்யு மல்ல னாகிற்
சால முடிந்ததென் வாழ்க்கைப் பாடே.

எக்காலு மென்றுங் கெடாத வன்னே
யெப்பொரு ளுந்தந்த வப்பொ ருளே
* துக்காய்ப் புகுந்துநின் றாட வேண்டுந்
தொந்தசி யென்றுநின் றாட வேண்டும்.

வாழ்க்கைப்பாடு முற்றிற்று.

எக-வது, சந்நியாசம்.

---

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

செந்துகி லுந்தண்டு நீர்தரித்துச்- சிகைநா றெ
றுச் செபங்கள் பண்ணி, முந்திநீர் நீரினிற் கா
போல- முழுகித் திரியும் பிடாரரீரோ, பெருங்கா
மல நீரின்மூழ்கிப்- பிரளயகாலஞ் செபித்தக் கா
வந்துணர்வாய பிரமமாமோ-மதித்துநீர் பாரீர் 0 பி
* நீரோ.

---

* துக்கம்.

0 பிடாரர் பாம்பாட்டு வேஷகாரர்.

* நீரரோயென்பது - நீரோயென விகாரமாயிற்று.

லாவமலமாய - வாதிப்பிரம மகமகனு, விந்தச் * ச ௨௰
கள் வேண்டுமோதா - னெங்ஙனேசொல்லீர் ப் ராா
ணீரே. ரு)

சந்நியாசமூற்றிற்று.

எ௨ - வது, தண்டு.

இஃது

ஸ்வரூபானந்தசுவாமிகளது

———*———

குறள்வெண்செந்துறை.

கோணுந்தண்டன்றெங்கடண்டு - குருகாட்டிற்காணலாந்த ண்
காணுந்தண்டன்றெங்கடண்டு-கண்ணறியவேகத ட.

மூன்றுதண்டன்றெங்கடண்டு - மூலமாந்தண்டெங்கடண்
தோன்றுந்தண்டன்றெங்கடண்டு-சுருதிமுடிசொன்னத ட.

மடம்புகுதாதெங்கடண்டு- வைத்துவொங்காதெங்க ண்டு
சடம்புகுதாதெங்கடண்டு - சச்சிதானந்தமாந்தண் டு.

மரத்தண்டலவெங்கடண்டு - மதியுள்ளவர்கொள்ளுந்தண்
வரத்தண்டந்தாங்கியதண்டு- வுணர்வாகியவேகத ட.

சமயத்தைச்சாடியதண்டு - சகலமூந்தாங்கியதண்டு
சுமையற்றிருக்கின்றதண்டு - சுரூபானந்தனூர்தந்ததண்டே ரு)

தண்டு முற்றிற்று.

எ௩ - வது, தபோவனம்.

———(*)———

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

ஆரணக்கிளி கொஞ்சு தபோவன
மாக மக்குயில் கூவு தபோவனம்

---

* சடலை - வீண்செய்கை.

பூரணத்தரி வாழு தபோவனம்
பொருவில் சிறக்கன மாய தபோவனம். (௧)

சமயி கட்கதி தூர தபோவனஞ்
சம தமத்திரள் சார்வ தபோவனம்
நமையு மிப்படி வைத்த தபோவன்
தாத னாரரு ளாய தபோவனம். (௨)

தபோவன முற்றிற்று.

எசு - வது, ஊர்.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

உலக முழுது முகிழ்த்திட மெங்களூ
ரொருதே வையு மற்றிட மெங்களூர்
கலகா லிலை யாகிய தெங்களூர்
கரு ணாகர னார்கழ லெங்களூர். (௧)

இந்தி யக்கள்வர் சேர்வில தெங்களூ
ரின்ப நற்பயி ரோங்கிய தெங்களூர்
பந்த மற்றவர் பற்றிட மெங்களூர்
பார்வை யற்ற பரம்பொரு ளெங்களூர். (௨)

விரகர்க் கதி தூரம தெங்களூர்
விமலர் கட்கணி தாகிய தெங்களூர்
துரி யத்தொளிர் சோதிய தெங்களூர்
தூய்ய நற்கரு ணைக்கழ லெங்களூர். (௩)

ஊர் முற்றிற்று.

---

சிவமயம்.

# ௭௫ - வது, இருபிறப்பாளர்.

இஃது

# சிவப்பிரகாச சுவாமிகள்

ஸ்வரூபானந்த சுவாமிகளது.

---*---

## அடியிரண்டாய்த் தம்மிலொத்துவந்த குறள்வெண்செந்துறை.

ஒன்பதுவாசலுடையகுடிலை யுருவென்றுகொண்டிடாதே
யின்பவறிவேவடிவானாரன்றே விருபிறப்பாளராவார். ௧)

குப்பையாமிந்தக்கூரம்பையைத்தாமென்று கோலங்கொ
ளிப்பையைநீத்தறிவானவரன்றே விருபிறப்பாளராவார். ௨)

பொன்றுமுடம்பளவாகியிருப்பாரும் பூசுராராவார்களோ
வென்றுமுளவறிவானவரன்றே விருபிறப்பாளராவார். ௩)

பொல்லாவுடம்பளவாகியிருப்பாரும் பூசுராராவார்களோ
வெல்லாமுந்தாமாயிருப்பவரன்றே விருபிறப்பாளராவா ௪)

புழுவார்கூரம்பைதாமாகியிருப்பாரும் பூசுராராவார்களோ
வெழுவாயிறுவாயிலாதவரன்றே விருபிறப்பாளராவார். ௫)

முப்போதுநீரின்முழுகித்திரிந்தான் முனிவர்களாவார்களே
யிப்போதேமுத்தியடைந்தவரன்றே விருபிறப்பாளராவா ௬)

உளமதொருங்கவொருக்கியுபநிடதத் துச்சத்தொருபொரு
ளிளமைமூப்பின்றியிருந்தவரன்றே விருபிறப்பாளராவா ௭)

பருக்குமெலியுமிப்பாழுடற்காகப் பரந்துதிரிந்திடாதே
இருக்கின்முடிமேலிருப்பவரன்றே விருபிறப்பாளராவார் ௮)

மறப்புநினைப்புமிலாதவறிவே வடிவாய்மறந்துமினி
யிறப்பும்பிறப்புமிலாதவரன்றே விருபிறப்பாளராவார். ௯)

சிந்தைநோய்தீரச்சிவப்பிரகாசன் றிசழுத்திசத்தவல்ல
வெந்தைசுரூபன் கழல்சூடிலன்றே யிருபிறப்பாளராவார். (௧௦)

இருபிறப்பாளர் முற்றிற்று.

௭௬-வது, சிகை.

—— * ——

குறள்வெண்செந்துறை.

* வத்தாவொருகத்தியினாலே வைக்கின்றமயிர்ச்சிகையன்று
சித்தாயுளவெப்பொருளுக்குஞ் சிகையாவதுவேசிகைதானே. ௧

சிரைக்கின்றமயிர்ச்சிகையன்று சிகையாவதுசித்துருவாகி [னே.
யுரைக்கின்ற வெணாட்பொருளுக்கு முச்சத்தொளிர் வற்றதுதா

பரிக்கின்றவுடம்பிலெழுந்து மாள்கின்றமயிர்ச்சிகையன்று
தரிக்குஞ்சிகையாவதுமேலாய்த் தனதம்பரிலாததுதானே. (௩)

சிக்குற்றெரியிற்கருகாதுஞ் சிகையன்றுசிகைச்சிகைபோலே
பொய்கத்துவில்வேறறவொன்று புச்சத்தொளிருஞ்சிகைதானே.

மயிரின்சிகைகள்சிகையன்று மாயாமயமாகிவிரிந்த
வுயிருமலதும்பரமும்போ புச்சத்தொளிருஞ்சிகைதானே. (௫)

சிகை முற்றிற்று.

௭௭-வது, பூணூல்.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பாத்தாற் றிரித்தமெய்ப் பூணூ லெங்கணூல்
போத முடையவர் போற்றுநூ லெங்கணூல்
காத்தாற் றிரிக்கப் படாதநூ லெங்கணூல்
கருத்தைத் திரித்திறை காட்டுநூ லெங்கணூல். (௧)

---

* வத்தா - நாவிதன்.

காா்ப்பாசத் தாற்றிரி யாதநூ லெங்கணூல்
கண்ணேகண் ஞூகத் திரிக்குநூ லெங்கணூல்
வோ்ப்பாய் வெளுப்பிக்க வேண்டா லெங்கணூல்
வேதாந்த நூலால் விளம்புநூ லெங்கணூல்.

காத்திரத் திற்பூண் டிடாதநூ லெங்கணூல்
கழியா திடாதே யிருக்குநூ லெங்கணூல்
சாத்திர வாயா் தரியாநூ லெங்கணூ
றம்மை யுணா்ந்தோா் தரிக்குநூ லெங்கணூல்.

ஊனக்கண் ணாற்காண வொண்ணாநூ லெங்கணூ
லுடம்புடன் றாக்கொன் றிலாதநூ லெங்கணூன்
ஞானக்கண் ணாற்காண லாகுநூ லெங்கணூ
ஞாவிதத்தை யறுக்குநூ லெங்கணூல்.

கோத்தெல்லாந் தானே யுருவுநூ லெங்கணூல்
கூரம்பை யழுக்குப் படாதநூ லெங்கணூ
லோத்தெலா மாகி முடிந்தநூ லெங்கணூ
லுணா்சுரூ பானந்த வுண்மைநூ லெங்கணூல்.

பூணுநூல் முற்றிற்று.

எசு - வது, செட்டியாா்.

உ

சுரூபானந்த சுவாமிகளது

(*)

அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள் வெண்செந்துறை.

எட்டு மொன்பது மேழு மொன்றுமா
யிருந்த பொன்னெடுத் துரைத்திச் செட்டியாா்
தட்ட றக்கழஞ் சாக்கி ஞாா்காம்
வல்ல வல்லப மேயிந்தச் செட்டியாா்.

கடையி லேபதி ணூலு மாற்றெருக்கக்
கண்ணுறணி யாகக் கண்டு தந்தபொன்னுக்
கிடை யொன்றுங் காணேனென் செட்டீரோ
யிதென்ன மாயஞ் சொல்லீர் செட்டீரோ. (உ)

உறுமு யிர்பர முலகெ னும்பணி
மூன்றையு மொக்கத் தட்டு மாறி
வெறுமொரு செம்பொன் ணுக்கிநீர் செய்த
வித்தக மென் சொல்லீர் செட்டீரோ. (௩)

கடையிலு மிருப் பாரித்தச் செட்டியார்
கண்டிட மெங்குமுன் னுவரிச் செட்டியா
ரிடையிலு மெல்லாங் கொள்வ ரிச்செட்டியா
ரொழிலா ருஞ்சரு பானந்தச் * செட்டியார். (௪)

செட்டியார் முற்றிற்று.

உ

சிவமயம்.

எகூ வது, பெருமாள்.

இ ஃ து

ஸ்வரூபானந்த சுவாமிகள்

## சிவப்பிரகாசசுவாமிகளது

---※---

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

காலதிசை தேசமெல்லாங் கடந்துநின்ற பெருமாள்
கல்விக்கடல் வீழாமே காத்தருளும் பெருமாண்
ஞாலமுயிர் பரமென்ன நடித்தருளும் பெருமாண்
ஞானவிநோ தப்பெருமா ணம்முடைய பெருமாள். (க)

---

* பொன்வாணியன்.

உவலைமிகு சமயங்க ளொழித்தருளும் பெருமா
னொன்றாலுந் தமையாரு மொவ்வாத பெருமான்
கவலைமன மொருநொடியிற் கரிசறுத்த பெருமான்
கண்ணாக வேயென்னைக் காத்தருளும் பெருமான்

நாயேனைப் பொருளாக நயந்தருளும் பெருமா
னம்மைநம்மி லேநமக்கு நல்கியிடும் பெருமான்
பேயான வெனையாண்ட பெருங்கருணைப் பெருமா
பேணித்தொழு மடியவரைப் பித்தேற்றும் பெரும

தன்னடியே னெனவென்னைத் தாமளித்த பெருமா
டன்னைத்தான் றிருமேனி சாத்திவந்த பெருமான்
பொன்னடியென் சென்னியிலே பொறித்தருளும் பெருமா
புழுவின்றலை யபிஷேகம் புனைந்தருளும் பெருமா

அந்தரமே போகாமே யாண்டருளும் பெருமா
னெப்பொழுதைக் கப்பொழுது மாறாத பெருமா
னெந்தரமு மூவந்தாள விசைந்தருளும் பெருமா
னெப்படியென் றியம்பரிய வின்பவெள்ளப் பெரும

மூலபண் டாரத்தை வழங்கியிடும் பெருமான்
முத்திக்கின் கெனைஞான முடிசூட்டும் பெருமா
னாலமாம் பவப்பகையை யறுத்துவிடும் பெருமா
னடியிணைக டருஞ்ஞான பானத்தப் பெருமான்.

மாலயனுக் கெட்டாமை வளர்ந்தவொம் பெருமா
வன்றென்னைக் குடியாக வாழ்வித்த பெருமான்
காலையென் றலையின்வைத்த கண்ணுடைய பெரும
கைக்கனியே யெனவென்னைக் காட்டியிடும் பெரும

இறந்துநான் பிறக்கின்ற விடர்தீர்த்த பெருமா
னிமையவர்க ளோமாக்க வெனையாண்ட பெருமான்

மறந்துநான் பிறவாத வளந்தந்த பெருமாண்
மாறுதென் னுள்ளத்தே மகிழ்ந்திருந்த பெருமாள்.(அ)

ஆராத வன்புக்கே யகப்படுமெம் பெருமா
ளாகமதியைப் பிறர்க்களித்திட் டாட்டியிடும் பெருமாள்
வாராதே வந்தென்னை வாழ்வித்த பெருமாள்
மலர்ப்பதங்க டொழநல்ல மதிதந்த பெருமாள். (கூ)

அடியவர்த முளத்தச்சந் தவிர்த்தருளும் பெருமா
ளஞ்சாதே யெனையாண்ட வாண்பிள்ளைப் பெருமாண்
மிடியறவே யெனைப்பார்த்த வித்தகப் பெருமாள்
விழியாத வுறங்காத விழிதந்த பெருமாள். (க0)

திறலுறு பகைமூவர் குறும்பறுத் துலசேருந்
திகழ்ஞானத் திருவாணை செலுத்தியிடும் பெருமா
ளறிவுட னறியாமை கழலமிக் கொளிரு
மழகாருந் தனையன்பர்க் களித்தருளும் பெருமாள். கக

வஞ்சமோட வன்னியரை வல்வினையால் வலிந்து
வன்பவபா சச்சிறையில் வைத்தருளும் பெருமா
ளஞ்சுவன்ன பூதமா யகிலங்கண் முழுது
மறிவாகத் திகழ்செங்கோ னடத்தியிடும் பெருமாள்.()

இந்திரன்வா னவர்மூவ ரிறைஞ்சியேவல் செய்ய
வென்றுளிருந் திடும்பெருமா ளெனையாண்ட பெருமா
ளந்தமிலா ஞானப் படைவெள்ள முழுது
மானந்தப் படைவீடு முடையவெம் பெருமாள். (கங)

எதிரின்றி யுலகேழு மினிதாளும் பெருமா
ளரியானென் னதற் றிடவெனக் கெளிவந்த பெருமாள்
சதுரொன்று மனத்தார்க்குச் சலஞ்செய்யும் பெருமா
டவராச ராசர்தஞ் சுருவொம் பெருமாள். (கச)

முழுதுமா மடியன்பர் முடிசூட்டும் பெருமாள்
முதலிடை முடிமூவ ராண்டெழுதிய பெருமா
ளழுமன்பி லவருள்ளத் திருளாகும் பெருமா
ளழகாருஞ் சிவப்பிர காசரெம் பெருமாள். (க

சித்தமண் டபத்தன்பாந் திகழ்சிங்கா சனத்தே
சிதையாத வலிவாகித் திகழ்ந்திடும் பெருமாண்
மத்தனு மெனையுமோர் பொருளாகப் புவியின்
மனிதனும் வலிந்தாட்கொண் டருளிய பெருமாள்.

வலியாரு மெளியாரு மாய்வாரா வண்ணம்
வழுவாம னெறியன்பால் வளர்த்திடும் பெருமாள்
சிலைபோலு முளமெல்லாஞ் சிவமாக்கும் பெருமா
டேவரா சச்சிவப் பிரகாசப் பெருமாள். (க

பெருமாள் முற்றிற்று.

## ௪௰ - வது, முத்திரை.

---

அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த
இரட்டைக்குறள்வெண்செந்துறை.

செத்துப் பிறக்கக் கொடாதெங்கண் முத்திரை
செம்பிற் செறிக்கப் படாதெங்கண் முத்திரை
யத்தத்தி லுத்திர மாமெங்கண் முத்திரை
யாலின்கீழ் நால்வர்க் கரன்சொன்ன முத்திரை

எண்ணி விலைக்கிட் டிடாதெங்கண் முத்திரை
யெண்ணுவா ரெண்ணங் கடந்திட்ட முத்திரை
பண்ணி யழிக்கப் படாதெங்கண் முத்திரை
பார்ப்பறப் பார்க்கும் பரஞான முத்திரை. (

வெண்ணூலிற் கோவைப் படாதெங்கண் முத்திரை
வேதமா நாலின் விளைகின்ற முத்திரை.
பெண்ணா ணலாத பெருமான் றன்முத்திரை
பேசற் கரிய பெரியோன்றன் முத்திரை. (ங)

முத்திரை முற்றிற்று.

உ

சிவமயம்.

௮௧-வது,

## சுரூபானந்தசுவாமிகள்

## திருவெம்பாவை.

---

வெண்டளையான்வந்த - இயற்றரவிணைக்
கொச்சகக்கலிப்பா.

எல்லையிலாப் பாவகத்தா லெத்தனையோ காலமுநான்
மல்கிய வல்வினையா மாயமலர்ப் பள்ளியிலே
புல்லித் துயின்று புரையாய பொய்ப்பிறவித்
தொல்லைக் கனவிற் றுயருழந்து சோர்வேனை
யல்லிக் கமலத் தயன்மா லறிவரியான்
கல்லைப் பிசைந்து கனியாக்கும் விச்சையினாற்
சொல்லற்று நின்று சுடரு முணர்வாக்கி
மெல்லத்தான் மிக்கானைப் பாடேலோ ரெம்பாவாய். க

நில்லாத செல்வத்தை நித்த மெனுங்கருத்தாற்
பொல்லா விஷயத்தே புக்குறங்கு கின்றேனைச்
சொல்லான் மனத்தாற் றொடர்வரிய நற்சிவம்வந்
தெல்லே யெழுமிகழு மேனி யதுசாக்கி

நல்லாளோர் பாகனாய் நாதன் வலஞ்சுழியான்
வல்லாள னென்னை யெழுப்பி யுணர்வாக்கி
யொல்லாத பாவனையி னுள்ளே யுறவழுக்கி
யெல்லாங் கழற்றியவா பாடேலோ ரெம்பாவாய். )

அஞ்ஞான மூடி யகல்கின்ற வாரிருளாம்
பொய்ஞ்ஞால மென்னும் புரையிற் றுயிலாதே
பைஞ்ஞா ணரையானற் பார்ப்பதியோர் பாகத்தா
னெஞ்ஞான முங்கடந்த வெந்தை வலஞ்சுழியான்
செஞ்ஞாயி றென்னத் திகழும்பொற் சேவடிக
ளஞ்ஞான மாய வெழுந்தது காணிழையீர்
மெய்ஞ்ஞான மாகநமை வேதித்த மெய்யருளே
பஞ்ஞா வுளமுருகிப் பாடேலோ ரெம்பாவாய். )

அறியாமை யென்னு மழியாத மாயப்
பிறியா வினையினைந் துஞ்சுதியோ பேதாய்
முறியாத வின்ப முழுவெள்ள முன்றோன்
செறிவானைத் தானாகச் செய்யும் பெருமான்
சிறியோமை யாண்டருளுந் தேசிகனாய் வந்தான்
வெறியார் குழன்மடவாய் வெய்யவிருண் மாண்ட
தறிவா யெழுந்தது காணனந்த வெள்ளக்
குறையா நிறைவினையே கூறேலோ ரெம்பாவாய். )

கோதாடு மின்சொற் குதலைக் கிளிமொழியார்
வேதாள மையலிலே வீழ்ந்தே கிடப்பேனை
ஞாதா வருஞ்சிவ ஞாதன் வலஞ்சுழியான்
பாதார விந்தப் பராவமிர் தம்பணித்து
மாதா வெனமுன்னி வந்தெடுத்தாட் கொண்டருள
பாதாள மேழுலகு மேனிலமும் பாவெவையு
நீதா னெனவருளி நித்தமாந் தன்னிலைமை
யோதாமை யோதியவா பாடேலோ ரெம்பாவாய். )

மேன்மைக்குலங் கல்வி விழுப்ப மெனுஞ்செருக்கான்
மானமெனு மைம்பலுளே வாளா கழிவேனை
நான்மறைக ளோடரிய நற்சிவனோர் மானிடனாய்
வானவருங் காணா மலரடியென் சென்னிமிசைத்
தானமர வைத்துத் தமியேனை யாண்டருளி
ஞானமுடன் ஞேயமற ஞாதுருவஞ் ஞானமழித்
தான முழுதினையு மங்கே யறவிழுங்கித்
தான்முழுது மானவா பாடேலோ ரெம்பாவாய். (சு)

மண்ணாகி வானாய் வெளியா யெரிநீரா
யெண்ணாகி யெல்லா வுயிர்க்குயிராய் நின்றானை
நண்ணாது நாயே னடலைப் பிறவிதனிற்
புண்மூடி வைத்த புழுவார் குரம்பையினின்
றெண்ணா தழிவேனை யெந்தை வலஞ்சுழியான்
கண்ணா ரமிர்தன் கழல்காட்டி யாண்டருளி
யுண்மேணை ருணர்வாக்கி யோர்வரிய பாவனையும்
பண்ணா தழித்தானைப் பாடேலோ ரெம்பாவாய். (எ)

முத்தனை மூலத் தனிச்சுடரை முற்றுமாஞ்
சுத்தனைச் சோதி சுரூபானந் தக்கடலை
யெத்தன்மை யோருக்கு மெய்தரிய சேவடியை
யித்தன்மை யோர்சிறியோ ரென்று தளிக்கருளும்
பித்தனைப் பேத மபேத முபயமற
வொத்துணர்வே யாக்கி யொழியா நிறைவளிக்க
நித்தனை நின்மலனை நீடொளியை நிற்குணனை
யத்தனை யாரமிர்தைப் பாடேலோ ரெம்பாவாய் (அ)

தானே முழுதாய்த் தழைந்துமுந் திற்சிதையா
வானோர் பெருமான் வலஞ்சுழியா னென்றென்ற

ஞானே யரும்பி விழுந்தெழுந் தோவலறேன்
வானோரு மண்ணோரு மற்றெவருந் தாமறியாத்
தேனார் மலரடியென் சென்னி யினிற்பொறித்துத்
நானாகி நின்ற நடுவு நிலையழித்துத்
தேனே யமிர்தமே கன்னலே சே ரின்சுவையே
கோனேயாய் நின்றவா கூறேலோ ரெம்பாவாய்

கல்வியெனும் பல்கடலிற் கானலமிர் தம்பருகி
யெல்லையில் பல்சமயத் தெய்த்தே கழிவேனை
யல்லலறத் தன்கருணை யாரமிர்தத் துள்ளமுக்கி
நல்ல மலர்ப்பாத நாயேற் கினிதளித்துச்
செல்ல லறத்திருத்தித் தேற்றி யுணர்வாக்கி
மெல்ல வியோமத் தழுத்திமிகு வேகத்தே
செல்ல வளித்த சிவபெருமான் றன்கருணை
யெல்லை யிலாதவா பாடேலோ ரெம்பாவாய்.

கற்போலு நெஞ்சங் கரையக் கருதரியா
னிப்பா லுருவாகி யென்னுட் புகுந்தருளித்
தற்பாற் படுத்திச் சதுரழித்துத் தானெனக்குச்
சொற்பான் மனப்பாற் சுருதிப்பா லென்றியம்பு
மப்பாலைக் கப்பாலவ் வானந்த மாக்கியவப்
பொற்பே நினைந்து பதைத்தலறிப் போதகனை
வப்பா வடியேனை யாண்டகுரு வானந்தா
வொப்பாரி லாதேயென் றூடேலோ ரெம்பாவா

களியாத வின்பக் களியாரு மன்பார்க்
கொளியாரு மல்லாதார்க் குள்ளத்தே நின்றும்
வெளியாகா னேயேனை மீட்டவா சொல்லிக்
களியாது பாவியேன் கல்லென்ன நெஞ்சி

ஞொளியாகி யுண்ணின் றுருக்கிக் கரைத்தா
னளியோ வளவில்லை யந்தோ தரியேன்
றெளிவாகி யொத்துணர்வாய்த் தேனூறுஞ் செய்ய
வளிசே ரமிர்தைமுகந் தாடேலோ ரெம்பாவாய்.(௧௨)

ஒன்றாகி வேறா யுருவா யருவாகி
யன்றாகி யாமா யழிவாகி யாக்கமுமாய்க்
குன்றாத சீராய்க் குறைவாய் நிறைவாகி
நின்றா ளுயிர்கட் குயிரா யொழிவின்றி
யென்றாலெனெம்மைப்போன் மானிடனாய்வந்தருளிப்
பொன்றாமை நாயேனைப் போதம் வடிவாகத்
தன்றா ளிணையருளி லல்லது சாரவொண்ணா
வென்றாதை யென்னரசென் றாடேலோ ரெம்பாவாய்

எங்கோன் வலஞ்சுழியா னென்றென் றிராப்பகலா
நங்கோல் வளைசோர நாயேற்கு முன்வந்து
தங்கோலங் காட்டித் தமியேற் கறிவருளி
யங்கே யமிர்தூறு மானந்தத் துட்கலந்
திங்கேயெனைச்செய்ததென்னென்றெடுத்துரைப்போ
மங்கோ ரவனை யறியாதார் மாலயனு
மிங்கே யிவைறிதல் பித்தென் றுலகாற்ற
னங்கோ னருட்கடல்சேர்ந் தாடேலோ ரெம்பாவாய்.

ஆரா வமிர்தை யடியேற் கெளிவந்த
பேரா வொளியைப் பிதற்றி நினைதோறு
நீரா வுருகியெ ஞவி நெடுங்கண்கள்
சோரா விதிர்விதிராச் சொற்றளர்ந்து மெய்யரும்பத்
தாரா வெனவலறேன் றடியேன் மேன்மேலு
மாராத நாளுன் னடியார்கண் முன்னங்கோ

தீராத தீவினையைத் தீர்த்த சிவக்கனியே
யாராத வன்பை யருளேலோ ரெம்பாவாய். ( )

பொன்னா ரடியானே போற்றினர்க்குமெய்ப்பொரு ர
யன்னா ரமிர்தத் திரளே யடியேனைக்
கன்னா ருரித்த கருணைக் கடங்கடலே
யன்னேனா னுவா தரியே னழிந்தொழிந்தேன்
பன்னா வமிர்தப் பரங்கருணைத் தேன்பருகி
நின்னா வடியவரு நீயு மெழுந்தருளி
பென்னுவ றீர வெழிலாருங் கூட்டத்தை
மன்னேயருண்மற்றுவேண்டேலோரெம்பாவாய். ( )

வானோர் பிரமன் புரந்தரன்மா மற்றெவருங்
கானே படர்ந்துலர்ந்தும் புற்றெழுந்துங் காண்பரி
னானே வடிவா யுழலுமெனைத் தான்வந்து
தேனார் மலரடியென் சென்னி யினிற்சேர்த்து
நானேநீ யென்றருளி நம்மையழிக் காட்கொண்ட
கானே யமிர்தே கரும்பே யெனவிரும்பி
யூனே யுருகி யொழியாத நற்சுரூபத்
தேனே பருகிமகிழ்ந் தாடேலோ ரெம்பாவாய். ( )

தோற்றும் பொருண்முழுதுமென்கண்ணிற்றோற் றி
றுற்ற வனைவுமுழுதும் யானே பிறிதில்லைத் ர்
தோற்றும் பொருளுருஞ் சுரூப மெனவுணர்த்தா
யேற்றிய விப்பொருணீ யாமாறெ னென்றோர்க்குத்
தோற்றுவதுன்கண்ணாலே பார்த்துத் துணியினல் ற்
சாற்றுவ தென்னாங்கோ சங்கரா வாற்றிலேன்
றேற்றத் தெளிவே திகழ்ந்தருகா வென்மனக்க
லாற்றத்தை யொல்க வருகேலோ ரெம்பாவாய். ( )

அண்ணா வமிர்தே யடியேனை யாண்டருளிக்
கண்ணாகி யென்றன் கருத்தழித்த கற்பகமே
யுண்ணா வமிர்தே யுடையானே யுன்றனைநான்
கண்ணாரக் கண்டு களித்தேன் கருதரியாய்
பெண்ணேவலியுருவோ வாணோபிறவெவையோ[மான்
வெண்ணேயியாதென்றார்க்கென்னுனைக்கேனெம்பெரு
விண்ணோ ரயரா வினையேனை யாண்டதிற
மண்ணோ வடியேற் கருளேலோ ரெம்பாவாய். (க௯)

போற்றியென் சென்னி பொலிந்தநற் சேவடிகள்
போற்றியென் சிந்தைப் புரையறுத்த பொன்னடிகள்
போற்றியென் னுள்ளம் புகுந்தமலரடிகள்
போற்றியென் னுள்ள மழித்தசெம் பொற்கழல்கள்
போற்றி யுணர்வாகி நின்றபொற் றாமரைகள்
போற்றி வியோமமுமாய்ப் போயிருந்த பூங்கழல்கள்
போற்றி குறையா நிறையாத பேரின்பம்
போற்றி புகழ்ந்துருகி யாடேலோ ரெம்பாவாய். (௨0)

திருவெம்பாவை முற்றிற்று.

அ௨ - வது,

ஸ்வரூபானந்த சுவாமிகள்

## இரண்டாந் திருவெம்பாவை.

வெண்டளையான் வந்த

இயற்றரவிணைக் கொச்சகக்கலிப்பா.

ஓத வரிநென் றுபரிடங்க ளோதுபொருட்
பாத மளித்த பரிசினை யாம்பாடப்
பேதையர் போலத் துயிலுதியோ பெய்வளையாய்
நாதன் றிருநாமங் கேட்டலுமே நாட்டங்க

ளோத மெடுப்ப வுரோமஞ் சிலிர்த்துருகுஞ்
கூதன கொங்கைச் செயல்சொல்ல லாமளவோ
வீதே யருள்பெற்று யாரோ யிவளல்லான்
மாதே வனைவியந்து வாழ்த்தேலோ ரெம்பாவாய். )

சிட்ட மறைப்பொருடன் சீரடியார் கூட்டத்தை
யெட்டனைப் போதும் பிரியா யிருகால
மட்டலர் கோதாய் வளருதியோ மாதரீ
ரொட்டியோ சந்துக் கிரவிக்கு மின்மினியோ
கட்டக் குளப்படிநீர் கங்கைப் புனற்கொப்போ
வட்ட வுருவ னடியர்குழா நான்கூடு
மட்டமோ வீதொழிய வாய்வந்த வாறுங்க
ளிட்டமே சொல்லு மெமைமையேலோ ரெம்பாவாய் )

இந்திர சாலப் பிறப்பறுக்க வெம்போல
வந்த பெருமானை வாழ்த்துதொறும் வாழ்த்துதொ. ந
செந்தழல் சேர்மெழுகாஞ் செல்வி கடைதிறவா
யெந்தாமு மன்புக் கிசையாதே யாயிடினு
மூந்துமுறை பொய்யாமை யுண்டாக வெங்கட்குங்
கந்த மலர்க்குழலி கைதவ மல்லகாண்
சிந்தையி லுண்மை திருவுள்ள மேயறியு
மெந்தம் விருப்பமுமிங் கீதேயேலோ ரெம்பாவாய். )

திண்ணமா வாறே வெலியோ தெரிவையோ
வண்ணந்தான் செய்த்தோ வெளிதோ மரகதமோ
வண்ணிதோ சேய்த்தோ வருவோ வுருவோவெ
றெண்ண மறியா திமையோர்க ளோமாக்கள்
கண்ணெதிரே வந்தாண்ட கண்ணைக் கருமணியை
பண்ணைச் சுவையின் பயனையாம் பாடவுன்

கண்ணுந் துயிலுமோ கண்ணா ரமிர்தான
வண்ணனை வாயாரப் பாடேலோ ரெம்பாவாய். (ச)

வாட்டடங் கண்ணி வளருதியோ வானவர்கள்
கேட்டு மறிவரிய கேடில் விழுப்பொருடான்
காட்டிக் கழலெமது கண்களிப்பச் சென்னிமிசை
சூட்டிக் கரணங்க ளெல்லாமுந் துஞ்சும்வகை
மீட்ட விரகுந்தன் மெய்புணர் மெய்ஞ்ஞான
நாட்ட மளித்த நலனு நவிறேறும்
வாட்டடங் கண்களிப்ப வாயார நாம்பாடித்
தீட்டு நுதலாய் திறவேலோ ரெம்பாவாய். (ரு)

எல்லை யிருவர்க் களப்பரி தாய்நின்று
சொல்லும் பொருளுங் கடந்த சுடரொளிந
மல்லற் பிறவியற வாரருளா லைம்புலனும்
புல்லத் திருமேனி சாத்திப் பொலன்கழறந்
தெல்லையி லின்பத் தழுத்தி யெமையாண்ட
வல்லபம் பாடி யழுத்த மடமாதே
கல்லு முருகாதோ கண்ணுக்குங் கண்ணானை
யெல்லாமா யல்லானைப் பாடேலோ ரெம்பாவாய். ()

வேத முடிவுக்கு மேலாய விண்ணவர்க்கு
மீதென் றுணர்வரியா னெங்கட் கெளிவந்த
நாதனை யல்லா னவிலாய்நல் லன்பர்சொலுங்
கீதமலாற் செவியிற் கேளாய்நீ கேட்டொறுங்கண்
ணோதை மெடுக்க வொழியா புடையாள்நீ
ரோத வுணரா துலகத்தார் போனீயுந்
சீத மலரமளி சேரப் பெறுதியோ
மாதே துயிலுணர்ந்து வாழ்த்தேலோ ரெம்பாவாய். ()

ஆதி மறைப்பொருட்கு னன்புடைமை யெப்போ
மாதே குலவும் பரிசு மறந்தனையோ
மேதினியோ ரந்தரத்தி லுள்ளோர் விசும்புள்ளோ
பாதலத்தோ ரியாவர்களுங் காணப் பரஞ்சுடரிப்
பூதலத்தே போந்தருளிப் பொன்னங் கழலளித்த
நீதியெலா நின்று நெடும்போது நின்கடைக்கே
யோத வுணரா யுடையானுக் கன்புடைமை
யீதே யிருக்கும் பரிசேலோ ரெம்பாவாய் ( )

மாயவற்கும் போதின் மறையவர்க்கும் வானவர்க் ம்
மாயு மறைக்கு மரியா யெமக்கெளியாய்
நேயமிக நின்னை நினைதோறு நெஞ்சுருகத்
தூய சுரூபனென்றியாஞ் சொல்லுந்தோ றுங்கண் ர்
பாய நினது பழவடியா ரெங்கட்கு
நாயக ராகவடி நாயோந் தலையாலே
தூய வவர்பதத்தா லேவுந் தொழில்செய்ய
வேயிற் பிறவி யினிதேலோ ரெம்பாவாய். ( )

ஆராய மேனு ளடியு மணிமுடியு
நாரா யணருக்கு நான்முகர்க்கு மொண்ணுத
சீரானைச் செப்பும்வகை யென்னென்று முன்னம ம
யோரா யிரமுகத்தா லோத வுருநாம
நேராக வில்லாத நிற்குணனைச் சொற்கொடுநாம்
பேராயிரமுடையா னென்றுணர்த்தோம்பேதைக ர்
லோர்நாம மோருருவ மொன்றுமிலா வொண்சுட ர்
யார்நாம் பரவ வறிந்தேலோ ரெம்பாவாய். ( )

வாச மலர்ப்பொய்கை புக்கு வளைக்காமுந்
தூசுங் கலனு மொலிப்பத் துடுமெனப்பாய்ந்

நீசர்க்கு மீசனென் றேமறைக ளோத்துகின்ற
தேசன் றிருமேனி சாத்தித் திருவருளாற்
பாச மறநயனப் பங்கயத்தாற் பார்த்தருளிக்
கூசாமற் சென்னிமிசை வைத்துக்குறைகழல்கள்
வாசக மொன்றினால் வாசாம கோசரத்தைப்
பேசிய வாபாடி யாடேலோ ரெம்பாவாய். (கக)

ஆர்த்த பிறவி யறுத்தருள வாரருளாற்
பார்த்த திருநயனப் பங்கே ருகம்பாடிச்
சேர்த்த திருக்கை மலர்பாடிச் சென்னிமிசை
யாத்த மாவைத்த வருட்சே வடிபாடி
யோர்த்த வருமறைக ளோரா யிரமுகத்தா
லேத்த வரும்பொருளு மீதென்று காணவொரு
வார்த்தை யருள்செய்த மாவல் லபம்பாடிப்
பூத்த புனற்றடம்பாய்ந் தாடாலோ ரெம்பாவாய்.(கஉ)

அங்கயன்மே லாதலா லாருயிர்க்கா தாரத்தா
லெங்குந் துறையா யிருத்தலான் முத்திவருஞ்
சங்கங் குலவுதலாற் றண்ணளியாற் றன்கணே
யங்கமல மாதலா லங்கமலம் போக்கலா
லங்கழுநீ ருண்மையா வந்தணர்கொண் டாடுதலா
லெங்கோனே யென்ன வெழிலா ரிருஞ்சுனையின்
மங்காமை நம்மை வலிந்தாள வந்தருளும்
பங்கே ருகம்பாடி யாடேலோ ரெம்பாவாய். (கங)

ஐயா யுரு வுருவா யுருவையாய்
வாசமாய் வாக்காய் மனமாகி மன்னுயிராய்ப்
பாசமாய் வீடாய்ப் பகலா யிரவாகி
யீசனு யாவர்க்கு மெல்லாமா யல்லாத

தேசன் சிறியேற்குச் செம்பொற் கழலளித்த
நேச வருளை நினைந்து நினைந்துருகி
ஈசனை வாயார வெப்போதும் யாம்பாடி
வாச மலர்த்தடம்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய் கஅ

வானைய னம்பணிக்கும் வாழ்ந்து மனங்கவர்ந்த
ஞானவிபெண் ணல்லா ளெனினு மழகியவா
காணீரொன் கண்ணுலே யென்னுங் களிகூரு
நாண மிழந்தா ளறுஞலார் தங்கையுங்
காணுள் கலைபேணுள் கற்பனையுந் தான்கேளா
ளேனு முறக்கு மொழிந்தாண்மற் றம்பனையும்
பேணு ளிவளையிங்ஙன் பித்தேற்றும் பெற்றியர் ந
தாணுவை யாம்பாடி யாடேலோ ரெம்பாவாய் (ரு)

வானகமும் வையகமு மெல்லா மறைப்பொருட ன
போனக மாக்கியவா போலப் புணரியெலாம்
பானம் பருகி யெழுந்து பரன்போல
வானை யறநிறைந்து மாமாயா வல்லியென
மேனி மிகக்கருகி மெய்யுளம்போல் வில்விட்டு
ஞானம்போன் மின்னியரு நான்மறையி னோர்மு நித்
தானந்த மில்லாதான் றந்தவா னந்தத்தை
மானப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய் கூ)

வானேருங் கோனு மலரோனு மாலோனு
மேனேருங் காணு விறைவன் றிருவருளான்
ஞானே தயமுன்னர் ஞாலம்போன் ஞாயிறெனு
பானு தயத்திற் பனிமதியங் காரகையா
மீனே குவபோல் விழியால் வினைநீக்கி
யூனே ருயிருடைமை கைக்கொண் டொருமொ ற்

ஞானகத் தந்தருளுந் தம்பிரான் றாள்பாடி
மானே மலர்த்தடம்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய் ()

மதியாநஞ் சென்னிமிசை வேதா கமங்க
ளிதிகாச மெல்லா மெடுத்துரைத்த வின்பக்
கதிகாண நாமுமெலாங் கைக்கனிபோற் காட்டி
விதியோனு மாலும் விடையோனு மொன்று
முதியோர் பரவிவரு மூவர் பதமு
மதியே மெனநம்மை வாழ்வித்த நாதன்
பதியா நமக்களித்த பங்கயத்தாள் பாடி
மதுவார் மலர்த்தடம்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்.

அந்தா மரையயனு மாலு மறிவரிய
செந்தா மரைப்பதநஞ் சென்னி யுறச்சேர்த்திச்
சிந்தா குலந்தீரச் செய்து செழுஞான
நந்தா வமிர்தான தன்னைஞா னக்கண்டந்
திந்தாபா ரென்றருளி யிப்படியே நாம்வாழத்
தந்தானைப் பாடித் தழுதழுத்து நாட்டநீர்
சிந்தா வுருகாநஞ் சிந்தை களிகூர
நந்தா மலர்த்தடம்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். ககூ

அன்னையே வேண்டு மசப்போ லடியேங்க
ளுன்னை யிரப்போ முவந்துளந் துள்ளத்தா
னின்னன்பர்க் காளாயா நித்தம் பணிசெயநின்
பொன்னங் கழல்கட் புலன்விட்டுப் போகாதே
மன்ன மனங்களிப்ப வாயார வாழ்த்திடநின்
சின்னங்கள் கேட்பச் செவிசிந்தை தீமொழிகே
யென்ன வருக வருளுதியே யெம்பெருமா
னின்னம் பிறக்கை யினிதேலோ ரெம்பாவாய். (உ0)

தாரணி வான்முழுதுந் தந்தாய் சரண்போற்றி
பாரணையப் பண்ணுமின் பாத மலர்போற்றி
யோரணுவா மண்டமென வோங்கும் பதம்போற்றி
நேரணுவு மண்டமா நேரியதாந் தாள்போற்றி
காரணத்தின் காரணமாங் கண்ணே கழல்போற்றி
யாரணத்தின் மெய்ப்பொருளா மாதி யடிபோற்றி
பூரணபோ தச்சுரூபா போற்றியடி போற்றியெங்
கோரணவு மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய். க)

இரண்டாந் திருவெம்பாவை முற்றிற்று.

இத்திருவெம்பாவைகள் இறுதியிலேலோ ரெம்பாவாயென்று கூன்பெற்றுவந்த வெட்டடிப் பஃறொடை வெண்பாவுமாகும்.

அரு - வது,

இறைவற்காண்டற்கருமை

இஃது

சிவப்பிரகாசசுவாமிகளது

——(*)——

அறுசீர்க்கழிநெடிலடியாற்வந்த ஆசிரியவிருத்தம்.

மந்திர வேதனை வாவென மற்றிமை யோரும்போ
முய்த்தறி யாத பாதமெ னுச்சியின் மீது நாளிட
வித்தக வேட மாய்வரு மெய்க்குரு நாத னூர்தனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காணலாகு க.

சத்தற வாத மின்பெருங் கற்பனை நீர வேயொரு
பத்தினி லேபபரா பர மற்புத மாக வேயருள்

சித்தநல் வேட மாய்வருஞ் சிற்சுக நாத னார்தமை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே.

பெத்தமும் வீடு மாயலை பித்தற வேப ராபர
மித்திற மோரொ ணாவிமை யிற்றெளி வாக வேசெய்து
சித்தமெ லாநி றைந்துநித் திந்திடு தேசி கேசனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே.

சித்த விகார வாதிகள் செற்றிய வாத நீளிருண்
மைத்துறுவேனை வாவென வைத்துணர்வாகவேயருள்
சுத்த கிருபாளு வாய்மறை சொற்குரு நாத னார்தமை
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே

சுத்த மகாசு கோததி துற்றருண் மேரு மாமலை
மத்துற நீச னேனையு மற்றடி யார்க ளோடுற
வுய்த்திங்ஙன் வாவெ னாவரு ளொப்பறு தேசிகேசனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே.

மெய்த்தருண் மேனி யாவொரு வித்தக வேட மாகிய
சித்தனு மாயு ளேமிறை சிற்பர நாத னார்தமை
யெத்தனை யூழி யூழிக ளெத்தனை மாத வங்கள்செய்
நித்தகு தேசி கேசனை யிப்படி காண லாவதே. (௫)

ஒத்துமொவ் வாது மோதிய வுட்டெளி யாத வாதிகள்
கத்தை விடாவொ ணாவுரு கற்பனை மாள வேசெய்த
வித்தக வேத போதனை மெய்க்குரு நாத னார்தமை
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே.

நித்தம தாகி யாரண நிச்சய மாய நீதியை
யுய்த்தகைமேவுமாமணியொப்பனவோர்சொலாலருண்
முத்தனைமூட னேனையு முற்றிடு தேசி கேசனை
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே.

பத்தியு மோர்வு மேதுமில் பட்டிய தாகி யேசெது
மத்தனை நாயி னேனையும் வைத்தடி மாதி லாதெழு
சித்தமிர் தாக வேசெய்த சிற்பர நாத னார்தமை
யெத்தனையூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே

மெத்தப ராத மேசெய்து மெய்க்குரு டாரு வேனை
மூய்த்தருளேசெய்தோலவென்றைப்பில்திருபாமகோ
சித்தருள் சேர்சி காமணி செற்று சிவப்பிர காசனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே

இறைவற்காண்டற்கருமை முற்றிற்று.

அசு - வது.

—*—

## அருட்டிருப்பள்ளி யெழுச்சி.

எண்சீர்க்கழிநெடிலடியால்வந்த ஆசிரியவிருத்தம்.

போற்றிநன் மாமறை யிறமர் பொருளே
புரையற நிறைந்தொளிர் போதநன் மாதே
தோற்றமு மிறுதியு மறநிகழ் கடலே
துணையிணை யிறந்துள நிறைந்தநா னொளியே
சீற்றமின் முனிவர்க டினைத்தெழுந் தேனே
சிவப்பிர காசனைப் பிறிவற நிகழு
மேற்றிய பொருளொனு மெழிறரு நகையே
யிறையவ னேபள்ளி யெழுந்தரு ளாயே.

உதயநன் கிரியினை யணுகினன் பரிதி
யுடுமதி மழுங்கின வம்பர்வந் தடைந்தார்
திசைகளினன் புகழுரி யயனேடிந் திரனுந்
திசைதொறு நிறைந்தனர் திகழ்தரு மடியா

றிதயமண் டபத்தினி லெழில்கொளு மறிவா
மெங்கைநற் சிவப்பிர காசனல் 'லெழில்சேர்
சுதையினின் சுவையே துறவியின் றுணையே
சுடரொளி யேபள்ளி யெழுந்தரு ளாயே. (௨)

நற்றடங் குவளைகண் மலர்ந்தன குருகு
நலம்பெறச் சிலம்பின நான்மறை முழக்க
முற்றன பல்லிய மொலித்தன வெங்கு
மோங்கின தும்புரு நாரதர் கீதம்
பற்றற நினைபவர் பருகிடு மமிர்தே
பரமன திருவெனும் பகருதற் கரிய
நற்றவ மேயென துற்பவக் கடுவே
நாயகி யேபள்ளி யெழுந்தரு ளாயே. (௩)

ஒளியினுக் கொளியே யுயிருனுக் குயிரே
யுருகிடு முளத்தினி லோவிலா வுணர்வே
யளியினுக் களியே யகிலபூ தங்கட்
கன்னையு மாயத்த னாகினின் றருளே
தெளிவினிற் றெளிவே சிவப்பிர காசன்
றிகழ்திரு மேனிய ளாஞ்சிறப் புடைய
களிமயிற் பெடையே காரணப்பொருளே
கனங்குழை யேபள்ளி யெழுந்தருளாயே. (௪)

காலமு மூழியு மாகிநின் றவற்றின்
கருவது வாயவை கடன்றநற் பகமே
சீலமு நோன்புமில் சிறியவென் றனக்குச்
சிவநெறி யருளிய தேசிகத் திருவே
மூலமு மாய்முடி வாய்முடி வில்லா
முத்தனைப் பெருநல முழுதருண் முகிலாய்

கோலநன் குயிலே குருமணிக் குகையே
கோமள மேபள்ளி யெழுந்தரு ளாயே. ௫)

ஐம்பெரும் பூதமு மவற்றதி பதியா
மைவரு மாயவை யன்றிநின் றாளே
யும்பரு முணர்வரி தாயவொண் ணிதியே
யுலகமு முயிர்களு மாய்விரிந் தாளே
நம்பனற் சிவப்பிர காசன தொழில்சேர்
நாடரும் பரம்பொரு ளாகிய நறவே
யென்பர மெனவெனை யென்றுகொண் டாளே
யின்னமிர் தேபள்ளி யெழுந்தரு ளாயே. ௬)

கனவினு மமரர்கண் டறிவருங் கருணைக்
கழலிணை கழிகடை யென்றனக் கருளி
நனவினின் வினவிவந் தாண்டுகொண் டாளே
நாயகி யேநற வார்குழ லமிர்தே
சொனமறை முடிவுக டுதிசெயும் பொருளே
துரியமு மிறந்துசொற் கழிந்த தத்துவமே
புனமயி லேயிறைப் போதினும் பிரியாப்
புண்ணிய மேபள்ளி யெழுந்தரு ளாயே. ௭)

நல்லடி யாருளக் கருத்தினை முடித்து
நன்னலம் பெறுகென நயந்தநன் குயிலே
செல்லல தறவெனை யாண்டொரு மொழியிற்
றிரித்தெனக் கருளிய தேசிகத் திருவே
யல்லுநன் பகலற வாரிய ஞர்த
மழகுறு மேனியி லணிதிரு வருளா
மெல்லிய லேவினை யாவினை வேயென்
வேதக மேபள்ளி யெழுந்தரு ளாயே.

பிரமனே முதல்வரு பிபீலிகை யீறாப்
பெருகிய யோனிக டோறுமங் குயிராய்த்
திரமெனத் திகழ்தரு சீவனு மாகித்
திகழ்ந்தவை சுழன்றொளிர் சிவப்பிர காசன்
வரமுறத் திகழ்திரு மேனிய தாகி
மன்னரு ளேமயற் பிணிக்குநன் மருந்தே
பரமென விருளுறு மனவெனை யாண்ட
பனிமொழி யேபள்ளி யெழுந்தரு ளாயே. (கூ)

அம்பொருட் சுருதியின் சிரத்தினி லாடி
யமருறு மன்பர்த முளத்தின்வீற் றிருந்த
செம்பொருட் சிவப்பிர காசனை தெழில்சேர்
திருவரு ளாகிய தெய்வநல் லணியே
வம்பினிற் றிரிதரு மதியிலி நாயேன்
மனவிடாய் கெடவலிந் தாண்டுகொண் டாளே
யும்பருக் குணர்வரி யாயெமக் கெளியா
யொண்ணுத லேபள்ளி யெழுந்தரு ளாயே. (க0)

அருட்டிருப்பள்ளியெழுச்சி
முற்றிற்று.

அரு - வது,

## சிவப்பிரகாசசுவாமிகள்
## திருப்பள்ளியெழுச்சி.

---

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

செயசெய வாழிநற் றேவர்க டேவே
சிவப்பிர காசவென் சிந்தையுட் டெளிவே

யபலுற வறவரு ளாரரு ளதுகண்
டாதர வோடுநின் னடியிணை பணிவோ
மயர்வுட னறிவெனு மவைகழன் றெங்கு
மாசற வேநிறைந் தருளிய வமலா
கயவரின் முதலுறு கழிகடை யெனையாள்
கருணைய னேபள்ளி யெழுந்தரு ளாயே.

வெருளற விவேகன்வந் தெழுந்தனன் மாய
விருளது கழிந்தது மாமறை யீறுந்
தெருளுறு வலம்புரி சிலம்பின வெங்குஞ்
சிலம்பின சிவனரு ளாகமமெல்லா
மருளறு சமதம மாதிக ளெல்லா
மலர்ந்தன வறுபகை யழிந்தன ஞானப்
பொருளுறு கழல்களென் புன்றலை தருவாய்
பூரண னேபள்ளி யெழுந்தரு ளாயே.

கூவின மாமறை யீறுகள் கீதங்
குழறின வாகமங் குலவியு மறியாப்
பூவினி னயன்மா லரனொடுந் திரளும்
புகலரி தென்றய முறவெனை யாண்டு
போவதும் வருவது மறவுணர் வாக்கிப்
புகலரும் பாவனை புரையற முழுத்தி
யாவையுங் கழன்றக ணூக்கிய வரசே
யிருஞ்சிவ மேபள்ளி யெழுந்தரு ளாயே.

இந்திரன் முதல்வரு மிமையவ ரொருபா
லிரவியு மதியுமா மேவல ரொருபான்
முந்திய தேவர்கண் மூவர்க ளொருபான்
முனிவர்க டுதிசெயு முழக்கங்க ளொருபால்

புந்தியி லுனைநினைந் துருகியுள் ளழிந்து
புராணநன் மலர்கொடு தொழவந்து நிறைந்தார்
வந்தெனக் கருள்செய்த மலரடி யானே
வானவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௪)

ஐயுந்து மாகட லாக்கையி னுள்ளே
யடற்புல ஞனரிப் புண்டறி வின்றி
மையுந்து மாமர ணப்பிறப் பின்வாய்
வருந்துநின் றேனைவந் தஞ்சலென் றருளிப்
பொய்யுந்து மூனைப் பிரித்துணர் வாக்கிப்
பொருந்திய சிற்கனங் காட்டிய புனிதா
மெய்யெங்கு மாக விழித்தகண் ணளித்த
விரிசுட ரோபள்ளி யெழுந்தரு ளாயே. (௫)

புழுமிடைந் தசும்புறு புலால்கம ழாக்கை
பொருளென வுழைதரு நோக்கியர் தங்கள்
குழுவிடை நினைந்தழிந் துகுதரு வேனைக்
கூவிவந் தாண்டிடுங் குணாகர லரசே
கெழுமிடை யுலகங்கள் கிளர்தரு திசைகள்
கீழொடு மேல்பக்க முறுமுயி ரனைவையும்
பழுதற மிகுவிழி யாக்கிய பரனே
பரஞ்சுட ரோபள்ளி யெழுந்தரு ளாயே. (௬)

அறிவினை வடித்தநற் கிளியது போல
வளவறு சாத்திர மழகுறக் கழறி
யறிவது பிறிதிலை விடயம தொழிய
வறிவறு மவருட னழிதரு வேனைச்
செறிதரு திருவடி சென்னியிற் சேர்த்தித்
திரித்தறி வாக்கியங் கேடற மழித்துக்

குறியற மிருவழி யாக்கிய கோவே
குருபர னேபள்ளி யெழுந்தரு ளாயே. ௩)

இரும்பினும் வலிதரு நெஞ்சினை யுருக்கி
யிடம்பெற மகிழ்தரு கோயில தாக்கி
யிரும்பது பருகிய நீரது போல
வென்னுயிர் பருகினை யின்னதென் றறியேன்
கரும்பினி லூறலு மமிர்தமுந் தேனுங்
கலந்துறு சுவையெனக் களிதரு கண்ணே
பெரும்பய னேயென துண்ணிறைந் திருந்த
பேரொளி யேபள்ளி யெழுந்தரு ளாயே. ௪)

ஒன்றெனப் பலவென வுரைதரு பொருளா
யுருவரு வுண்மையு மின்மையு மாகி
நின்றநற் பொருள்களுக் குயிரது மாகி
நிறைந்தொழி வறநின்ற நேர்மையின் வடிவை
யின்றெனக் கெளிவந்திட் டுளங்கையிற் கனியா
யிவனவ னெனவெனை யாண்டவற் புதனே
துன்றிய மறைதொடர் வரியநற் குருபா
சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. ௫)

நாய்வயி னுள்ளதோர் குணமது மில்லா
நலமிலி யாய்நர கினில்விழு வேற்குத்
தாயென லாகிவந் திணையடி சூட்டித்
தகவருட் பெருங்கலை யளித்தவென் றலைவா
பாவியே னீசெய்த பரிசது நினையேன்
…தைத்துரு கேன்கண்ணீர் சொரியவுங் காணே
…வியுஞ் சோரே னலறிநின் றழியே
…ருட்கட லேபள்ளி யெழுந்தரு ளாயே. ௬)

நாயினுங் கடையாய்க் கிடந்தவென் றனக்கு
நன்மலர்ப் பாதமென் சென்னியிற் பதித்துத்
தாயினுஞ் சாலத் தாயாவுறப் பரிந்து
தரமறப் பொழிந்திடுங் கருணைநற் கடலே
யாயுநற் பிரமம தாக்கியு மமையா
தருட்கணே யளித்தமை யடியனேன் றரமே
நீயெனைப் பணிகொளு மாறது கேட்போ
நின்மல னேபள்ளி யெழுந்தரு ளாயே. (கக)

திருப்பள்ளியெழுச்சி முற்றிற்று.

அகூ - வது.

## சுரூபானந்தசுவாமிகள்

## திருப்பள்ளியெழுச்சி.

---- * ----

எண்சீர்க்கழிநெடிலடியால்வந்த - ஆசிரியவிருத்தம்.

ஒருதிரு வொளியிலென் மதியொளித் துள்ளத்
தாமரை மலர்ந்துகண் ணீருகுத் ததுபோற்
பரிதியி னொளிவரப் பனிமதி யொளித்துப்
பங்கய மலர்ந்துகண் ணீருகுத் தனவாற்
கருதியு னடியிணை தொழுநினைந் தொருமூக்
கடவுளு மமரருங் கடைத்தலை யணைந்தார்
சுருதிக டொடர்சுரூ பானந்தச் சுடரே
சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. (க)

மாவின மளிகனி செயமனங் களித்து
வாழுமங் குயிற்குலத் துடன்வளம் பெருகக்
கூவின வாரணம் பத்தியுட் புகுந்து
குழுமிய சங்கநல் வலம்புரி யுனக்காப்

பூவென விசைத்தனர் வீணையங் கிழவர்
பொருந்தினர் திருந்தடிப் போதுடன் கண்ணீர்
தூவினர் பெருஞ்சுரூ பானந்தக் கூடோ
சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே.

ஊன்றனை நானென நினைந்தனை நினைய
வுளமலி யேசெய்த களவினுக் கெல்லாஞ்
சான்றது வாகிநின் றமையறிந் தடியேன்
றரிக்ககி லேனெனத் தானுவந் தருளி
யீன்றவ ளினும்பரிந் தென்பிழை நினையா
தென்னைவந் தாளவிந் நிலத்தொரு வடிவாய்த்
தோன்றின னேசுரூ பானந்தக் கூடோ
சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே.

கெழுமடி யார்கள்சங் கீர்த்தன மொருபாற்
கேட்கவு மரியநின் றுட்கம லங்கண்
டழுமடி யாரொரு பாலொரு பால்வே
தாகம புராணகீ தாதிக ளன்பா
லெழுமையு மாள்கவென் றேத்தொலி யொருபா
லிமையவ ரிடருற வின்பமுற் றடியேன்
றொழுமடி யாய்சுரூ பானந்தக் கூடோ
சுந்தர னேயள்ளி யெழுந்தரு ளாயே.

திகைத்திட மூவருந் தேவரு மறையுந்
தீவினை யேனையாண் டனைதிரு வருளின்
மிகைத்திற மென்சொலி வியப்புற வடியேன்
வேண்டிய வாவினை யாடலி டளித்தா
புகைக்குமைம் புலன்களு முறுபகை யாறு
மாங்கெழு பிறவியு முகிரவென் றலையிற்

றுகைத்தவ னேசுகரு பானந்தச் சுடரோ
சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௫)

நோக்கிமுன் வினையற நுகர்வுறு விடய
நோக்குமிந் தியங்களின் போக்கறுத் தகத்தே
தாக்கிய வாதனை தன்னையுந் தவிர்த்துத்
தமத்தினைக் கடந்துணர் சாக்கிய தாக்கிச்
சாக்கிய சான்றுமத் தமித்துநின் றொளிருந்
தற்சுகரு பமுமுப சமித்துனி லொன்றத்
தூக்கின னேசுகரு பானந்தச் சுடரோ
சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௬)

முன்னவ னேமுடி வேயடி யேனை
முடிவினின் பத்துற முழுத்துபே ருததி
யன்னவ னேயக நிறைந்தவா ரமிர்தே
யண்டமெண் டிசைசரா சரமள வற்ற
பின்னவ னேகமெல் லாமொரு மொழியிற்
பிறிதறத் திகழுநின் பேரொளி யாகச்
சொன்னவ னேசுகரு பானந்தச் சுடரோ
சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௭)

கடலுறு திரைநுரைக் கணமெழுந் தடங்கக்
கனைகட லெழுந்தடங் காவகை போல
வுடலுயி ருணர்விவை யுனிலெழுந் தடங்க
வொன்றினி லடங்குத லுதித்தலில் லவனே
விடலரும் வினையிரு ளிடையலம் வருவேன்
வீடுகண் டிடர்கெட வெளிப்பட வந்த
சுடரொளி யேசுகரு பானந்தச் சுடரோ
சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௮)

இடவிய படத்தினி லெழுதுசித் திரங்க
ளெல்லையில் பலவுள போலிருந் தாலுந்
தடவிய பொழுதிலப் படமல தில்லாத்
தன்மைய தெனவிறை தந்தமெய் விழியாற்
றிடவிய திருவுரு வல்லது காணேன்
றிருவருள் பெறத்தவஞ் செய்தவர்க் கல்லாற்
றொடர்வரி யாய்சுரூ பானந்தச் சுடரே
சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௯

மாயவ னேவடி வில்லதோர் வடிவே
வடிவுகொண் டவனியில் வந்தெனை யாண்டா
தாயவ னேமிகு தத்துவப் பயனே
சங்கரன் மாலயன் றனக்கரும் பொருளே
வாயவ னேயடி யேன்மனத் தவனே
வாக்கொடு மனமுற நோக்குதற் கரிய
தூயவ னேசுரூ பானந்தச் சுடரே
சுந்தர னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௰

திருப்பள்ளியெழுச்சி முற்றிற்று.

அஎ-வது.

## தத்துவப்பிரகாசநாயனார்

### திருப்பள்ளியெழுச்சி.

———(*)———

எண்சீர்க்கழிநெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம்.

வாழிய வாழிய மறைமொழி முடிவே
மக்களு மனைவியுஞ் சுற்றமும் பொருளு
மாழ்கய மதனிடைத் தாமரை யிலைநீ
ராகிய வியல்பினை யழகுறக் காட்டி

வீழ்தரு மூனுயிர் வேறுமப் படியே
விளங்கிட வருள்செய்து விண்ணவ ரெல்லாந்
தாழ்வு மரியபொற் றாளிணை தருவாய்
தத்துவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. (க)

மாகரு முனிவரு மறைகளு மறியா
வளங்கெழு தாமரை மலரடி யடியேன்
சேகர மிசையினி லழகுறச் சேர்த்துத்
திகழ்நன வுங்கன வுங்கெட வைத்துப்
போகரு மையும்வர வருமையும் நிகழும்
புரையறு தொம்பதத் துரிசறு கரியைச்
சாக ரத்ததிலே தந்தருள் பவனே
தத்துவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. (உ)

பண்டுள மதத்தினைப் பானென வடியேன்
பார்த்தது கண்டிலேன் பார்க்குமக் கரியே
கண்டன னெனவதிற் கண்செவி கைகால்
கடைநடு முதலிரு புறம்பின்முன் கீழ்மே
லுண்டுகொ லோவென வொன்றையுங் காணே
னொழிவறு மறிவதெ னெழிலுரு வெனவே
தண்டிவந் திணையடி தந்தருள் பவனே
தத்துவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. (ங)

போக்கிய வுலகுடல் சாக்கிய மாக்கிப்
பொருந்திட வடியனுக் கிருந்தமை யுரைத்த
வாக்கியங் கேட்டது மாற்றிய பின்னே
மன்னிய பரபுரத் தென்னைவைத் தவனே
பாக்கிய பலமென வந்தநின் னருளாற்
பவமறு காவலை யதுபரம் பொருளைத்

தாக்குத லொழிதர மொழிதரு பவனே
தத்துவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. )

அயனொடு மாயவ னுலகுக ளவர்க்கே
யருளுதன் மாறுத னினதரு ளெனவே
நயனுடை மொழிசெவிப் புலத்துமுன் னறிந்த
நானவ ராயனு பவித்தது மன்றிப்
பயனுடை யுருத்திரன் மகேசனு மாகிப்
பழித்தபின் சதாசிவ மனித்ததும் பழித்தாய்
சயமுறு மதிப்பரம் பொருளெனக் கருள்வாய்
தத்துவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. )

இப்படி யிதுவென வியம்புக லரிதா
யிறையுறு காரண வுபாதியை விழுங்கி
யப்பொரு ளறிபொரு ளாகிய பரமா
யளவறு பகுதிக ளூகமு மாகி
யெப்பொரு ளிகழுவ ததுதனை யடியே
னெலையில தாகிய பவங்கெட வருளாற்
றற்பர வொளியென வருளிய பரனே
தத்துவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. (

என்னிடை நீயுமற் றுன்னிடை யானு
மிருந்தபி னிரும்பொரும் பொருளனை யெனையுந்
துன்னிய வுலகமு நீயுமப் பரிசே
தோற்றிய நிலைமையு மாய்ந்துள வுன்னை
மன்னிய காதல மணியெனக் காட்டி
வருவது போருவ தாகுமென் பிறவி
தன்னைபோர் நொடியினில் வேரறுத் தவனே
தத்துவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. (

நீந்தரும் பெரும்பவக் கடலிடை வீழ்ந்து
நெடுங்கரை யேறுதற் கலமரு வேனை
யேந்தியுன் றிருவடி யாகிய கரைக்கே
யிளைப்பற விருத்திய வளப்பெருங் கடலே
வாய்ந்தசிற் கனம்புகுங் காலமி தெனவே
வருமித மழித்து * நின் பெருமித மழியச்
சாந்திதந் தவிபத மாக்கிய வரசே
தத்துவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. (அ)

விதிமுறை காரிய காரண மாறி
விளம்பிய வுயிர்பரம் விளங்கிய வதுபோ
லுதிதம தாகிய வாதனை மாறி
யொளிமணை முதலிய நிகர்சிவ மருளி
முதியநான் மாமறை முடிமொழி நாலு
முணமென முறைமுறை யினமற விறந்த
சதுர்பட விருந்தவப் படியிருந் தவனே
தத்துவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. (கூ)

பங்கயந் தினகரற் குதவிய தெங்கே
பயோதர மதற்குல குதவிய தெங்கே
யிங்கிவை யொழியவென் செயலுமப் படியே
யென்பிறப் பறுத்தநீ யென்பெறக் கடவா
யங்கமோ டுயிர்பொருண் மூன்றுமுன் னனவெ
யாயினுங் கொண்டனை யவ்வழி யடியேன்
சங்கையி ழெழும்பல தேதுமற் றறியேன்
றத்துவ னேபள்ளி யெழுந்தரு ளாயே. (க0)

திருப்பள்ளியெழுச்சி முற்றிற்று.

---

* நின்பெருமிதம் - நீயானென்னுங் களிப்பு.

உ

சிவமயம்.

அஅ - வது,

# பரிபூர்ணப்பிரகாசநாயனார்

## திருப்பள்ளியெழுச்சி.

---

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உற்றறி வெழவுள விருளகன் றதுபோ
லுதயம்வந் தெழவுடு வொளியகன் றனவா
னற்றுட லுயிர்பொரு ளப்புடன் கவர்ந்து
நான்மலர்த் தாளிணை நாயினேற் கருளிச்
சற்றென விசுவசாக் கிரகா ரணங்கள்
சதுர்த்தெச செலவுநன் கலப்பழிப் பொன்றிற்
பற்றுத றிசைமுகர் பதமென வருளப்
பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. (க

அண்டரும் பரமெழ வரிவகன் றதுபோ
லாதவ னெழவுடு மதியகன் றனவா
லெண்டிசை தொழுங்கிரிந் தெணையறி யாதே
யெய்த்தெனை யாண்டுதை சத்தெனு மதிலே
கண்டுகொள் கனவையிவ் வணமென விருத்திக்
காமிய தாமதுட் கரணங்க ளுடனே
பண்டுல களந்தவர் பதமென வருளப்
பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. (உ

பத்துட னுலையும் பதைப்பற விருத்திப்
பாரிருந் திவ்வண மென்றருள் புரிய
வத்தம தருவம தாயின தென்ன
வதுமிகு சுழுத்தியவ் வியத்தமா மாயை

யுத்தம வுருத்திர பதமுநற் பிரகிருதி
யுனதுட லாமுதற் பாழ்சகற் லக்ஷணை
பத்திய தறிபிரா ஜ்ஞனென வருளப்
பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௩)

விரிவுறு காரிய வுபாதிக ளெல்லாம்
வேறுசெய் தறிவிராட் புருடனை யெனவுங்
கரியது வாகிநின் றன்னவை முழுதுங்
கழன்றன சம்சர்க்க வாக்கிய மதனாற்
றுரியம துணையறி தொம்பத மகேசர்
சொல்லுமுற் பூரண சோதியி லென்னைப்
பரநன விற்கா மணியென வருளப்
பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௪)

காலமு ஞாதுருஞ் ஞானமு ஞேயமுங்
கண்டன னென்னி விராசத மாயை
மேலொடு கீழ்பக்கம் விரவிய பின்முன்
விரிவுறு மவைபவ மாயினவெல்லாஞ்
சாலவு மிரணிய கர்ப்பமு மிதுதான்
சதாசிவ கால பரன்கன விதுவெப்
பாலுயர் காரண வுபாதியென் றருளப்
பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே (௫)

இதமக மறவிரு விவணமென் றருளி
யெழில்பர ஸுழுப்த்திகா ரணாதியிற் றதுவா
மதீதம திதுவசகல் லக்ஷணை யதனா
லாசறு சொல்லுறு பாழிரண் டாம்பாழ்
பொதுவது புகவது போந்தட மன்றிப்.
போதமு மழுங்குமவ் வியாகிருத மிறுகல்

பதியுடல் சதாசிவ பராசத்தி யருளப்
பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே

அருவமு முருவமு மாகிய பொருளே
யதீதமென் றருளிய கழித்தது வழிந்த
பொருளுணர் வதுபரம் விசிட்டவாக் கியத்தாற்
பொருவில்சிற் சுவலிதை தற்பதப்பொரு ளதுவா
மிருநில னெனமுத லருளிய பரிசே
யெழிலிரு பூரணத் தியல்குரு நனவிற்
பாமுற வெனதெழு பவமறுத் தருளப்
பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே.

மலமறு குருபதக் கனவினின் மருவு
மாசறு மாணவ சாத்திக மதனு
லுலகமோ டியிருதன் மாத்திர பரமா
யுணர்ந்தது வேபிரசா பத்தியென் றருளி
நிலவிய பரமம தாயவை முழுது
நிகழ்ந்ததின் றெற்கென நெடியவர் முதலே
பலவுல குண்டது மிதுவென வருளப்
பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே.

சீரணி சகதசகல் லக்ஷணை யதனுற்
செகமுமு துண்டதொர் செருக்கற மிகவே
யோர்குரு சுழுத்தியி லிருத்துப சாந்த
மிருபதப் பொருளுமொன் றுக்கினின் றெளிர
வோருட லுயிரறி யொண்பர முழுது
மொன்றுமுப் பாழுறை யிறந்திட மதுவாய்ப்
பாரியல் சமைவுநற் பிருதுவி யென்றருளப்
பரிபூர்ண னேபள்ளி யெழுந்தருளாயே.

ஆரண முடிவினி லவிபதப் பொருளை
யருளுமுப் பூரண பூணுபி ஷேகச்
சீரணி யடிகளென் சென்னியிற் சேர்த்திச்
செறிதர வகண்டவாக் கியமத னலப்
பூரண துரியமென் மோனநல் விழியாற்
புணர்குரு சத்திய மாதியுற் பலத்தின்
பானென நடித்துனி லையிக்கிய மாக்கும்
பரிபூர்ண னேபள்ளி யெழுந்தரு ளாயே. (௧௦)

திருப்பள்ளியெழுச்சி முற்றிற்று.

அ௯-வது, நிந்தாஸ்துதி.

இஃது சிவப்பிரகாசசுவாமிகளது

———[*]———

கட்டளைக் கலித்துறை.

உண்பதுகொண்டவர்தாமுயிர்கொண்டனரென்றுலகோ
பண்படவேமொழி கின்றனர்பார்க்கி லுடலதுமற் [ர்
றெண்படு கின்ற பொருளது கொண்டிரங் காதுயிரு
முண்பது வேகட னுமுடையா னருட் கொப்பிலையே.௧

செய்யாதுசெய்திடுஞ் சேர்ந்தவர் தங்குடி கேடுசெய்யு
மெய்யாகநல்லவர் போன்மேவி யேவினைக் கேடனுமா
யுய்யாத வண்ண மடைந்தோ ருயிருண்ப தென்றறியா
தையோ குருபர னென்றறி யாமை யகப்பட்டதே.(௨)

துட்டனை வானவர் சோரனை மாமறைத் தூரனைவிண்
பெட்டனையாரருட் பித்தனைப் பின்னிலி முன்னிலியை
நட்டனை நள்ளருட் பத்தியி னன்கயிற் றாலடியார்
கட்டனை நற்றவ னொன்கழற் றுழ்வர் கருத்திகழ்ந்தே.௩

கருவிலி கற்பனை யின்றி முழுதுணர் கத்தன்முத்தன்
மருவிலி மாண்பிலி மானமிலி மதிப் பாருமிலி
யுருவிலியோடுகொண்டுண்பலிக்கென்றுழல்வோனையென்
பெருவலிமாதவமெம்பெருமானென்று பின்செல்வதே

செயல்வேறுசொல்வேறுதேசிகன்செய்கைசிறிதுமொன்
றுயலேனெனுமுழு தும்முயலாநிற்கு முற்றுமென்
னயலேயெனுமவை தானாயிருக்கு மனத்தினுள்ளும்
பயிலேனெனுந்தன் னுளேபயிலாநிற்கும் யாவையுமே

என்றும் பிறப்பிலி யேற்றமிழிவிலி யிச்சையிலி
நன்று மலது மிலிநடு வாதி முடிவுமிலி
பொன்று முடம்பிலி பொய்யொடுமெய்யிலி பூண்பதில
யொன்றுமிலியையநல்லோருடையானென்பரோர்விறந்தே

ஊரிலி பேரிலி யுண்பதொன் றில்லி யுறுதுணையு
மாரிலி யங்க மிலிகுண மில்லி யடைவதில்லி
நேரிலி நெஞ்சிலி நின்மித மில்லியை நீண்மறைகள்
சீரள வேதுமில் லாத்திரு வோனென்று செப்புவவே

தட்டா னியாவினுஞ் சான்றானவன்சம யங்களுள்ளு
கிட்டா மறையன் கிளர்கள்ள வேடன் மறைப்பறை
னெட்டாத வூமை கம்படியா னுல கம்படைச்சன்
சிட்டார் சிவப்பிர காசனென்றே நின்று செப்புவமே

தேரினன்றுமருட்டேசிகன்சார்வெனச்சென்றடைந்
னுருமொன்றுவிடத்தேபெண்ணாய்த்தென்னரும்ப
மூருமொன்றாக வளைத்தறுத்தைம்புல மாதியுற்றார்
பேருமின்றாயிடச் செய்தனன்செய்தவப்பேருளே

சாற்றுகின்றேனெவர்க்குங்கெடுவீர்தப்பியோடுமின்க
மூர்க்கனெங்கோன்முன்னகப்படின்மூவேழ்குலமணந்தே

சேர்க்கையென்றுகவளைத்துப் பிறப்பறுத்துச்சிவத்தே
யேற்றுநின் றுணிரங் காவென்ற வொருபி றுண்டவனே

நிந்தாஸ்துதி முற்றிற்று.

௬0 - வது, ஸ்வரூபானந்தசுவாமிகள்.

## அடிமடக்குஸ்துதி.

எண்சீர்க்கழிநெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம்.

ஆசி லாமன மேவிய மெய்யனே
யகில லோகமு மாகிய மெய்யனே
பாச மோசன லோசன வீசனே
பழுதி லாமுழு தாகிய வீசனே
நேச மார்சுரூ பானந்த நித்தனே
நின் கழற்புக ழார்கண நித்தனே
வாச கத்தொடு வாமனத் தாரனே
வள்ள லன்பர்கள் வாமனத் தாரனே. (க)

அன்பு நின்கம லக்கழற் குற்றதே
யளவி லுற்பவ முற்றகைக் குற்றதே
துன்ப வெள்ளந் துடைத்தசொல் லொன்றுமே
தொண்ட ருட்சுரூ பன்கழ லொன்றுமே
நின்ப தந்தொழு வாருத் தமர்களே
நிமல னன்ப னெக்குத் தமர்களே
யுன்பெ ருங்கரு ணைக்கள வில்லையே
யுபணி டத்துணை யிற்கள வில்லையே. (உ)

அருள தேவடி வாகி யிருத்தியே
யாறு ஞானிக டம்மு ளிருத்தியே

யிருளும் வன்பவ மாள விழித்தியே
யென்னை யின்னுரு வாக விழித்தியே
மருளு மும்மதின் மாளவு மெய்தியே
மாசு ளத்து மறைந்தது மெய்தியே
வருள தார்சுரு பானந்த வாரியே
வறிவி லேனுயி ருண்டதும் வாரியே. (ரு

நந்தி டாதசெந் தீயனை யானையே
ஞான மாமத மேபொழி யானையே
வந்தி டாதுரு வாய்வரு வானையே
மன்னு தன்னிலைக் கொப்புயர் வானையே
சிந்தி டாவழி வேணையு மாளவே
சீறும் வன்பவம் வேரொடு மாளவே
வந்த நற்சுரு பானந்த வள்ளலே
மாசி லன்பிலற் குள்ளது வள்ளலே. (சு

முடிவி லாவரு ளாலொரு மூர்த்தியே
முன்பு பின்பில தாகிய மூர்த்தியே
நெடிய வல்வினை வேரொடும் வெட்டுமே
நின்ம லன்றிரு மூர்த்தமவ் வெட்டுமே
யடிய ராயினு ராபத் தனமதே
* யளவி லின்ப மருளுந் தனமதே
யொடிவி லின்பஞ் சுரூபன் பதங்களே
யுற்று மீளிடு மற்றைப் பதங்களே. (எ

அல்ல வாதிக டங்கட் கரியனே
யளவி லந்தக் காணக் கரியனே
பல்ல வாவினை பற்றறவை பங்கனே
பத்த னைப்பய ஞகிய பங்கனே

---

* இவ்வடி—அனேகபுத்தகத்தின்று—ஓர்புத்தகத்திற் கண்டது

நல்ல நான்மறை யீறல மாக்கவே
நாயி னேனுளந் தானல மாக்கவே
தொல்லை வன்பவஞ் சுட்டுணர் வொன்றுமே
சுரூப ஞார்கழ லென்சிர மொன்றுமே. (சு)

ஐம்பு லன்கர ணங்களுக் குத்தியே
யாதி மாயையை வேரொடு குத்தியே
யும்பர் வந்துணர் வாகி யுதித்தியே
யுள்ள நற்சுவை யாய்நின் றுதித்தியே
யம்ப ராதியைம் பூதல கண்டனே
யழிவி லாவறி வாகி யகண்டனே
செம்பொ னேசுரு பாவென நம்பியே
சேர வன்பரோ டாண்டது நம்பியே. (எ)

கால தேசங் கடந்தவப் பாலனே
கருணை யாலுல கம்பரி பாலனே
யோல வென்றன்ப ருக்குரு வாகியே
யோழிவி லின்பளிக் குங்குரு வாகியே
ஞால முஞ்சிவ மாக்கும் விரகனே
நன்கி லாருளத் தங்கும் விரகனே
சீல மேசிறி யேனுரு வந்ததே
சிற்சு ரூபனென் னுள்ளு ருவந்ததே. (அ)

பத்தி வன்கயிற் றார்ப்புண்ணு மாகியே
பகரு லோக மலோகமு மாகியே
முத்தி யன்பர் தமக்கரு ளானையே
மூட ருக்குநன் கொன்றரு ளானையே
யத்தி யானினை வாருளத் தர்க்கனே
யன்றும் வாதிகட் காயகு தர்க்கனே

யெத்தி நீபுகுந் தாள்வது மென்னையே
யின்ப நற்சுரூ பாவிது வென்னையே. (௯

கலையெ லாமறைந் திட்டது முன்னையே
காத்த ளித்துக் காப்பதன் முன்னையே
யலையெ லாமற வாறினர்க் கண்ணலா
வைய முற்றலை வாதிகட் கண்ணலா
வெலையி லாதெழு மீறிலின் பத்தனே
யென்னை யாளுமெழிற்சுரூ பத்தனே
நிலையி னின்பளிக் குங்குரு வாதியே
நீச னேனு ளமைந்திடு மாதியே. (௪௦

அடிமடக்குஸ்துதி முற்றிற்று.

௬௧ - வது, சுரூபானந்தசுவாமிகள்

வீட்டுநெறி.

---

நிலைமண்டில ஆசிரியப்பா.

அண்ட வுருவிற் பிண்ட மிருக்கும்
ஆழிமீன் போலும் வாழி சிவமுயிர்
இந்துதோற் றுடுக்கம் வந்தபல் லுயிர்கள்
ஈரொழு புவனம் பாரொழு முயிர்நிலை
உள்ளும் புறம்புங் கொள்கையொன் றறவிரு
ஊகைகை தானே யாது மானது
எழுத்தை யெழுது மெழுத்திலுண் டுறுபொருள்
ஏக மாவது யோக மாகும்
ஐய மின்றி யருளிறை யேசிவம்
ஒருபொரு ளின்றிச் சுரூபனை வணங்கு
ஓதல் வேண்டா தாத னிறைவு

ஔவியம் பேசா ததுஃ*ரோவ மாகும்
அஃகம் பெற்ற துயிர்க்குயி ரதுவென்
கருமை செம்மை வெண்மை யவனலன்
னப்பொரு ளாவ தப்பொரு ளாகுஞ்
சந்ததம் பாதுணை சிந்தையில் வணங்கு
ஞுத்தி யுடையவர் முத்தி பெறுவர்கள்
அடவிய கடத்தைத் தடவிநிற் பதனில்
அணக்கோ ணற்றுகிற் பிணக்கறு முத்தி
தற்பதந் துவம்பத நிற்ப தசிபதம்
நந்தி திருவடி சிந்திநா டோறும்
பந்த மென்பது சிந்தி யாது
மனன மரிக்கிற் சனன மரிக்கு
மயக்கற விருந்து மயக்கந் தவிர்
ஆரத்தை கெடுத்துப் பரந்தனை வண
குலக்கந் தியானங் கலக்க மறுது
வந்தனை யடங்கிற் சிந்தனை சிவமாம்
அழகிய திருநடந் தொழுவ தசிந்தியம்
இளம்பிறை சூடியே வளந்தரு சுடரொளி
தன்னை யறிவது பின்ன மறுவது
அனந்த வறமே மனந்தனை மரித்திரு
கவலை நின்றிடிற் சிவலை நின்றிடுங்
கால மூன்றுநின் பாலுற வறிந்திரு
கிரக வுதயந்தரு முடிவி லுயிர்நிலை
கிழ்க்குல ஞான வாழ்க்கை யிலாதார்
குருவொளி பிண்டந் தருமுயிர்க் குணர்வு
கூத்தும் பலமு மேத்துவ தசிந்தியங்
கெடுத்த சுழுனையி லெடுத்த துணர்வொளி

---

* ரோவம் — பாணம்.

கேட லுணர்வொளி யாடிய சிவமே
கையது கூப்பி மெய்யுற வணங்கு
கொண்ட நிலையது கொண்டி டாநிலை
கோணு நிலையது காணு நிலையே
கௌவை யறுவது செவ்வை யுறுபொருள்
சத்தாதி யைந்தினு மொத்த தொருபொருள்
சாதி குலம தோது சுக்கிலஞ்
சிந்தனை யடங்குதல் வந்தனை யாகுந்
சீதள கமல பாதுகை பணிந்திரு
சுருதியம் பொருளே பரிதியம் பொருளது
சூழவே ழேழது வாழ்பயி ராகுஞ்
செய்யுஞ் செயலவன் செய்யுஞ் செயலே
சேட்டர்தா ளிணையை நாட்டிநீ வணங்கு
சைவ நெறியே யுய்யு நெறியது
சொர்க்க நரக முற்பவ விலங்கு
சோம்புற வாசை யாம்பொழு தறுத்திரு
ஞானபரை யந்த மோனஞ் சிவமே
ஞெகிழிப் பொறிபோ னின்றது சிவையே
ஞொள்கிய மனமுடை யோர்நுண் ணியரோ
தகுதி யுற்றவர் பகுதி யற்றவர்
தாக்கொன் றறவே நோக்கினை நோக்குந்
திடம்பர ஞானி யுடம்பு நற்சிவந்
தீர விருந்து பாரிரு சாணந்
துஞ்சல் விழித்தன் மிஞ்சல் விட்டிரு
தூங்கும் யோகம் பாங்கு பெறுது
தெள்ளி யறிந்து வள்ளலை வணங்கு
தேசிகன் சிவமென் றாசையொன் றறநில்
தைய லுருவது மைய லுருவே

தொந்தனை யறவே நந்தியற் சனைசெய்
தோற்றுஞ் சுடருள மேற்றிய தீபம்
நன்றிசெய் குருவை யென்றும் வணங்கு
நாட்டஞ் சொல்லும் வீட்டி னெறியை
நிருத்தஞ் செய்சிவன் குருத்தவ ராசன்
நீரும் பூவுஞ் சேருமன் பிதயம்
நுண்ணிய பொருளை நண்ணியற் சனைசெய்
நூலொடு குருவுணா வேலைசிற் றூறல்
நெட்டை யொன்றற விட்டு நீயிரு
நேயந் தன்னி லேயுஞ் சுடரொளி
நைந்துநைந் துருகிச் சுந்தர வடிதொழு
நொடிப்பொழு தாசை யறவடி பரவு
நோக்கற விருந்து சேக்கையை நோக்கு
நௌவி விழியுமை செவ்வி சிவனுரு
பசுபதி பாசம் விசுவமெய் யறிவு
பாசந் தவிர வீசனை வணங்கு
பிண்டந் தனிலு மண்ட முதிக்கும்
பீதம் பிரபை யோதுமை பாமன்
புண்ணியர் மண்ணி லெண்ணிய ஞானிகள்
பூண்டதா ளிணையை வேண்டி வணங்கு
பெருகும் பிறவி யருகி யின்புறும்
பேத மறவே நாதனை வணங்கு
பையர வணையனே பொய்யறு பாமன்
பொய்யு மெய்யுஞ் சையெனு மவத்தை
போக்கு வரவற வாக்கையி லுணர்ந்திரு
பௌவப் பிறவி செவ்விதை கருத்து
மனமெனுங் கடத்திற் றனமென வறிவு
மாண்ட வுடலுயிர் பூண்ட வுறுபொருண்

மிக்கவித் தங்குர மொக்குநற் பொருளுயிர்
மீண்டுமி முளையிற் காண்டகா முயிருடன்
முந்துட லுயிரிற் பிந்த வுதிக்கு
மூன்று காலமுந் தோன்றுமு ளிடத்தின்
மெய்யு முடம்பு பொய்யு முடம்பு
மேலைச் செய்யிற் காலைப் பயிரிடு
மைபல தறவே செய்பயிர் வளர்த்திரு
மொட்டும் பூவுஞ் சிட்டனுங் குருவு
மோன முதிக்கின் ஞான முதிக்கும்
மௌன வுண்மையே யெவனுறு மவன்சிவம்
யானென தழிகி லானது முத்தி
யூகித் துணர்வது போகிற் கரியது
யோகமீ தான மாகி யாழிகில்
வடிவ திருந்த படியது வாகும்
வாக்யமெய்ப் பொருளை யாக்கிய துறைத்திரு
விடாம லிருந்து கெடாது கெடு
வீட்டின் பத்தைக் கூட்டுங் கேட்டறில்
வெள்ளையுஞ் சிவப்பும் வள்ளல் பாதுகை
வேண்டி யிருந்து வேண்டல்வேண் டாமை
வைப்பது பாதுகை மெய்ப்பது மதுவே.

வீட்டுநெறி முற்றிற்று.

கூஉ - வது, சிவப்பிரகாச சுவாமிகள்

---

நமசிவாய - கலிவிருத்தம்.

சத்யாதி லக்ஷணபராத்ம பராமிர்தத்தைக்
கைத்தாரு மாமலகதற் சமமாகவென்னை
யுய்த்தாரு முன்ற னடியாரொடு நாளும்வாழ
வைத்தாயுன் வல்ல பங்கர்த்தநமசிவாய.

ஏற்றரும் வேதச் சிரமோடம ரர்க்குமெட்டாச்
சீர்ப்பாத புண்ட ரிகநாயனை யென்சிரத்தின்
மாற்றாது கோயில் கொளவைத்தெனை வாழவைத்தா
யாற்றேன் கோலிவ் வருளுக்கு நமசிவாய. (உ)

கற்றாரி லன்று கருதன்புடை யாரிலன்று
துற்ற * ருக்ஷத்திற் சுகதுன்மதி நீசனேற்கு
வற்ற மகாவி பவமாகிய தன்னை நல்கி
நற்றயி லன்பு மிகுநாத நமசிவாய. (௩)

இராகாதி சத்துருக் கெண்பீடையி னாற்கலங்கிச்
சோகாதி துக்க மகவேதனை யிற்சுழன்று
போகாமே யஞ்ச லெனவந்தென தாள்புருந்த
பாகா ரருட்ப கருமாறெ னமசிவாய. (௪)

ஓவா மகாகிரு பையினாலொரு மேனிசாத்தித்
தாவாத வன்பி றவிவன்கிளை தன்னைவெட்டித்
தேவாய தன்வடி வென்வடி வாக்கியாண்ட
தாவாலி தென்ன வருள்வெள்ள நமசிவாய. (௫)

ஒன்றுங் கலாததொ ருக்ஷத்திற வெனைப்பிடித்துக்
கன்றுக் கிரங்கி வருகாதல்செய் தேனுவென்னத்
துன்றுற்ற பேரரு ளால்வந்தெனை நல்கியாண்ட
நன்றிக்கு நானேது செய்வேன்கொ னமசிவாய. (௬)

பத்திப் பதத்தை யணுகாதொரு பாக்கியமின்
சுத்தச் சடந்தி கழுதுன்மதி நீசனேனை
முத்திப் பராமிர்த முழுந்திட வைத்தனின்க
ணைத்தைச்செய்வேனேது செய்வேன்கொ னமசிவாய.

* ருக்ஷம் – கோபம்.

மூடர்க் கெலாம்பி ரதமன்முக ரிதறுதியன்
கூடற்கொர் மேரு குணகீனன் கிருதக்கவேலை
யீடுற்ற வென்னை யிறையின்புற வாண்டதந்தோ
நாடற்கொ ணாத கிருபைவெள்ள நமசிவாய. (அ

ஆசைப் பெருங்க டலளற்றுறு மந்தனேனை
மாசற்ற வன்ப ரிடைவைத்தொரு மாத்திரைதன்னிற்
றேசுற்ற சிற்சு கபராமிர் தாக்கியாண்ட
வீசற் கிருபைக்கேது செய்வேன்கொ ணமசிவாய. (கூ

உத்த சுருதிக்கு முணர்தற்கரி தாயவுன்னை
யெத்திப் பிடித்தெ ளிதிலன்பி லெனக்களித்த
சித்திப் பதந்தி கழுஞ்செய்ய சிவப்பிரகாச
வித்தற் கிருபைக்கேது கைமாறு நமசிவாய. (க0

நமசிவாய முற்றிற்று.

கூங - வது, காப்புக்குறியுரைத்தல்.

---

நேரிசைவெண்பா.

பல்லா யிரமறைக்கும் பார்ப்பரிய வானவர்க்குஞ்
சொல்லான் மனத்தாற் றொடர்வரிதாய்ப் - பொல்லாத்
நாயேனை யாண்டருள நாளுமெது வந்தருளுந்
தாயே தமியேனைக் கா. (க

மாளாத வல்வினையை மாத்திரையின் மாற்றியெனை
யாளாகு மன்பருட னாண்டருளி - மீளாக
மென்னே யெனைக்காட்டி யாவையுமா யாசற்ற
பொன்னே புலையேனைக் கா. (உ

பார்த்திடத்தும் பாரா திருந்திடத்தும் பல்விகற்பந்
தீர்த்திடத்துந் தீராச் சிலுமிடத்தும் - பார்த்துவரும்

வன்பேத மாளுவித்து மாளாத வின்பளித்த
வன்பே யடியேனைக் கா. (௩)

அண்டாண்ட மற்றைப் பகிரண்டம் யாவையுமாய்ப்
பிண்டகண்டப் பேதப் பிறிவதுவாய்க் - கண்டுநின்ற
கண்ணு கமலக் கழலடியே னுக்களித்த
வண்ணு வடியேனைக் கா. (௪)

உடம்போ டிருந்தே யுடம்பின்மை காணத்
திடந்தா னெனக்களித்த தேவே - யடங்காத
பேய்த்தேர்ச் சமயத்தார் பேராரவங் கேளாமை
தீர்த்தாய் சிறியேனைக் கா. (௫)

ஒன்றுணரின் மெய்யே யுலகுணர லாமென்றங்
கொன்றுசொலி மன்றத்தி னுண்ணின்றே - குன்றலிலா
ஞானத்தாய் நல்ல நயனத்தாய் நால்வேத
கானத்தாய் நாயேனைக் கா. (௬)

மார்க்கப் பிணக்காம் வழக்கறுக்க மன்றேறி
யார்க்கு மிறையறிவா மப்பொருளைப் - பார்த்துப்
பிணங்கா திருமினெனப் பேசிமழு வேந்து
மணங்கா வடியேனைக் கா. (௭)

அஞ்ஞான வல்லசுர ரூங்கமரு மூப்புரத்தை
மெய்ஞ்ஞானத் தீயால்விழுங்குவித்துப்-பொய்ஞ்ஞானக்
கங்குல் கழித்தாய் கருதரிய பேருணர்வே
யெங்குமளித் தாயெனைநீ கா. (௮)

பஞ்சவர்க்குச் சார்வதுவாய்ப் பற்றாத நூற்றுவரைத்
துஞ்சி யிடத்துணித்துச் சொல்லிறந்த - வெஞ்சலிலா
ஞானத்தாய் நல்ல நயனத்தாய் நால்வேத
கானத்தாய் நாயேனைக் கா. (௯)

மூலமே யென்றழைக்க முன்னின்றங் கோலமெனு
கோலமே செய்ய குருபரனே - ஞாலமே
விண்ணே பிறவே விரிந்தொடுங்க நின்றழியாக்
கண்ணே கடையேனைக் கா. (அ

ஐவா யரவமெனு மைம்புலனு நாகணையே
மெய்யாக மேவி விழித்துறங்கு - மையா
வறியேனை யாள வறிவுரு வாய்வந்த
செறிவே சிறியேனைக் கா. (க

நனவாதி நாடுந் துரியமீ றாகச்
சொனநான் முகம்படைத்துத் தோன்றி - யினமேது
மில்லானே யேதுக்கட் கெட்டா வெழிலுருவா
நல்லானே நாயேனைக் கா. (கஉ

ஞானமதத் தாற்றருக்கி நாநா வறச்சீறி
யீனமத மாயையினை யீடழித்து - நானதற
நின்றுணரும் வாரணமே நெக்குருகு மன்பருட
னென்றவெனைக் காத்திடுநீ யுற்று. (கங

ஆறுமுக மெய்யே யமைந்தடைவார் தங்களுக்குக்
கூறும்வணம் வந்த குணக்குன்றே - வேறுபுகழ்
குன்றெறிந்தாய்குன்றலிலா வன்பருளங்கோயில்கொ
நன்றறிந்தாய் நயேனைக் கா. (கச

மாது மருந்துண்ணா வன்குழவி நோய்க்கதுபோ
ளுக வசோகத்து நன்கமைந்து - போதந்
திருகா வெறுவிகற்பச் சித்தமய நீர்த்த
வருகா வடியேனைக் கா. (கரு

அவாவறுத்தல் சாந்திமுத லாய்ந்தெளி வென்று
மூவாமதிபோன் முக்குடைநின்றோங்கத்-தவாமதிபோ

வீற்றிருந்தாய் வெம்பிறவி வேரோடும் வெந்துவிழ
ஆற்றிருந்தா யுற்றெனைநீ கா. (கசு)

சொற்பயின்ற நற்கிளிபோற் சோராமை நூல்பலவுந்
தற்பயின்று * தர்க்கித் தனையுணரா - வற்பருக்குப்
பேயே யளித்தருளிப் பேரின் பெனக்களித்த
தாயே தமியேனைக் கா. (கஎ)

நில்லாத வற்றை நிலையென் றுணராமை
யெல்லா மழிபும்வண மெய்துவித்துப் - பொல்லாத
பித்தா முலகிற் பிணக்கறவொன் றுவுதித்த
புத்தா புலையேனைக் கா. (கஅ)

கலைவேடர் கட்டுங் கதத்துவலைக் கெட்டா
நிலைவேட நெஞ்சினுளே காட்டிப் - பலவேட
மெல்லா மெழிலா ரடியாராக் கண்டந்த
செல்வா சிறியேனைக் கா. (கசு)

அந்தமிலா வூழியெல்லா மாயொழிந்தே வந்ததெனப்
பந்தமெலாம் வீடப் பணிந்தருளி - நந்தலிலாச்
சோதி யெனக்குணரச் சொல்லாமற் சொல்லியவெம்
மாதி யடியேனைக் கா. (உ0)

அன்றுமுத லாக வடுத்தபொரு ளேவடிவா
யொன்று மறியா துழல்வேனை - நின்ற
படியே சிவமாகப் பார்த்தெனையாட் கொண்ட
வடிவே யடியேனைக் கா. (உக)

மடுவின் கரைமகவை வைத்ததாய் பார்வை
விடலங் கருவிழுமா போலக் - கெடுவே

---

* தர்க்கித்தென்பது - தர்க்கியென விகாரமாயிற்று.

னுடையாய் திருக்கூறிப்ப தோவியிடின் யார்க்குங்
கடையா மெனைக்கருதிக் கா. (உ௨

தன்மத்த ராகுந் தவத்துளோர் தாமிற்க
வன்மைத் தனைத்தேடி வந்தாண்ட - வுன்மத்
துடையானே யொப்பொருவ ரில்லாதா யார்க்குங்
கிடையானே கிழேனைக் கா. (உ௩

என்று மருளே யெனக்குடைமை யெம்பெருமாற்
கென்று மருளே யியல்பாகு - லென்றுமுளத்
தெண்ணுமை யென்கடனு மேதுசெய்துங் காத்தருள
கண்ணுளா வுன்றன் கடன். (உ௪

காப்புக்குறியுரைத்தல். முற்றிற்று.

கூச - வது, அதிசயப்பார்வை.

---

குறள்வெண்செந்துறை.

அருவாகி யகண்டமு மாகி யானந்தமு மாகிய பிரமங்
குருவாயருள் செய்தமைபாரீர் கோதின்றிநிறைந்தமைபாரீர் .(

விடியாவிருள்போயிடும்வண்ணம்வேதாந்தவிளக்கினையேற்றி
முடியாநிதிகண்டமைபாரீர்முத்திக்கரைசானமைபாரீர். (உ

செறிவாகியிருந்தவர்தாமே சீவன்சிவனென்னவிரண்டாய்ப்
பிறியாவகைநின்றமைபாரீர் பிறவிப்பகையற்றமைபாரீர். (௩

அறிவோடறியாமையிரண்டுமெனுகாதலனுகிச்சகமாகிப்
பிறியாவகைநின்றமைபாரீர் பிறியிற்றனிலாதமைபாரீர். (௪)

புரியாரரவானமைபோலே போதத்துலகங்களுதித்துத்
தெரியாவகைநின்றமைபாரீர் தெரியிற்றெளிவானமைபாரீர். ௫

உலகம்மிரவாவதொழித்தெம் முணர்வேபகலாவதுணர்ந்து
கலகங்கடெளிந்தமைபாரீர் கருமங்கண்முடிந்தமைபாரீர். (சு)

கன்னக்களர்தம்மையும்வீசுங் கண்வாய்முதலிந்திரியங்க
ளென்னைக்கவர்கின்றமைபாரீர் யானும்மதறிந்தமைபாரீர். (எ)

ஊனுந்துயுளங்கடையாகவுணராமையினு ளுளவாகி
நானுகியிருந்தமைபாரீர் நானும்மதறிந்தமைபாரீர். (அ)

ஒடுவாசல்களொன்பதுடைத்தாயூனுகிவகுத்தசிறைக்கே
முடியாதிடுவேதனைபாரீர் மூலத்தனுகாதமைபாரீர் (கூ)

மங்கும்பிறவிக்கடன்மாயமதியென்னுமரக்கலமேற
வெங்குங்கரையானமைபாரீ ரிமைப்பிற்பவமற்றமைபாரீர்.(க0)

அல்லற்றுவரும்பகலற்று வயலற்றறிவேவடிவாகிச்
சொல்லற்றுளநின்றமைபாரீர் சுகமேவடிவானமைபாரீர். (கக)

அதிசயப்பார்வை முற்றிற்று.

கூரு - வது, அவனேநான்.

## இது சிவப்பிரகாசசுவாமிகளது

---

கலிவிருத்தம்.

என்னேயிப் பிறவிக்கே யிடைந்திடுந் திடுவேனைப்
பொன்னேயொத் திலங்கும் பூமச்சோதி கழல்சூட்டா
மின்னியொத் திடித்தாற்போல் வினையெல்லா மறுத்த
னன்னேயற் புதங்கேளா யவனேநா னுனேனே.(க) [பி

அலைவாயில் வடுப்போலே யலைந்தலைந் தொருக்காலு
நிலையாத பிறவியை நிலைசெய்த படிகேளாய்
தலையாரப் பெருஞ்சோதி தாளிணைதரித்தபி
னலையாதங் கழிவில்லா வவனேநா னுனேனே. (உ)

ஆடித்தை யமாவாசி யலைகட லாடியுந்
தேடியு மோடியுந் திரிந்தேதுங் கண்டிலேன்
கூடிய வந்நாளிற் குறைகழ றரித்தபி
ஞடியே தேடி யவனேநா ஞனேனே. (ந

பாஞ்ச பவுதிகமாம் பரிணம வுபாதிக்கே
மாஞ்சேது மறியாதே மயல்கொண்டு திரிந்தெங்கு
மோஞ்சேனைப் பெருஞ்சோதி யுணர்வேயென் றுணர்
வாஞ்சேயா னந்தமா மவனேநா ஞனேனே. (ச) [த்திட

கற்பனை தவமென்று கலைவிசு மாந்தர்த
மூற்பனக் குழியிலே யுழைத்துணர் விலியேனை
நிற்பன திரிவன நீயேகா ணெனச்சொன்ன
வற்புதங் கண்டபி னவனேநா ஞனேனே. (ரு

தோன்றிய வுடலுக்குந் தூரகமா மனத்துக்குஞ்
சான்ருகிச் சலியாதே நின்றதற் சுரூபத்தை
யூன்றவென் மனத்திடை யுத்தம னுரைத்தபின்
ஞன்றேசஞ் சலமின்றி யவனேநா ஞனேனே. (சா

செறிவான வடிவினைச் ஸ்ரீபுரு ஷோத்தம
னெறியான மறையாலே நேதிநேதி யென்றுபின்
பிறியாத பேரின்பப் பிரமமே நீயென்றென்
னறியாமை தவிர்த்தபி னவனேநா ஞனேனே. (எ

பண்டைநான் முகனாரும் பார்தலல் லுலகமுங்
கண்டவை நரகென்று கழித்தவர்க் கருள்செய்தான்
விண்டலர் பொழில்சூழும் வீணையந் தணனுய்வந்
தண்டமுநீ யென்ன வவனேநா ஞனேனே. (அ

ஓராமை யேமூல முலகுக்கென் றுணராதே
பேராசை யுள்புக்குப் பிரமித்துத் திரிவேனை

வாராயென் றருள்செய்து மறைசொன்ன பிரமமு
மாராயி னீயென்ன வவனேநா ஞனேனே. (௯)

அடியொடு முடிவினை யாராயி னிலையாகுங்
குடியொடு பதிகுலங் கோத்திர சூத்திரச்
செடியினை யறுத்திட்ட ஸ்ரீபுரு ஷோத்தம
னடியிணை சேர்ந்தபின் னவனேநா ஞனேனே. (௧0)

போதுக்கு மொளியான பூமநற் சோதிதன்
பாதத்தேபணிமாறத் தொடுத்தசொற் றொடைபத்துங்
கோதற்ற மனத்தார்கள் குருபர னருளாலே
வாதற்ற பிரமமே வடிவாகி யிருப்பாரே. (௧௧)

அவனேநான் முற்றிற்று.

௬௬ - வது, அவித்தியாப்பிரலாபம்.

---

எண்சீர்க்கழிநெடிலடியால்வந்த ஆசிரியவிருத்தம்.

அறிவென்றே ராண்மகனு ளவையறி யாதே
யவிச்சையெனும் பேதையேனுமவர்க்குமுன்னம்புகுந்
நெறிநின்று நெடுநாளெல்லா மென்னோடே நல்கி [தே
நேயமெனும் விலக்கமுமாய் நின்றதற்குப் பின்பு
பொறியைந்தும் புலனைந்தும் பூமிமுத லைந்தும்
புந்திமன மாதிநாலும் புரியும்வாயு வைந்து
மெறிகின்ற விருபத்து நால்வரையும் பெற்றே [டே.
னென்னைவிடா வினையாளோடே போனார் காணுமாண்

பொய்யான வுறவாலே புத்திரரு முண்டாய்ப்
பூமிதனி லென்னைப் புறப்படவே புகுந்தேன்
மெய்யான வுறவாலே மிக்கவனை விரும்பி
வீடுகெட்டு விளைவுகெட்டு வேற்றுடம்பே யானார்

சையோவிவ் வார்த்தைதனைச் சாற்றலாவ தொன்
தம்பாவ மனைத்தினையுந் தள்ளிவிட்ட தன்மை
யையோவிவ் வாண்மகனு ரவளைவிடா ராண்டே
யவிச்சைகுல நசித்தாலன்றி யவளைவிடா ராண்டே.

என்னைமணம் புணர்ந்தநாளே யிரட்டைவளை யிட்ட
னேகனு யிருந்தவனே யனேகனுமிங் காறு
னன்னைசொல்லை மறுப்பானே ராங்காரன் பிறந்தா
னந்தரமே யவர்க்குநல்ல வாசையையும் பெற்றேன்
பின்னைவிச்சை புருந்தகற்பின் பேர்த்திடவுந்தவிர்ந்த
பேதையேனுமிவர்க்குச்செய்தபிழைகண்டிலேனிதன்
முன்னமிவ ரெனக்குச்சால நல்லர்கிடீ ராண்டே
முகமாய மிடுவதன்மு வல்லர்கிடீ ராண்டே.

சாந்தியொடு தாந்தியெனும் பாங்கியர்கள் சூழத்
தற்பரமா மறிவினொடே சமாதியிலே புகுந்தான்
பேர்ந்திடுதல் பறைந்திடுதல் பிரிந்தொருகாற் பாரா
பிச்சியெனப் பிதற்றவிட்டுப் பேசாதே யிருப்பன்
றேந்திரியே யமையாதோ செகத்தினுள்ளீ ரெனக்
சிலவரோடே யோரஞ்செய்து சீவிப்பதிற் காட்டி
லோர்ந்திடிலிங்குரைக்கலாவதொன் றுமில்லையாண்
யோமென்னும் பெருந்தீயில் வீழ்வதல்லா லாண்டே

அருவாகி யிருந்தவருக் கென்றுடை யவைவா
லகிலமெல்லாம்படைத்தளிக்கு மாண்மைதனைக்கெ
ணொருவராலு முடியாத வுதவிதனைச் செய்தே [த்
னொருநாளென் குடிலகத்தி னடந்தாலோடிப் போ
ரிருவர்புக்கார்க் கிதற்குமுன்ன மிவைகண்டது மில்
லென்னுடையபொறையினாலேயிதுநாளிங்ஙனடத்தே

புருடரிவ ராகையாலே பொறுத்தேன்காணு மாண்டே.
பூண்முலையாரிவைகள்செயப் பொறுப்பரோதாணுண்டே.
எங்குமெங்கு மிவர்க்குநல்ல வின்னமிர்தா யிருப்பே
னிகலோக பரலோக மென்னதல்லா வில்லை
யங்கங்கே வற்றையுண்டிட் டவளோடே யிருப்ப
ராண்மகனார் செய்யுங்குண மாற்றலாவதொன்றோ
கொங்கைநல்லா ளிடுமருந்தாற் குணமிப்பு மானன்
கொச்சையேனு மிச்சித்தக்காற் கூடலாவ துண்டோ
வங்கணமொன் குடில்வாயி லயர்த்தார்காணு மாண்டே
யவர்க்கிளையா ளந்தரங்க மானுள்காணு மாண்டே. (சு)

அத்தலைக்கு மித்தலைக்கு மொத்திருக்கச் செய்தே
யாண்மகனார்க் கொருதவசி யறிவுசொலப் புகுந்தா
னித்தலையி லுறவறுத்தா னிளையவளைக் கொண்டே
யிருவுமென்றன் விதிவசமோ வென்றிருந்தேன் சிலனு
ளத்தலையி லுறவினையு மப்படியே யறுத்தா
னுண்டிசெய்தவழ்ந்துதன்னை யார்க்குச்சொல்லுவேனன்
றொருத்தறுத்துச் சோதிவடி வாக்குவாரோ பெண்ணே
சோதிக்குளே நாமும்புகத் தூரியமில்லை காணே. (எ)

சாக்கியாகி யவாங்நன் சலியாதே யிருக்கச்
சகமனைத்துஞ்சஞ்சிந்திக்கே சாய்ச்சுகொடே போந்தேன்
பாக்கியமில் லாமையாலே பயல்களையும் பாரான்
பசித்தாலும் பயிக்கம்பண்ணப் பார்த்துக்கொடே யிருப்பன்
வாக்கினுக்கு மனத்தினுக்கு மெட்டாத நிலத்தே
மறையவளைக் கொடுபுக்கே வைச்சுக்கொடே யிருப்ப
னுக்கினுமோ யழிப்பாராருற் றடுக்கலாமோ வாண்டே
யடையக்குல நசிப்பதிங்ங னுயிர்த்தோமே யாண்டே. அ

அன்றிவன் வசத்தினொடு சத்துமலை வாகி
யாண்மகனார் வெறுத்தவன்றே யநிருபதி யானே

னின்றெனக்குச் சனித்தனவு மிப்படியே யாறு
லேந்திழையீ ரொன்சொலுவே னிந்தக்கேடு தனக்(
வொன்றிடிறுலகுதனி லொருத்தியைப்போலெ(
னேருபாயங் காணேறு துணர்வுபுக்க பின்னை
யென்றுமினை யவளைப்பார்த் திடுவர்காறு மாண்(
யென்னைக்கடைக் கண்ணாலும் பாரார்காறு மாண்(

அச்சட்டையா லன்னமேறி யகிலமாக வென்றிட்
டன்புடைய குணத்தினாலே யகிலமெலாம் படை(
னுச்சட்டையாற் புள்ளையேறி யுலகமெலாங் காக்(
மொளியுடைய குணத்தினாலே யுவமையிலி யாறு(
மச்சட்டையா லெருத்தையேறி யுலகமெலா மா(
மாயக்குணந் தானான வள்ளலெனைப் பாரா
னேச்சட்டையா லுணர்வுதோன்றி யுண்மையாறு ராண்(
யோமுமிட்டுத் துரியமாக வுணர்ந்தார்காறு மாண்(

அவித்தியாப்பிரலாப முற்றிற்று.

கூஎ - வது. * பாண்டியுரைவாரம்.

குறள்வெண்செந்துறை.

ஏற்றப் பானைபோ லிவ்வுடலை, யென்று மென்று(
ரேய்த்தக்காலும், பேர்த்துப் பேர்த்துமிது வூத்தை(
ன்றோ, பேத மறுத்திட வற்றோ சொல்லீர்.

அல்ல லுடலைக் கழித்து, அறிவே வடிவென் றுண(
திருப் பார்க்குச், சொல்லக் கடவதொன் றுண்டே(
சுருதிக ளேற்றி யளவிறந் ததைத்.

கானலை நீரொன் றுணர்ந்து, களையுந் திரையு றுவ(
ங்கண் டாற்போற், றனல்லா வூனைத்தா னாக்கிச், (
திர கோத்திரஞ் சாற்றுகின் றேரோ.

* பாண்டியுரைவாரமென்பது - பாண்டித்தியவுரையாம்

புத்தி விகற்பத்தை விட்டுப், பொதம் வடிவென் றுண ர்ந்திருப் பார்க்கு, வித்தனை கூத்தாடல் வேண்டுமோ, விரவி யுதித்தா லிருள்போ மிடத்து. (சு)

பரிதி யொருவ னுதிக்கப், பலகோடி யண்டங்கள் பே தமா னாற்போற், சுருதி முடிவி னுதிக்கச், சொல்லும் பொருளுந் துலங்கிடுங் காணே. (ரு)

பாத்திர பேதத்தி னாலே, பலகோடி யிரவிகள் பேத மா னாற்போ, னேத்திர மான பிரம, நிகரிற் ப்ரபஞ்சமு மாயுதித் தானே. (சா)

மதியைக் குறிப்ப திலக்காய், மாமரத் துச்சியைக் கா ட்டி னாற்போற், பதியைக் குறிப்ப திலக்காய்ப், பஞ்ச கோ சச்சட்டை சாத்தி னரே. (எ)

செகத்தெங்கு நிறைந்தவச் சிவனார் நம்மைச், சிந்தை யிலன்றித் தெளிவுறார்காண், முகத்தை முகத்தாலே கா ணலாமோ, முன்கையிற் கண்ணாடி தானொழிய. (அ)

ஊனிலே யொன்பது வாசல்விட்டு, வொருவனைக் கா வ லிருத்தி வைத்து, வூனி லொருவனும் போனவாறே, யொன்பது வாசலு நாய்புகுங் காணே. (கூ)

ஓங்கு முடியைத் தலையில் வைக்க, வுலகமெல் லாமர சாளு மாப்போ, லாங்காரந் தனையறி வோடேகூட்ட, வகிலமு நாமா யிருக்க லாமே. (க0)

நெஞ்சிலே கட்டை யடுக்க விட்டு, நீட்டி நிமிர்ந்து கிடப்ப தன்முன், னஞ்சையு முள்ளே யடக்கிக்கொண் டு, யானந்த மாயறி வாகவல் லீரோ. (கக)

அம்மையு மப்பனுங் கண்டிருக்க, வந்தக னாருயிர்

கொள்வதன் முன்ன, மும்மையு மூனையும் வேற, வுள்ள பொழுதே யுணரவல் லீரோ. ( )

மக்களுங் கத்த மனைவிகத்த, மாய வுடலெரி வதன் முன்ன, நிஷ்கள மான வறிவு தன்னை, நு வாக நினையவல் லீரோ. ( )

இருவினைப் பாசங் கழுத்தினிலிட், டேற விறங் மூப்பதன் முன்னங், குருவினைச் சென்று பணிவி கிற், கோதி லறிவோடே கூடலாமே. ( )

போத வடிவை மறந்து, பூமிக்கே வந்து பிறந்த றே, தாதா தவசியென் றேசிச், சங்கேதிக் துத்தம் விழுந் தாரே. ( )

தன்மய மான வுணர்வ யர்த்துத், தாணியில் வ பிறந்த வாறே, யென்மக னென் றெடுத்துக் கொ யானுன் மகனென் றிசைந்திருந் தாரே. ( )

தனையு மிரண்டுள தண்டொன் றக்கைத், தாமே வாருந் தாங்கு வாருங், கனையும் படியறி யாமையா காவித் திருந்தவா கண்டுகொள் வீரோ. ( )

வானூறி பூதங்க டோற்று கைக்கும், வான்கருத் புலன் றோற்று கைக்கு, மூனுடம்பு தங்க டோற்றுவ கு, முண்மையு மாயுணர் வாயிருந் தானே. (க

போது புலர்ந்து புருந்தனையும், புத்தியை யெ னும் போக விட்டுத், தூதுவர் வந்து புருந்த வா துடைகள் பறக்கத் துடங்கி னாரே. (க

கொத்து முதலியொருவ னுன் ளனவன், கொள் மில்லைக் கொடுப்பது மில்லைப், பத்துக் கூலியத் துச் வகருமவன், பார்வையா லேயடை யாயி னாரே. (

கொல்லும் புலிபோ லுயிர்பருகுங், கூறறத்தின் வா யிற் குறுகி டாதே, சொல்லு மனமு மிறந்து நின்ற, சோதிநா மென்று சுகிக்கவல் லீரே. (உக)

பாண்டியுளாவார முற்றிற்று.

## கூஅ·வது, பார்ப்பானும் பறைச்சியும்.

குறள்வெண்செந்துறை.

அன்னமயமீதுடம்பு வறிவானந்தபோதமேயெங்கு
மென்னேபிராமணனீரோ யேறப்போவென்குதிங்காளா.

சோதியாய்நின்றதிங்கொன்று சொல்லுமுடம்பிதுசோறு
சாதியாய்நின்றதிங்கேது சாயப்போவென்குதிங்காளா. (உ)

பூண்டவுடம்பிதுபூதம் பரிபூரணமானதுபோத
மாண்டேபிராமணனீரோ யகலப்போவென்குதிங்காளா. (ந)

சுக்கிலஞ்சோணிதமன்றித் தோற்றுங்குலமுண்டோசொல்லீ
ரொக்குலமல்லதென்னூதே யேறப்போவென்குதிங்காளா. (ச)

இறைச்சியெலும்புதோலன்றியெனக்குமுனக்கும்வேறுண்டோ பறைச்சிபோ வென்னுண்டாய்பார்ப்பான் பண்டேநீ பேய்கொண்டாயாதே. (ரு)

இருவருமொருவழிபோகச்சே யேறப்பாராப்பார்ப்பானேனேலி லெங்கென்று, னிருவர்விலங்கிலும்வழிவிலங்காதென் றேனெத் தாலென்றுனுமத்தாலென்றேன். (சா)

உடலுக்குடல்பொய்யல்லவொன்றே யுண்ணின்றசோதிவிலக் கவொன்றே, வடலைப்பிராமணனீரோ யகலப்போவென்குதிங் காளா (எ)

முற்றிற்று.

சிவமயம்.

## ௬௬ - வது, பறைச்சியும் பறையனும்.

---

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

பரமான மதுவுண்டு பரவசனும்படி
பாதங்க டலைந்தா ராரோடா பறையா
வரமான குணமூன்று மழியவே யருள்செய்த
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி.

மெய்ஞ்ஞான மதுவுண்டு மெய்மறந் திருக்கவே
மேலான பதந்தந்தா ராரோடா பறையா
வஞ்ஞான மழியவே யறிவினை யருள்செய்த
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி.

எண்ணிறந் தநரம்புகளு மிறைச்சிகளு முடைய
விந்திரியப் பொந்திரிய வழித்தாரார் பறையா
கண்ணெதிரே யெழுந்தருளிக் கவியுகந் தின்றெடுத்துக்
கரையேற விட்டானென் றறியாயோ பறைச்சி.

ஏற்றத்தாழ் வின்றி வரம்பொன்றுங் காணமே
யெங்கும் போதவெள்ள மாவானேன் பறையா
வாற்றைத் தலையிலே தேக்கினான் காலிலே
யடைய வொதுக்கினேன் காணேடி பறைச்சி.

சோதிமந் திரமுண்டு சுகியாமே சுகிக்கின்ற
வாதிமந் திரந்தந்தா ராரோடா பறையா
வாதியந் தமுமில்லா வறிவானந் தத்தேவர்
பாதமென் றலைதந்த தறியாயோ பறைச்சி.

தன்னைத்தா னறியாத சாதியை மிகவுண்ணத்
தாளிணை தலைமிசை தந்தாரார் பறையா

யன்னத்தால் வருங்கோச மறிவன் றென்றிடு
மானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (௬)

கருமறை யும்படி திருமந் திரமுண்டு
களிக்கவே பதந்தந்தா ராரோடா பறையா
வருமறை முடிவிது மறியவொண் ணாதிடு
மானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (எ)

ஊனைக் கழித்துண்மை யாமந் திரமுண்ணை
யுபதேசந் தந்தவ ராரோடா பறையா
வானைக் கருள்செய்ய வன்றுவந் துதவிய
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (அ)

இருவினை யானது வேரறப் பார்த்துன்னை
யிப்பிறப் பறுத்தவ ராரோடா பறையா
சுருதிக டேடியு மறியவொண் ணாதவந்
துய்யநற் சோதியார் காணேடி பறைச்சி. (௯)

அன்றான வறிவுதந் தறியாமை தனைப்போக்கி
யகம்பிர்மம் மூனக்களித்தா ராரோடா பறையா
குன்றாத மெய்ஞ்ஞான நன்றாக வருள்செய்யுங்
கோதில்சுக வப்பனென் றறியாயோ பறைச்சி. (௧0)

சாதிகுல பேதமறச் சங்கை யறத்தெரிந்து
சந்தான வுபதேசந் தந்தாரார் பறையா
நீதியினு லுணர்வேயாய் நித்தசுத்த மாகிய
நின்மலனு மப்பனென் றறியாயோ பறைச்சி. (௧௧)

குன்றாத மெய்ஞ்ஞானங் கொணர்ந்துனக் கருள்செய்
கொன்றான வுண்மையை யுரைத்தாரார் பறையா [திங்

சென்றார்தம் போதகத்தைத் தெளிவுறக் கண்டிடி
லன்றாயு மவனென்றிட் டறியாயோ பறைச்சி. (கஉ

பறைச்சியும் பறையனு மூற்றிற்று.

க00 - வது, சாற்றுபறை.

---

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

பொன்னையொழி யச் * சவடி காறையிலை யாற்போற்
புவனங்கள் பதினாலு மிருந்தபடி பார்க்கி
லென்னையொழி யப்புவன மேதுமிலை யென்றிட்
டிரவுபக லனவரத மறையுமேடா பறையை (க)

ஆங்கார வன்னியறை யரசழியப் பொருதிட்
டவருடைய மைந்தரையு மறவச்சிறை வைத்து
வோங்கார வடிவான துண்மைப்தே யென்றிட்
டுலகுதொறு மோயாதே யறையுமேடா பறையை.(உ)

இயமமென நியமமென விரட்டைமதி விட்டு
விதயபுண்ட ரீகமெனு மில்லதனுக் குள்ளே
யயனைமுத லமரொலா மடிகள்பணிந் தேற்ற
வறிவுகிடை ராசரசென் றறையுமேடா பறையை. (ங)

ஊனைவடி வாகவுணர் தம்மதியை விட்டு
வுண்மையுணர் தம்மதியை யுள்ளுறவே நிறுத்தி
ஞானவடி வானவனை நானவனே யென்று
நாடோறு நாடோறு மறையுமேடா பறையை. (ச)

ஏதுமலா வறிவுதனன் யான்மறையோ னென்றிட்
டெருதுபோ லேயாகா திகன்மதன்ம மெடுத்துப்

---

* சவடி இத்தேசத்தில் சவளியெனவழங்குகின்றது.

பேதமெனும் படுகுழியில் விழுந்துபல பிதற்றும்
பித்தினையு மறுத்தோமென் றலையுமேடா பறையை. ௫

எடுப்பதொன்று மிடுவதொன்று மன்றுகிடீர் பிரம
மேழைச்சன முழன்றறுக்கு மாயத்தானம் போலே
கொடுப்பதொன்றுங் கொள்வதொன்றுமன்றுகிடீர் பிர
கோதிலறி வானதென் றறையுமேடா பறையை. [௬

அறிவான வடிவுதனை யறியாமை மறைத்திட்
டகமனித னென்றிடுமவ் வவமானங் கழிய
நெறியான வறிவுதரு நின்மலனு ரருளா
னித்தசுத்த மானேமென் றறையுமேடா பறையை. (௭)

வானாதி பூதமெல்லா மாயையாலே வளர்த்து
வடிவுதொறு மறிவாகி வளர்வுகுறை யின்றித்
தானேயா யுலகனைத்துந் தன்னில்வே றில்லைத்
தான்சேரா னுலகமென்று சாற்றுமேடா பறையை. ௮

பொய்யாய மாயையினைப் புவனமுழு தாக்கிப்
புத்தியெனு மந்திரிக ளோடுபுவி யாள
மெய்யாய வறிவுகிடீ ரரசாள்வ தென்று
வீதிதொறும் விளங்கிடவே யறையுமேடா பறையை.

புகழிலங்கு மறிவானும் பூமச்சோதி யருளாற்
புவனங்கள் பதினாலும் பொய்யெனவே புணர்ந்து
நகளின்மறைத் தமிழ்மாலை பத்தினையுந் தொடுத்துத்
தோளின்மிகச் சாத்தினேமென் றறையு*மேடாபறையை.

சாற்றுபறை முற்றிற்று.

---

* ஏடர்களென்பது ஏடாவென பன்மையொருமையாய்வ
ந்த வழுவமைதி.

சிவமயம்.

# கoக - வது, திருவுந்தியார்.

கலித்தாழிசை.

அஞ்ஞான காரிய மனைத்தையு மறவிட்டு
விஞ்ஞான மானோமென் றுந்தீபற
வெளியாகி நின்றோமென் றுந்தீபற (க

முடியாத பிறவிகண் முடிந்திட மாயையைத்
துடியாம லறுத்தோமென் றுந்தீபற
துரிசற்று நின்றோமென் றுந்தீபற (உ

போதத்தை யுணராதே பொல்லாத மாயையாற்
பேதத்தை யுணர்ந்தோமென் றுந்தீபற
பேதமும் பிரமமென் றுந்தீபற (ங

முன்செய் தவத்திலே முயன்றவப் பெருமையாற்
பின்சாதி கழிந்தோமென் றுந்தீபற
பிரமமே யானோமென் றுந்தீபற (ச

அதுவேகா ணிதுவென்றொன் றாரியனருள்செய்ய
விதுவது வாகுமென் றுந்தீபற
விலக்கணை புகுந்ததென் றுந்தீபற (ரு

தொம்பதந் தனிலுள்ள துகளினை யறுத்தக்காற்
றம்பத மறிவேயென் றுந்தீபற
தாக்கற்று நின்றோமென் றுந்தீபற (சு

தற்பதந் தன்னிலுஞ் சபளத்தைக் கழித்தக்கா
னிற்பது போதமென் றுந்தீபற
நீக்கியொன் றில்லையென் றுந்தீபற. (எ

அசிபதந் தனக்குள்ளே யவனேகா ணிவனென்ன
வுசிவந்தோன் றானேமென் றுந்தீபற
வொழிவர நிறைந்ததென் றுந்தீபற. (௯)

பாக்கியத் தாலேநாம் பழமறை மொழிந்திட்ட
வாக்கியங் கேட்டோமென் றுந்தீபற
வரவுபோக் கற்றேமென் றுந்தீபற (௧௦)

அக்கண மறிவாக வடியிணை தருவார்க்குத்
தெக்கணை காணேமென் றுந்தீபறச்
செய்வதொன் றில்லையென் றுந்தீபற. (௧௦)

* உந்தீ பறபெண்கா ளுந்திபற
வுணர்வோநா மானேமென் றுந்தீபற. (௧௧)

திருவுந்தியார் முற்றிற்று.

௧0௨ - வது, அனுபவமாலை.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பொங்கு கானல் புனலாய வண்ணமும்
போத மேபேத மாகி யதுபுரிந்
தெங்கு நாமறி வாகி யிருந்தா
லீதென் றீதென்றென லாவ துண்டோ. (௧)

சமய மாறுக்குஞ் சத்தா மொளியதாய்ச்
சாக்கி யாகி யிருந்த விடத்திலே
யமையு மாசை யவற்றிற் பிதற்றைவிட்
டாறி னாருக் கலந்தலை தானுண்டோ. (௨)

---

* உந்தீபறபெண்காளென்பது- ஒருமை பன்மையாய்வந்த வழுவமைதி.

அஞ்சு கோச வாணை யழித்திட்டு
வானந்த வறி வாகிய வாசையும்
வஞ்ச மாகு மதுவிட்டு வாழ்வார்க்கு
மாய வாழ்வை மதிப்ப தினியுண்டோ. (௧

கலவி யென்பதோர் கட்டை யறுத்து
காமன் வாழுங் கருக்குழித் தூர்த்தே
யலையிலா வுணர் வாயிட் டிருந்தா
லமரர் வாழ்பதி யிற்புக வுண்டோ. (௨

காம கோபப் பெரும்புலி வாழுங்
கன்ம காண்ட மெனுங்காடு வெட்டி
யோமே னும்பொரு டன்னை யுணர்ந்தே
யுண்மை யானூர்க் கொருகுறை யுண்டோ. (௩

தோற்று மாயத் துவக்கை யறுத்துத்
துய்ய போதச் சுகத்தினை யுண்டு
காற்றி லாவிடங் கண்டிட் டிருந்தாற்
கற்ப னையின் கருத்தழி யாதோ. (௪

வான மழிந்து மகானு மழிந்துபின்
மாயை தானு மழிந்து வழக்கற
நான மழிந்துபின் ஞானது வானு
ஞானு னென்பதோர் நாசந்தா னுண்டோ. (௫

சுருதி யந்தமாஞ் சுத்த சுகத்தைச்
சோம்பை விட்டுச் செவியாரக் கேட்டு
மிருதி யாற்றெளி வாக வுணர்ந்தான்
மீண்டுபோ தென்னும் வேதனை யுண்டோ. (௬

எரியின் முன்னவ நீத மதுபோ
லெல்லா மேகபோ கத்தி லுருக்கிச்

சரிவி லாதசத் சித்தா யிருந்தாற்
றுமியா மென்னுந் தங்குத லுண்டோ. (௯)

போக்கி னோடு வரவு மிறந்து
புரண போதம தாகிப் பொலிந்து
வாக்கி னோடு மனமு மிறந்தால்
வாசகஞ் செய்ய லாவதொன் றுண்டோ. (௧0)

அனுபவ மாலை யையி ரண்டையு
மத்தன் றமனாற் சோதிதாள் சாத்தி
யுனு பவவழி மாள வுரைத்த
வொப்பி லாதார்க் கொருகுறை யுண்டோ. (௧௧)

அனுபவமாலை முற்றிற்று.

௧0௩ - வது, அறிவு.

---

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

போகாத மாயையைப் போக்கிட லாவதும்
புண்ணிய பாவம் புறத்திட லாவது
மாகா தழியா திருந்திட லாவது
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ (௧)

என்னிலே யாவையுங் கண்டிட லாவதும்
யாவையு மென்னையுங் கண்டிட லாவது
மன்னியங் கண்டிலோ மென்றிட லாவது
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ. (௨)

மோகாதி யெல்லா முறிந்திட லாவது
முற்றுமுற் கன்மங்க ளற்றிட லாவது
மாகா தழியா திருந்திட லாவது
மறிவே வடிவா யிருந்திட னல்லவோ. (௩)

இந்தப் பிறப்பினின் றேறிட லாவது
மேகாந்த மாகி யிருந்திட லாவது
மந்தக் கரண மறுத்திட லாவது
மறிவே வடிவா யிருந்திட லல்லவோ.

நற்செய் தவங்களு மற்றிட லாவது
நானெனு மாங்கார நச்சற லாவது
மற்சனை யெல்லா மறவிட லாவது
மறிவே வடிவா யிருந்திட லல்லவோ.

அறிவுமுற்றிற்று.

கOச - வது, * தச்சராண்டு.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

என்னை யறியா வறியாமை போயிட
வேகமா யின்ப மெனக்கே யருள்செய்து
பின்ன மில்லாத பிரமநீ யென்றிடப்
பேச்சற்ற மெய்ப்பொரு ளானோமே யப்பா.

கண்ட கருக்குழி மாளும் படிக்குக்
கருணையி றைகலந் தாண்டு கொண்டு
பண்டை வடிவது நீயாறு யென்றிட்டுப்
பார்க்கப் பரமா யிருந்தோமே யப்பா.

கருதும் பொருளிவை யெல்லாங்
கானலி நீரொன்று சொல்லி
யொருவ னுணர்த்த வுணர்ந்து
வொப்பற்ற மெய்ப்பொரு ளானோமே யப்பா.

---

* தச்சராண்டென்பதோர் கூட்டம்.

தப்பா மறைப்பொரு டன்னைத்
தானே யெனக்குத் தலைவ னளித்திட
வொப்போத மில்லா வுணர்வோனா னைபின்
னொன்றிய மெய்ப்பொரு ளானோமே யப்பா (௪)

பேதப் பிணக்கற வெண்ணிப்
பேராத துன்பப் பிறவி யறுத்திடும்
போதப் பொருளே யுணர்த்தப்
பொய்யிலா மெய்ப்பொரு ளானோமே யப்பா. (௫)

தேடுந் தனமுந் திடமாம் பிராணனுங்
கூடு முடலுங் குருபர னுர்க்கென்று
பாடு மறையின் படிபரன் கைக்கொள்ள
நீடும் பரமாகி நின்றோமே யப்பா. (௬)

தோற்று முலகவை யெல்லாந்
தோற்று திருக்குஞ் சுகமேவடி வென்னப்
பேற்று முறையுங் கடந்த
பிரமமே நாமா யிருந்தோமே யப்பா. (௭)

அத்தி கிரியிலு மன்ப ரறிவிலு
மாதி யருளாளர் தாமா யிருக்கவே
யெத்திசைக் கேதெய்வ முண்டென்று சொல்லிடு
மேழையர் தங்காசு கொள்ளோமே யப்பா. (௮)

அண்ட மனைத்துமாய் நின்ற பரனார்த
மாகம வாக்கியந் தன்னை யுணராதே
பிண்ட மதனையே நானென்று பேசிடும்
பேதையர் தங்காசு கொள்ளோமே யப்பா. (௯)

கூடும் பரனுங் குருபரன் பாதமே
நீடு மடியவர் நெஞ்சத்து ணின்றிடத்

தேடுந் தனமுஞ் செகமுந்தான் மெய்யென்று
நாடு மவர்காசு கொள்ளோமே யப்பா.

தச்சராண்டு முற்றிற்று.

க0ரு - வது, பாம்பாட்டு.

[*]

குறள்வெண்செந்துறை.

ஆதியு மந்தமு மேது மில்லா வறி
வானந்தத் தேவ ராணை யாணை
சோதியுட் சோதிநா மானோ மென்று
சுருதிகள் பாடின் றாடாய் பாம்பே.

சுருதியுங் கருதிடாச் சுகமேகா ணீயென்று
சொல்லாதே சொன்னவ ராணை யாணை
கருதிய வுலகினிற் கற்பனைக ளெல்லாங்
கானலி னீரொன்றே யாடாய் பாம்பே.

ஆங்கார மோகங்க டான்கழிய
வடியிணை சூட்டினா ராணை யாணை
யோங்காரத் துட்பொரு ளாகி நின்ற
வுண்மைநா மானோமென் றாடாய் பாம்பே.

நாரிய ரென்னும் வலையிற் பட்டு
நானென தென்னு நருவ ரீர
வாரியன் வந்தடி வைத்த போதே
யானந்த மானோமென் றாடாய் பாம்பே.

மனமுத லான கரண மெல்லா
மாய வருள்செய்தா ராணை யாணை
நனவிலுங் கனவிலுஞ் சுழுத்தி யிலு
நானேதா னானேனென் றாடாய் பாம்பே.

கடையிற் சரக்கினைக் கண்டு நான்போய்க்
காதலித் தெங்குங் கழிந்தி டாதே
மடியிற் சரக்கினைக் காட்டித் தந்த
மாமறை பாடநின் றாடாய் பாம்பே. (௬)

ஒக்கலைப் பிள்ளை யுடனி ருக்க
வூரெங்குந் தேடி யுழலு வேனை
யக்கணம் பிள்ளையைக் காட்டித் தந்த
வாசானைப் பாடிநின் றாடாய் பாம்பே. (எ)

சந்திக டோறுங் குடைவி ரித்துத்
தப்புக்கை கொட்டும் பிடார னல்லேன்
புந்தியுள் ளேயுறப் பார்த்த போதே
போக்கிட மற்றேமென் றாடாய் பாம்பே. (அ)

கோசங்க ளென்னுங் குடமு ருட்டிக்
குலநல மென்னுங் கொடிய றுத்துப்
பாசங்க ளென்கின்ற பற்கள் வாங்கிப்
பார்ப்பறப் பார்த்தோமென் றாடாய் பாம்பே. (௯)

அப்பத மிப்பத மென்றி ரண்டி
னாசங்கை தீர்த்தவ ரானை யானை
தற்பதந் தொம்பதந் தாம்பு றம்பாய்த்
தன்மய மானோமென் றாடாய் பாம்பே. (௧0)

பிறவிக ளென்னும் பெருங்க டலைப்
பிறகிட்டுப் போந்தவ ரானை யானை
திறவிய தேசிகன் சேவ டியைச்
சேராதே சேர்ந்தோமென் றாடாய் பாம்பே. (௧௧)

அஞ்சு முகமுடைப் பாம்பி னீரோ
யாராயி னும்முக மொன்றே காணுங்

துஞ்சுவ தில்லாத் துரிய நாமே
தோன்றுதே தோன்றின் றுடாய் பாம்பே. ( )

பாம்பாட்டு முற்றிற்று.

க0சு - வது, நையாண்டி.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஆரணந் தேடற் கரியா னொருபையல்
பேராமை காட்டிப் பிறவா தனசொன்னான். )

நானு தனசொல்லி நாண மழித்தென்னைக்
காணாது காட்டிக் கழித்தானு னென்செய்வேன். )

நில்லா வுபாதி நிலையேநீ யென்றிட்டுச்
சொல்லாது சொல்லித் துவக்கை யறுத்தானே. ( )

முடிவு நடுவு முதலுமில் லாப்பைய
லடியை நினைவுற வானந்த மானேனே )

சுருதிக டேடியுந் தோன்றாத பையலார்
கருதிய நீயென்றுக் காலாலே பாய்ந்தானே. )

வரையொன்றி லாப்பையல் வார்த்தையைக் கேட்( r
னுரையொன்றுங் காணாது வுன்மத்த னானேனே. )

எட்டா நிலத்தே யிருப்பா னொருபையல்
கட்டின தெல்லாங் கழித்தானு னென்செய்வேன் )

பேச்சு முறையும் பிறவு மறுத்தென்னைத்
தோய்ச்சு மொளியிலே தோய்ச்சாமெய் செய்தா( r.

விதியாலே காடேறி விறகோடே போவேனைப்
புதியானோ ராண்பிள்ளைப் போகாய்வா ராயென்( r.

கரியா ரூடம்போடே கடைகொள்ளப் போவேனைப்
பெரியானோராண்பிள்ளை பிறவாதெல்லாஞ்சொன்னான்.

விள்ளேன்விள்ளேனென்றுவேண்டிற்றெல்லாஞ்சொல்லி
யுள்ளே கொடுபுக் குடம்பைக் கழித்தானே. (கக)

கருதி யிருக்கிலுங் கண்ணுக்கெட் டாப்பையல்
சுருதி முடிவிலே தோன்றினா னென்செய்வேன் (கஉ)

ஆரணந் தேடற் கரியா னொருபையல்
காரண நீயென்னக் காலாலே பாய்ந்தானே. (கங)

மருவ வடிவில்லான் மானமில் லாப்பைய
லொருவன் கிடையொன்னை யுள்ள மழித்தானே. (கச)

முன்னில்லைப் பின்னில்லை மூலமில் லாப்பைய
லென்னில்லைத்தன்னில்லையென்றானென்செய்வேன்.

சோதித்துப் பார்க்கிலேன் சுருதிக டேற்றிலேன்
பேதிக்கப் போகாத பிரமநா மானேமே. (கசு)

இட்டிடத் தூங்கிலெ னேதேனுஞ் செய்கிலே
னெட்டொன்று மில்லாத வுணர்வுநா மானேமே.(கஎ)

ஓட்டிலே பிச்சையேற் றுண்பா னொருபையல்
வீட்டிலுங் கொண்டுபோய் வெளியிலே விட்டானே.

பண்டில்லை மேலில்லைப் பாரிரிப் பையலார்
பெண்டிரோ டென்றும் பிரியா வுணர்வென்னே. (ககூ)

கண்டதுங் கேட்டதுங் காணாத போதிலு
முண்டதுங் கொண்டது முனக்குண்டோ வென்றானே.

பொறியும் றிருக்கிலென் புலனைச் செயிக்கிலெ
னறிவைப் பிரியாத வானந்த மல்லேனோ. (உக)

நெஞ்சிலே நெஞ்சிலே நிற்பா னொருபைய
லஞ்சு மறுத்தறி வாக்கினு னென்செய்வேன். (உ

கருவை யறுக்கிலேன் கழலிணை சூட்டிலே
னுருவை யில்லாப்பைய லுறக்க றவிர்த்தானே. (உ

தன்னை யிகந்து தனியே யிருப்பானை
யென்னெனச் சென்றுநா னென்னை யிகந்தேனே. உ

நாட்டார்தாமென்செய்வார் நமனார்தா மென்செய்வ
வீட்டார்தா மென்செய்வார் வீணே திரிவானை. (உ

அஞ்சுவ தில்லை யடங்கு வதுமில்லைத்
தஞ்சமில் லாப்பைய றான்றோன்றி யானானே. (உ

உள்ளத்தி லுள்ளே யுதிப்பானொரு * பையல்
வள்ளலைக் கண்டுநான் வரவுபோக் கற்றேனே. (உ

ஏதமில் லாப்பைய லென்னையுந் தானாகப்
போத வுணர்த்திப் புகலு மறுத்தானே. (உ

கரமே கலமாகக் கண்டிடமெல்லா மிரந்துண்டு
பரமே பரமாகப் பற்றற்றிருக்கநாம் பெற்றோமே. உ

அடியின்றி முடியின்றி நடுவு மின்றி
யாகாசந் தானின்றி யங்ங னேயாய்
வடிவின்றி நின்றதோர் வடிவு தன்னை
மறைகளல் லோதேடி மயங்கு தின்னம். (௩

நையாண்டி முற்றிற்று.

---

* பையல் – சிற்றாள்.

சிவமயம்.

## கO௭ - வது, மனம்.

———(*)———

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

சேராய் மனமேநீ சிற்பரத்தோடே நஞ்சிவனை
யோராமையல்லதுணர்விற்பிறிதொன்றுங்கண்டிலேனே.

சொல்லாய் மனமேநீ சொல்லாதிருப்பதென் சொல்லற்றே
வெல்லாம் பிரமமாய்நின்றபி னேதென்று சொல்லுவேன் (உ)

சுற்ற னினைத்தல் கருதுதல் செய்யாய்மனமேநீ
சுற்று மகத்துஞ் சுகங்கா ணினிப்பலசொல்லியென்.ங

பண்டுபோ லன்றிப் பதைப்பற்றிருந்தாய் மனமேநீ
கண்டதனைத்து மறிவாகக் காணுதே கண்டோநீ. (ச)

ஐயோ மனமேநீ யாராயமாட்டா திருப்பதென்
பொய்யோ முடிந்தது பூரணபோதமே யானேமே. ரு

என்னே மனமேநீ யேவிற்றுச்செய்யா திருப்பதென்
முன்னே கருமத்தின் மூலவவிச்சை முடிந்ததோ. (சு)

கோத்தாமவித்தையின் கொத்தைக் குலையாய்மனமேநீ
பார்த்தாலனைத்தும் பழுதையிற்பாம்பாய்முடிந்ததே.௭

அன்னையை முன்ன மறிவாலறப்பறித் தாட்டினே
னென்னையும் பின்னையிலாமை நிலையிட்டா லென்செய்வேன்.அ

கரணமனைத்தையுங் கையொக்கப்பாராய் மனமேநீ
புரணமேயெங்கும்புலனுக்குப்போக்கிடங்கண்டிலேனே.

போகாய் மனமேநீ போகாதிருப்பதென் போக்கற்றே
வாகாவிவர்சொல்லும்வார்த்தையேயெங்குமறிவன்றே.

கலைகளனைத்தையுங் கற்கிலைகண்டாய் மனமேநீ
யுலைநீர்போல்வெந் துனக்குள்ளேநடா வொளியானேனே.(கக)

மனமுற்றிற்று.

சிவமயம்.

# ௧0௫ - வது, செட்டியார்.

—*—

குறள்வெண்செந்துறை.

ஓரா திருபல வெண்கல, மொக்க நிறுத்திக் கொடு
த்தே ஞன், சேர வொருபல மாக்கிஞர், செய்யும் ட
யெனிச் செட்டியார். (

எட்டிடை யாலிட்ட தட்டிடையை, யெல்லோருங்
ணக் கொடுத்தேஞன், றட்டி நிறுத்தாரிச் செட்டியா
தத்வமசி யென்றார் செட்டியார். (

வீடாயிருப்பது நாற்பல, வெண்கலத் தாலிட்ட த
டியை, யோடாக மாறிஞர் செட்டியா, ரொருபல ம
கிஞர் செட்டியார். (

கடையி லிருப்பாருந் தாமேயாய்க், காணக் கொ
த கலமெல்லா, முடைய நிறுத்தி தொருபல, மு
மையீ தென்றாரிச் செட்டியார். (

என்று முடையாக் கலந்தன்னை, யெல்லாருங் கா
கொடுத்தேஞ, னன்றே யுடைத்தாரிச் செட்டியா,
ரறிவா ரென்றார் செட்டியார். ((

உண்ட கலங்க ளனைத்தையு, மோரா ரறியக் கொ
த்தேஞன், கொண்டுநீ யாரென்றார் செட்டியார், கூற
கூறிஞர் செட்டியார். (

ஓட்டைக் கலத்தி லிடவிட, வுள்ளசோ றெல்லா ப
வுண்டு, வீட்டி லிருப்பாரிச் செட்டியார், வியாப
முஞ்செய்யார் செட்டியார். (

செட்டியார் முற்றிற்று.

சிவமயம்.

## கOகூ - வது, இம்பில்.

—————(*)—————

கலித்தாழிசை.

ஆதிப் பிரம மறியாமை தன்னாலே
பேதித்துத் தோன்றிற்றென் றிம்பிலடி
பிறப்பிறப் பில்லையென் றிம்பிலடி. (க)

வந்த பிறவியும் வானாதி பூதமு
மிந்திர சாலமென் றிம்பிலடி
யெனக்கழி வில்லையென் றிம்பிலடி. (உ)

ஏகமே யல்லா விரண்டில்லை யத்விதப்
போகமே யானேமென் றிம்பிலடி
புலன்வழி கெட்டதென் றிம்பிலடி. (ங)

அண்டத்தை யெல்லா மறிவே படைத்தமை
பிண்டத்தே கேட்டோமென் றிம்பிலடி
பேதமற் றில்லையென் றிம்பிலடி. (ச)

பூதங்க ளைந்தும் புலன்கள் பதினாலும்
பாதத்தே பாய்ந்ததென் றிம்பிலடி
பரமே பரமாமென் றிம்பிலடி. (ரு)

ஏறிட்ட சட்டை யிரண்டையு ஞானத்தாற்
கீறிக் களைந்தோமென் றிம்பிலடி
கிளைப்பதொன் றில்லையென் றிம்பிலடி. (சா)

மாங்கூ டிடுக்கிட மாசாகந் தீண்டிற்றென்
றேங்கா விறந்தானென் றிம்பிலடி
யெல்லாமிப் படியேயென் றிம்பிலடி. (எ)

ஆரியன் வந்திங் கடிதலை வைத்தபின்
பூரண மானதென் றிம்பிலடி
போக்குவர வில்லையென் றிம்பிலடி (௫

பன்னு மறையின் படியே பரனைத்
தன்னை யுணர்ந்தோமென் றிம்பிலடி
தத்துவந் தானேயென் றிம்பிலடி. (௬

இம்பில் முற்றிற்று.

௧௧0 - வது, பந்து.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஒன்றாகி நின்றபே ருணர்வே யுணர்ந்திட்
டோமென்னுங் கரத்தினாற் பந்தாடா நின்றேன்
பின்றாதே யென்னோடே பிழைப்பாயோ பந்தே
பேய்த்தேரி னீருண்ணப் போவாயோ பந்தே. (௧

பத்தியே வளர்கோலப் பட்டினை யுடுத்துப்
பாழ்வினை சரிதையாற் பந்தாடா நின்றேன்
முத்தியே வடிவாகி நிற்பாயோ பந்தே
முட்பூவிற் றேனுண்ண முயல்வாயோ பந்தே. (௨

வாகாதி தொங்கலை வாவலித் துடுத்து
மதனன்றன் வழிமாறப் பந்தாடா நின்றேன்
போகாதி யனைத்தையு மொழிவாயோ பந்தே
புரிபி லரவாகிப் போவாயோ பந்தே. (௩

சுருதிநன் முலைமாதர் தோழிமா ராகச்
சொல்லொணா நிலத்திலே பந்தாடா நின்றேன்
றிருகின்மை யாலழி வாவாயோ பந்தே
தெளிவின்மை யாற்பிறந் திடப்பாயோ பந்தே. (௪

உலகங்கள் பதினாலு மொருகாலா லடக்கி
யுணர்வேமுக் காலாகிப் பந்தாடா நின்றே
னலகில்லா வறிவுரு வாவாயோ பந்தே
யங்குமிங் கும்மாகி யலைவாயோ பந்தே. (௫)

தேசிக னாடி சென்னிமேல் வைத்துத்
தேச காலங்கெடப் பந்தாடா நின்றேன்
வாசியில் லாவறி வாவாயோ பந்தே
மாயா மயமாகிப் போவாயோ பந்தே. (௬)

ஆறு முகமு மடையப் புதைத்திட்
ட்றிவே முகமாகிப் பந்தாடா நின்றேன்
வீழும் வெறுப்பு மறுவாயோ பந்தே
விதியா ரோவற்றொழில் செய்வாயோ பந்தே (௭)

குணக்குங் குடக்கொடு தெற்கும் வடக்குங்
கோணங் களுமாகிப் பந்தாடா நின்றே
னணுக்கவொண் ணுவறி வாவாயோ பந்தே
யங்குமிங் கும்மா யலைவாயோ பந்தே. (௮)

கோசமென் னுங்கழற் கற்றைக் குலையக்
குருபரன் றாள்சூடிப் பந்தாடா நின்றேன்
பாச மறுத்தறி வாவாயோ பந்தே
பார்க்கி லில்லாப்பவ மாவாயோ பந்தே. (௯)

எல்லாம் பிரமமே யென்னு மொழியாலே
யானேயா னாகப் பந்தாடா நின்றே
னில்லாத வாழ்வை நினைவாயோ பந்தே
நித்த சுத்தம்முத்த மாவாயோ பந்தே (௰)

பந்து முற்றிற்று.

சிவமயம்.

## ககக - வது, ஞானகாண்டம் - கன்மகாண்டம்.

——(*)——

கலிவிருத்தம்.

அந்தண ராகிவந்தா றங்கமறை யோதி
மந்தணங்கள் பேசி மடவாளை மணஞ்செய்து
செந்தழ லில்விட்டுத் தேவரோ டிருக்கின்ற
நந்தறி வாருண்டோ ஞானகாண் டத்தில் (

அருக்கனார் கலங்கடோறு மநேகரா யிருந்தாற்போ
லொருத்தனை யுணராமையாலுல கேழுமாய்ப்
பொருத்தற வுடலகடோறும் புரைவறப் புகுந்துநிற்
கருத்தனை யறிவாருண்டோ கன்மகாண் டத்தில். (உ

தேடிய பொருள்கொண்டு தேவாரம் பலசெய்து
கூடிய செல்வத்தைக் குறைவற விருந்துண்டு
நீடிய வுலகங்க ளனைத்திலு நெடுங்கால
நாடிட விருப்பாருண்டோ ஞானகாண் டத்தில். (ங

அளவறுத் துலகத்தை யநித்தியமென் றறிந்தபி
னிளமை கெடுவதன்மு னியமநிய மஞ்செய்து
தளவற வானந்த வனுபோக வடிவினைக்
களவறக் கண்டாருண்டோ கன்மகாண் டத்தில். (ச

அரசரா யவனிதன்னி லடிதொழ வரசாண்
டுரைசெய வுலகினி லொப்பாருண் டோவென்னப்
பெருசறிவ ராகிப் பிறந்துள்ள பெருமையு
நரர்சுரர் பசுவுமுண்டோ ஞானகாண் டத்தில். (ரு

பெரியதே சுகமென வருமறை பேசிட
வரியதோ ரனுபவ மகத்திலே யுதித்தபின்

மருவிய பிறவியு மாயையு மாய்வுறக்
கருவினைக் கழித்தாருண்டோ கன்மகாண் டத்தில்.(௬)

வாடாத மலர்சாந்து மதிமுக மடந்தையர்
தேடாத வடிசிலுஞ் சென்றிடச் சேவிப்ப
வீடாசா மரம்வீச வெண்கொற்றக் குடையிட
நாடாளப் பிறந்தாருண்டோ ஞானகாண் டத்தில்.(எ)

கோணாத மனத்தராய்க் குருபர னருளாலே
நாணாத நான்மறைத் தலையினை நிலைகண்டு
பூணாதே புலகினைப் புரைவறப் புகுந்திட்டுக்
காணாது கண்டாருண்டோ கன்மகாண் டத்தில். (அ)

வானினு மண்ணினு மற்றுள வுலகினுந்
தேனினு மினியபோ கங்களைத் தெரிந்துண்டு
மேனில நிலையென்றும் விதிவேதத் துளதென்று
நானென்று மிருப்பாருண்டோ ஞானகாண் டத்தில்.௯

செய்தவப் பயனெல்லாஞ் சிறிதென்று சிலதள்ளி
மொய்தவத் தினாலே முத்திக்கே முயன்றிட்டு
மெய்தவத் தினைக்கண்டு வேதாந்தத் திருப்பார்கள்
கைதவ மல்லா துண்டோ கன்மகாண் டத்தில். (௧0)

கொள்ளோயா குதியினை யமரர்க்குக் கொடுக்கைக்கே
யெள்ளளித் தெசமாண வொட்டுப் பெயரோடே
சள்ளென வள்ளெனச் சாற்றிய சடங்கிலே
நள்ளென வல்லாருண்டோ ஞானகாண் டத்தில். (௧௧)

ஆரணந் துதிசெய்யு மறிவினை யகமென்று
பூரண மாகியைம் புலன்களும் புறத்திட்டு
மாரண முமற்றைப் பிறவியு மறுத்திடுங்
காரணங் கண்டாருண்டோ கன்மகாண் டத்தில். (௧௨)

ஞானகாண்டங் கன்மகாண்ட முற்றிற்று.

சிவமயம்.

# ககஉ - வது, பாங்கிக்குரைத்தல்.

———(*)———

குறள்வெண்டாழிசை.

மானே பட்டது சற்றே மானே பட்டது சற்றே
மானிற் பெரியதோ ராண்பிள்ளை வந்து
தானே நானென்று போனானவன்
றன்னையுங் கண்டிலே னென்னையுங் காணேன்

பெண்ணே பட்டது சற்றே பெண்ணே பட்டது
பெண்ணம் பெரியதோ ராண்பிள்ளை வந்து
கண்ணே கண்ணென்று போனா னந்தக்
கண்ணையுங் கண்டிலே னென்னையுங் காணேன்.

பாங்கிக்குரைத்தல் முற்றிற்று.

# ககங - வது, தச்சாண்டி.

———*———

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

உன்ற னிடத்திலு மூரா ரிடத்திலு
முலகம் பதினாலு முள்ள வொருபொரு
டன்றனை யீதென்று காட்டித்தந் தார்க்குச்
சமைத்துக் கழலிட்ட தச்சாண்டி யன்றே.

ஒப்பாரி தன்னா லுயிரோ பிரமமென்
றேதியே போகாமே யோர்மாத் திரைக்குள்ளே
தப்பாமே யிங்ங னிருவென் றிருத்தச்
சமைத்துக் கழலிட்ட தச்சாண்டி யன்றே

தச்சாண்டி முற்றிற்று.

# ககச-வது, அப்பா.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஆத்ம சுரூபமே மெய்த்தெய்வ மென்னு
மாரணம் பொய்யோ வனுபூதி யில்லையோ

பார்ப்பற நீர்பனை முட்டைக் குருப்போற்
பாஷாணம் விட்டும்மைப் பார்த்தாலோ வப்பா. (௧)

கொள்ளைக் * கிராந்தங் குதட்டிப் பிறகுநீர்
கோதிலா ஞானமுங் கூறியே நாணுதே
மெள்ள விருந்து சிவவேடங் கொண்டு
விழிசிம் பிளிக்கை தவிர்ந்தாலோ வப்பா. (௨)

அப்பா முற்றிற்று.

௧௧௫ - வது, குணலை.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

தேவாரஞ் செய்கின்ற திண்டாட்ட மெல்லாநாந்
தீரவே தீர்ந்தோமென் றிடுகுணலை
செயலெங்கு மான திறம்பாடிப் பாடித்
தெளிவெங்கு மானதென் றிடுகுணலை
நாவார வோதிய நாமமே தங்களு
நமக்கினி யமையுமென் றிடுகுணலை
நம்மில்வே றிலையெனுந் தன்மை யதும்போக
நாமோநா மானோமென் றிடுகுணலை. (௧)

வேறு.

உடம்புட னுயிலிலை யுணர்வே யுறவென்று
முணர்வொழிந் தில்லையென் றிடுகுணலை
யோர்வி லுணர்வேயென் றிடுகுணலை
கடம்படு மென்னுங் கதற்றுக் கழிந்தது
கலங்காது காணென் றிடுகுணலை
கதற்று மொழிந்ததென் றிடுகுணலை. (௨)

---

* கிராந்தம் - இரியைமுடிவு.

ஆசார மெல்லா மடையவிட் டங்கநா
மாஞோநா மாஞோமென் றிடுகுணலே
யருமறை யறியாதென் றிடுகுணலே
யாசார மானவை முழுது மறவிட்டே
யானந்த மாஞோமென் றிடுகுணலே
யறிவு வடிவேயென் றிடுகுணலே. -)

குணலை முற்றிற்று.

௧௧௬ - வது, பிடாரன்.

---

குறள்வெண்செந்துறை.

நாதச் சிலுகாக்கு நச்சர வாட்டும் பிடாரனை யெல்லாம் பா
தச் சம்மட்டியாலேபோனபோனிடமெல்லாம் போகடிப்( ன்.

வாக்கை யடக்குவிப்பேன் மனமோடாமை வைச்சுத்தி( ப
னீக்கொன்றிலோடவுமொட்டேனின்மல மாக்கும்பிடார( ன.

அன்றுமென்றல்லல்கள் பேசியடங்கி யிராதானையெல்லா( மா
ன்றுகமெய்யுணர் வாலேயொக்க விருத்தியொருக்குவே( ௩)

பிடாரன் முற்றிற்று.

௧௧௭ - வது, அம்பட்டன்.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பதைக்கவேதனைசெய்யும் பலமூலப் பெரும்புண் ப்
பார்வையா மயிலாலே யறுத்துத்துன் றசையா
மூதித்தவூ வினையுணர் வனலே கோலதுவா
யுண்மையிற் றெகித்திட் டவம்பட் டன்சியா ௧)

உலகொடு பொருண்மைந்த னொனுமுள்ளத் தொ( வ
யோர்வாலே கிறியங் கொழித்துண்மை யுணரா
வலைபேதப் பெருவன்மக் கிரந்தியை யறிவா
காரத்திற் களைத்திட்ட வம்பட்டன் சியா. ௨)

சங்கற்ப விகற்பமாந் தசையது படர்ந்து
தன்மையாம் விழிமுடிச் சடமாகி யுதித்த
வங்கத்தை யசமென்னும் படலத்தை யுரித்து
வறிவா விழிப்பித்த வம்பட்டன் * சியா. (ரு)

அம்பட்டன் முற்றிற்று.

கக அ - வது, வண்ணான்.

—— *. ——

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

கறையுறு முளத்தூசிற் காமாதி முழுதுங்
கமையென்னும் பெருங்கல்லிற் கரிசறப் புடைத்து
வறையுறு மலமா மதியுவர் பிடித்து
வைம்பூதத் துடக்கென்று மறவாவி வைத்து
வுறைதரு பெருமாயை யொதுக்கற வொலித்து
வொழிவற வொளிர்போதப் பிரமமே யாக
மறைமுறை கழுவிய வண்ணாத்த னடியேன்
வாசாம கோசர வண்ணாத்த னடியேன். (க)

தேசுறு முளத்தூசிற் றிகழ்மையன் முழுதுஞ்
சிதையவே யெடுத்தடித் தலம்பியங் கதனை
யாசறு சமதம மதியுவர் பிடித்து
வகிலத்தோ டணைவொன்று மறவாவி வைத்துப்
பேசுறு பெருமாயை பிறழ்வற வொலித்துப்
பிறிதற வொளிர்போதப் பிரமமே யாக
மாசறக் கழுவிய வண்ணாத்த னடியேன்
வாசாம கோசர வண்ணாத்த னடியேன். (உ)

அழுக்குறு முளத்தூசி லாகுமுக் குணமீ
டணைமுழு தறப்புடைத் தலம்பியங் கதனை

* சியன் — பெரியோர்.

யிழுக்கறும் விமலமா மதியுவர் பிடித்து
யானென தென்முழு தறவாவி வைத்து
புழுக்கூடி னுளமாயை புரையற வொழித்துப்
புரணபூ ரணப்போதப் பிரமமே யாக
வழுக்கறக் கழுவிய வண்ணத்த னடியேன்
வாசாம கோசர வண்ணத்த னடியேன். (௰)

வண்ணான் முற்றிற்று.

௬௧௬ - வது, முதலியார்.

---

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

சட்ட னென்று தலைப டித்திடுஞ் சழக்கறுத்த முதலியா
சாந்த மாகவே வாய்ந்த பாவனைத் தலைநிலைன்ற முதலி
கட்டறுத் தெனைக் கழலிணைதந்து கண்ணளித்த முதலிய
காரிருளி லிரவிபோ லுள்ளே கலந்துநின்ற முதலியார். (௧)

குறைகொள் ளும்புலன்களைக்கையுந் துணியவெட்டு முத யார்
சுருதிசொன்ன சுகவடிவாகத் துணிவுதந்த முதலியார்
பாறைநெஞ்சு பதஞ்செய்யும்படி பார்த்தருளிய முதலிய
பத்தரொய்ப்பினில் வைப்பதாகிய பரிசுடைய முதலியார் (௨)

அப்புலனுமவ் வுடலுமோர்வற மொழிதந்த முதலியா
ரடியிணைதலை மிசையினில்வைத் தாண்டுகொண்ட முதல ார்
செப்பரிய சிவவடிவாகத் தெளிவுதந்த முதலியார்
சிந்தையோடு மனமொன்றும்படி திருத்தியாண்ட முத யார்.

முதலியார் முற்றிற்று.

---

சிவமயம்.

## கஉ0 - வது, தவமுந் தவமுடிந்ததும்.

—(*)—

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

சங்கரனாகி யிமையோர் தவம்பண்ணிச் சாரச்சடைகட்டவுந்
தன்கழறன்னிற் பணியாருயிரெல்லாந் தானேதலைகட்டவுங் [ங்
கங்குல்பகலென்றடியார்கள்வேறின்றுங்காணமேகண்கட்டவு
கட்டுவீடற்றகண் காட்டினான்வீரக் கழல்கட்டிக் காட்டினானே.

பண்டைவினையாற்பணியாதவர்தம்மைப்பாசத்தளைகட்டவும் [ங்
பணிந்தேதத்திநிற்குமடியாரைவிண்ணோர்பணியப்பட்டங்கட்டவு
கண்டுகளித்தவர் பண்டுதாங்கத்திக் கதற்றுங்கலைகட்டவுங்
கண்ணாகியதன்னைக்காட்டினான்வீரக் கழல்கட்டிக்காட்டினானே.

வருபிறவிக்குமருந்தென்றடியாரை மாலயன்கால்கட்டவு
மனக்கணக்கிட்டுவழக்குற்றறைகின்ற வாதியர்வாய்கட்டவுங்
கருதலர்செம்பொற் கதிர்மேனியின்றன்மை காணமேகண்கட்ட
வுங், காணாதுகாட்டியதம்பிரான்வீரக்கழல்கட்டிக்காட்டினானே.

தவமுந்தவமுடிந்தது முற்றிற்று.

## கஉக - வது, ஆண்டார்.

—※—

குறள்வெண்டாழிசை.

முன்னாண்டவல்வினைபின்னாண்டுவாராமே மோக்கிசமாகவே சாக்கிரானுக்கிய, வென்னாண்டாரென்பேனோ வென்னாண்டவரொன்பேனோ. (க)

மூண்டவல்வினை மாண்டுநான்வெறு முத்தனாகவேசித்தனுக்கிய வாண்டாரோயென்பேனோ வாண்டவரோயென்பேனோ. (௨)

பூண்டமாமும்மலமாண்டபின்ஞான்வெறும் பூரணமாகவே
ற்கழல்சூட்டிடு, வாண்டாரோயென்பேறே வாண்டேரோயென்
றே.

ஆண்டார் முற்றிற்று.

## ௧௨௨ - வது, தச்சன்.

---

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

அறுகம்புனுனிப்பனியின்றனைவில்பல்யோனியினூடே
பெறுதாயுதரக்குகைபாய்ச்சிப்பிறழ்ங்கியின்மீறுவளர்த்து
மறுகாலவ்வியோனியினூடேவளர்காயமதாயிடும்வண்ண
மறியாமலியந்திரம்வைத்தவாசாரியையாரறிவாரே. ௧)

கால்வைத்திருகையதூட்டிக்கழியென்புரம்பொடிசை,
சாலக்குருதிப்புனலூடேதசையாமதிடன்னையமைத்துத்
தோலைக்கொடுமேலதன்மேவித்துளைநாபுவியந்திரகூடஞ்
சாலப்பொறிவைச்சதியக்குந்தச்சன்றனையாரறிவாரே. ௨)

பொய்யுற்றுடல்போலொருபாவை பொறியுற்றுளபோலச் ய்து
செய்யுற்றிகமோடியாத்திற்சென்றேயுழலத்திரிவித்துக் [ச்
கைவிட்டவியந்திரமாகக்கண்வைத்தவைகண்ணில்விழக்
தெய்வத்திகழ்தச்சனவன்றன்செம்பொற்கழல்சூடவல்லே. ௩.

தச்சன் முற்றிற்று.

## ௧௨௩ - வது, பாம்பாட்டி.

---

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

ஷிரகற்ற கூடத்திலே பாம்ப டைப்போம்
வேதாந்த வெளியிலே விட்டாட் டுவோங்

கரணங்கள் பிடித்தங்கே யிளைப்பி டுவோங்
காலங் கழியவே தப்பி டுவோம்
பரவிய மும்மல மாயை யென்னும்
பாம்புதான் சீறிக் கடித்த போது
வுரையற்ற மந்திரங் கொண்டு மீட்போ
முள்ளுளார் வாழுநின் றாடாய் பாம்பே. (க)

சித்திர முத்தி தருமென் றெண்ணிச்
சிந்தித்து நாளுந் திகைத்தி ராதே
பத்திர நிற்கவுறை குத்து மோதான்
பார்த்தானைப் பார்த்துநின் றாடாய் பாம்பே. (உ)

ஓங்காரத் துட்புகுந் துச்சி யேறி
யொன்பது துவாரத்தி னுட்பு குந்து
தூங்காமை தூங்கிநின் றாடாய் பாம்பே
தொந்தங் கடந்தோமென் றாடாய் பாம்பே. (ங)

ஆறாறு மிங்கேயம் பலமு மிங்கே
யாடரவக் கிங்கிணிக் காலு மிங்கே
பேறாறு மிடபவா கனமு மிங்கே
பிறப்பிறப் பற்றிடந் தானுமிங்கே
சீராருஞ் சிவஞான போதந் தன்னைத்
தெளிந்து தெளிந்துநின் றாடாய் பாம்பே. (ச)

பாம்பாட்டி முற்றிற்று.

கஉச-வது, நிலம்.

---

குறள்வெண்செந்துறை.

வேறுகூறொன் றுமிலாதநிலம்வேதாந்தமெய்ப்பொருளானநில
மாறியறிந்தாரறியுமங்ஙனேயாகியிருந்தநிலம். (க)

கலையறப் பார்த்தருட் கண்ணானே ஞகிலலோ
கண்ணிற் கருணைக் கடலானே ஞகிலலோ
தலையிறந்த செய்ய தாளானே ஞகிலலோ
தாடந்த தம்பிரான் முறனே ஞகிலலோ. )

ஏவலிலாக்காரணத்திகழ்ச்சி முற்றிற்று

௧௨௭ - வது, அம்மானை.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

மாயைக்கு வடிவு கொடுப்பர்கா ணம்மானை
மாயையா லுலகு வளர்ப்பர்கா ணம்மானை
யாயி லறிவா யிருப்பர்கா ணம்மானை
யாயாத போதுலக மாவர்கா ணம்மானை. (௧)

பார்க்கி லுலகம் பழுதைகா ணம்மானை
பாராத போது பழுதையாம் பம்மானை
யார்க்கு மறிய வரிதுகா ணம்மானை
யற்ற திறையடிகண் மற்றிலா வம்மானை (௨)

ஊனெனுந் தூணி லுதிப்பர்கா ணம்மானை
யோரா ருடலைப் பிளப்பர்கா ணம்மானை
யானென தென்னவொண் ணின்பங்கா ணம்மானை
யின்ப துன்பமற் றிருப்பர்கா ணம்மானை. (௩)

பத்திக் கடலி லமிர்தங்கா ணம்மானை
பார்க்கில் பரஞ்சோதி யாவர்கா ணம்மானை
யெத்திக்கு மெப்போது நிற்பர்கா ணம்மானை
யீறிலாப் போத மாவர்கா ணம்மானை. (௪)

உண்டிபா னங்க ளுயிரள வம்மானை
யோரின் மனத்தே சுகதுக்க மம்மானை

கண்ட நரைமரணங் காயத்தே யம்மானை
காண்பானுக் காறான மில்லைக்கா ணம்மானை. (ரு)

ஆறுபா வங்களு மில்லைக்கா ணம்மானை
யாறுகோ * தானு மப்படியே யம்மானை
பேறு மிழவுமில்லாப் பேரின்ப மம்மானை
பேதா பேதமில்லாப் பிரமங்கா ணம்மானை. (சா)

அம்மானை முற்றிற்று.

கஉஅ - வது, காளம்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அன்னிய மில்லையென் றாதேடா காள
மானந்த மானேமென் றாதேடா காளந்
துன்னு சுடரோயென் றாதேடா காளஞ்
சோதியுட் சோதியென் றாதேடா காளம். (க)

பிறவி கழிந்ததென் றாதேடா காளம்
பேதைமை தீர்ந்ததென் றாதேடா காளம்
அறிவே வடிவென் றாதேடா காள
மறியாமை போனதென் றாதேடா காளம். (உ)

கோசங் குலைந்ததென் றாதேடா காளங்
கூரறி வானதென் றாதேடா காளம
பாசம் பறிந்ததென் றாதேடா காளம்
பரமே பரமமென் றாதேடா காளம். (ஙு)

பற்றற்று நின்றேமென் றாதேடா காளம்
பார்ப்பறப் பார்த்தோமென் றாதேடா காள

* கோறுகாமாதி — கோடியென்றும்பாடம்.

முற்ற வுணர்வேயென் றூதேடா காள
முள்ளொளி யானேமென் றூதேடா காளம். ( )

உள்ளது போதமென் றூதேடா காள
மூலகமோக் காளமென் றூதேடா காளம்
வெள்ள வெளியிதென் றூதேடா காளம்
வேதஞ் சொன்னவண்ண மூதேடா காளம். ( )

ஊனே மறிவதென் றூதேடா காள
மூணர்வே பிரமமென் றூதேடா காள
நானே யவனுமென் றூதேடா காள
நானுவ தில்லையென் றூதேடா காளம். ( )

உண்மை வடிவேயென் றூதேடா காள
முட்பிறம் பில்லையென் றூதேடா காளந்
திண்மை யறிவேயென் றூதேடா காளந்
திசைதிசை தோறுமின் றூதேடா காளம். )

சாதி கடிந்ததென் றூதேடா காளஞ்
சங்கை தவிர்ந்ததென் றூதேடா காளஞ்
சோதி சுகமேயென் றூதேடா காளஞ்
சொல்லவொண் ணாததென் றூதேடா காளம். ( )

காளமுற்றிற்று.

கஉகூ - வது, ஆவான்.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

உள்ளா னொருவன்கா ணுவானே, புணையல தொக்
கிலை யாவானே, வின்னா னொருக்கா லு மாவானே,
ண்டுங்கே வைகொள்வா னுவானே. )

பண்டே யெனக்கடை யாவாளே, பற்றித்தென் ஞா லேகா ஞாவாளே, கண்டெ மதிகெட்டே ஞாவாளே, க ண்டுகூடக் கைவிட்டே ஞாவாளே. (உ)

தேடுமவ ஞனேகா ஞாவாளே, தேடப்படு மவரல்ல ராவாளே, வீடுமவர் தாமேகா ஞாவாளே, வேண்டுந் தே வைமீட்ப ராவாளே, (ங)

காரியஞ் செய்யார்கா ஞாவாளே, கண்ஞாலே கழிப்ப ர்கா ஞாவாளே, நேரியர் கூரிய ராவாளே, நிற்பரொங் கு ம்போகா ராவாளே. (ச)

வாயுங் கையுமில்லை யாவாளே, வாவென் றழைக்க வல்ல ராவாளே, யெய்வு மோய்வுந்தாரா ராவாளே' யெப்போதும் வாய்தாரி யாவாளே. (ரு)

பேநிக் கிடக்கிறு மாவாளே, பேரா திருப்பர்கா ஞா வாளே, யோதிக் குடிகெட்டோ மாவாளே, புனையுமெ னை புங்கைவிட்டா ராவாளே. (சா)

வஞ்சனை செய்வார்கா ஞாவாளே, வாக்கு மனமழிப் பா ராவாளே, நெஞ்சு கலங்கினு மாவாளே, நேதியெ ன்று நிற்ப ராவாளே. (எ)

ஓராத போதுளா ராவாளே, யோரி லொளிப்பர்கா ஞாவாளே, ※ யோராத நீயவ ராவாளே, யெல்லா மறிவு கா ஞாவாளே. (அ)

ஆவாள் முற்றிற்று.

---

※ ஏராகாதவென்பது - ஏராதவெனவிகாரமாயிற்று.

உ

சிவமயம்.

௧௩0 - வது, சோதனை.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பூணப் படாதன பூண்டு
போர்த்துடுத் துப்புறம் பேதிரி வேனைக்
காணப் படாவென்று சொல்லியெனிற்
கண்ட தனைத்துங் கழித்துவிட் டானே. (௧)

எட்டாங் காணத்தி னுள்ளே
யேவின காரியஞ் செய்திருப் பேனை
வெட்ட வெளியினிற் காட்டி
வேற்று முகந்தோன்ற வேறுசெய் தானே. (௨)

உலகர்க் கிசைய நடந்திட்
டொன்றுமுள் ளொன்றென் றுணர்ந் திருப்பேனை
சிலுகற்ற சிற்பர மாக்கியெனிற்
சேரு மனத்தையுஞ் செம்மை செய்தானே (௩)

காரிய முண்டென்று சொல்லிக்
கண்ணுக்கெட் டாதே கடக்கப் போவேனை
யாரியன் வந்துபுக் கென்னை
யப்போதே யானந்த மாக்கி விட்டானே. (௪)

சொல்ல வொண்ணாதன சொல்லிச்
செவியோடு கண்வாய்கள் சோதித்துப் பார்ப்பே
னெல்லை யிலாவறி வாகி
யானு மிதன்றி யிலிதிருந் தேனே. (௫)

சிட்டனு மாய்ப்பட் டனுமாய்த்
தேசத்துள் ளாரொரு வன்சொல்லப் போகப்

பட்ட விதனமும் பாரீர்
பரிபூர்ண மேபின்னு மானது பாரீர். (௬)

நீருக் குமிழியது போல
நிலையில்லா வாக்கைக்கு நேசித் திருந்தே
யாருக்கு நன்மைசெய் தோநா
மறிவே யகண்டமு மாய் வறியாதே. (௭)

ஏழைத் தனந்தனி னாலே
யென்னில்வே றில்லையென் றேநெடு நாளாய்ப்
பாழுக் கிறைத்தோமுநாமே
பண்டை யறிவை யறியா திருந்தே. (௮)

சோதனை முற்றிற்று.

௧௬௧ - வது, ஊர்.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

* நான்முக னுக்கிட மானவூ ரெங்களூர்
நான்மறை யுந்துதி செய்யுமூ ரெங்களூர்
தேவுக்குந் தேவா யிருக்குமூ ரெங்களூர்
தேவர்க ளன்றித் திரியுமூ ரெங்களூர். (௧)

தோற்றர வாகத் துணிந்தவூ ரெங்களூர்
சோகமோ கங்க டிறந்தவூ ரெங்களூ
ராற்ற லுடையார்க் கடைத்தவூ ரெங்களூ
ரானந்த மாயே யிருக்குமூ ரெங்களூர். (௨)

காமக் குரோதங் கழிந்தவூ ரெங்களூர்
கல்விக் கடலைக் கடந்தவூ ரெங்களூர்

---

* இச்செய்யுள்நெடின்மோனை - எதுகையின்று.

நாமரூ பங்க டவிர்ந்தவூ ரெங்களூர்
ஞானமே யாக நவின்றவூ ரெங்களூர். ௩)

அறிவிட் டறியாமை போக்குமூ ரெங்களூ
ரன்னிய மொன்றுமி லாதவூ ரெங்களூர்
குறியிட்டி தென்னவொண் ணாதவூ ரெங்களூர்
கோசங்க ளைந்துங் குலைந்தவூ ரெங்களூர். ௪)

புத்தி விகற்ப மறுக்குமூ ரெங்களூர்
பூரண போதமே யானவூ ரெங்களூர்
வித்தும் விளைவு மிலாதவூ ரெங்களூர்
விண்முதற் பூதம் விளைந்தவூ ரெங்களூர். ௫)

எட்டுத் திசையு நிறைந்தவூ ரெங்களூ
ரேகாந்த மாகி யிருக்குமூ ரெங்களூர்
தட்டற்ற யோகிக டங்குமூ ரெங்களூர்
தன்மபா வங்க டவிர்ந்தவூ ரெங்களூர். ௬)

உலகத்தை யெல்லா மொருக்குமூ ரெங்களூ
ருண்மையொன் றுமியொன் றானவூ ரெங்களூர்
சிலுகற்ற சிற்பர மானவூ ரெங்களூர்
சிந்தனை விட்டுத் தெளிந்தவூ ரெங்களூர். ௭)

உன்னப் படாவுணர் வானவூ ரெங்களூ
ருள்ளொளி யாகி யிருக்குமூ ரெங்களூர்
கண்ணுக் கணித்தா யிருக்குமூ ரெங்களூர்
கள்ளப் புலனைக் கழிந்தவூ ரெங்களூர். ௮)

கத்துஞ் சிலுகு மிலாதவூ ரெங்களூர்
காண்பானுங் காட்சியு மற்றவூ ரெங்களூர்
சுத்த வெளியிலே தோன்றுமூ ரெங்களூர்
சோம்பர் சுகமென் றுணர்ந்தவூ ரெங்களூர். ௯)

ஊர் முற்றிற்று.

நாமரூ பங்க டவிர்ந்தவூ ரெங்களூர்
ஞானமே யாக நவின்றவூ ரெங்களூர். (௩)

அறிவிட் டறியாமை போக்குமூ ரெங்களூ
ரன்னிய மொன்றுமி லாதவூ ரெங்களூர்
குறியிட்டி தென்னவொண் ணாதவூ ரெங்களூர்
கோசங்க ளைந்துங் குலைந்தவூ ரெங்களூர். (௪)

புத்தி விகற்ப மறுக்குமூ ரெங்களூர்
பூரண போதமே யானவூ ரெங்களூர்
வித்தும் விளைவு மிலாதவூ ரெங்களூர்
விண்முதற் பூதம் விளைந்தவூ ரெங்களூர். (௫)

எட்டுத் திசையு நிறைந்தவூ ரெங்களூ
ரேகாந்த மாகி யிருக்குமூ ரெங்களூர்
தட்டற்ற யோகிக டங்குமூ ரெங்களூர்
தன்மபா வங்க டவிர்ந்தவூ ரெங்களூர். (௬)

உலகத்தை யெல்லா மொருக்குமூ ரெங்களூ
ருண்மையொன் றாகியொன் றானவூ ரெங்களூர்
சிலுகற்ற சிற்பர மானவூ ரெங்களூர்
சிந்தனை விட்டுத் தெளிந்தவூ ரெங்களூர். (௭)

உன்னப் படாவுணர் வானவூ ரெங்களூ
ருள்ளொளி யாகி யிருக்குமூ ரெங்களூர்
கண்ணுக் கணித்தா யிருக்குமூ ரெங்களூர்
கள்ளப் புலனைக் கடிந்தவூ ரெங்களூர். (௮)

கத்துஞ் சிலுரு மிலாதவூ ரெங்களூர்
காண்பானுங் காட்சியு மற்றவூ ரெங்களூர்
சுத்த வெளியிலே தோன்றுமூ ரெங்களூர்
சோம்பர் சுகமென் றுணர்ந்தவூ ரெங்களூர். (௯)

ஊர் முற்றிற்று.

நாமரூ பங்க டவிர்ந்தவூ ரெங்களூர்
ஞானமே யாக நவின்றவூ ரெங்களூர். (௩)

அறிவிட் டறியாமை போக்குமூ ரெங்களூ
ரன்னிய மொன்றுமி லாதவூ ரெங்களூர்
குறியிட்டி தென்னவொண் ணாதவூ ரெங்களூர்
கோசங்க ளைந்துங் குலைந்தவூ ரெங்களூர். (௪)

புத்தி விகற்ப மறுக்குமூ ரெங்களூர்
பூரண போதமே யானவூ ரெங்களூர்
வித்தும் விளைவு மிலாதவூ ரெங்களூர்
விண்முதற் பூதம் விளைந்தவூ ரெங்களூர். (௫)

எட்டுத் திசையு நிறைந்தவூ ரெங்களூ
ரேகாந்த மாகி யிருக்குமூ ரெங்களூர்
தட்டற்ற யோகிக டங்குமூ ரெங்களூர்
தன்மபா வங்க டவிர்ந்தவூ ரெங்களூர். (௬)

உலகத்தை யெல்லா மொருக்குமூ ரெங்களூ
ருண்மையொன் றாகியொன் றானவூ ரெங்களூர்
சிலுகற்ற சிற்பர மானவூ ரெங்களூர்
சிந்தனை விட்டுத் தெளிந்தவூ ரெங்களூர். (௭)

உன்னப் படாவுணர் வானவூ ரெங்களூ
ருள்ளொளி யாகி யிருக்குமூ ரெங்களூர்
கண்ணுக் கணித்தா யிருக்குமூ ரெங்களூர்
கள்ளப் புலனைக் கடிந்தவூ ரெங்களூர். (௮)

கத்துஞ் சிலுகு மிலாதவூ ரெங்களூர்
காண்பானுங் காட்சியு மற்றவூ ரெங்களூர்
சுத்த வெளியிலே தோன்றுமூ ரெங்களூர்
சோம்பர் சுகமென் றுணர்ந்தவூ ரெங்களூர். (௯)

ஊர் முற்றிற்று.

உ

சிவமயம்.

## ௧௩௨ - வது, வாரணம்.

---

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

வினைவி லங்கு கழற்றிய வாரணம்
விரத கம்ப முறித்திடும் வாரண
மெனதி யானென் கனையை முறித்தெழீந்
தெங்கு மாமயிர் தாகிய வாரணம். (௧)

கரணப் பாகனை வீசிய வாரணங்
கருணை மாமலை மேவிய வாரண
மரண மாமறை யீறு முழக்கவே
யறநல் வீதியி லேவரும் வாரணம். (௨)

பத்தி வண்கோலுக் குளைந்தநல் வாரணம்
பாசக் கயிற்றாற் கட்டுணு வாரண
முத்தி மாமடு விற்படி வாரண
மூல மாமத வாரணம் வாரணம். (௩)

அன்ப ரன்பளற் றிற்படும் வாரண
மான்ற மாமத மேபொழி வாரணம்
வன்பி லோடு மணிதனை வாரியே
மாசு சேர்நிலை யத்தெறி வாரணம். (௪)

சமய வைம்பொழில் சாடியே யைந்தெனுந்
தழைமு றித்தயி லுந்தனி வாரண
மமைய வாழினர் மேல்கொளும் வாரண
மாதி மூலமென் றேறிடும் வாரணம். (௫)

கத்த வாதங் கடிந்தநல் வாரணங்
கவள மாவண்ட முண்டதோர் வாரண

நித்த வாரரு ளின்பட்டங் கட்டியே
நீச னேனையு மாண்மத வாரணம். (௬)

அலம லக்குறு மென்மனந் தன்னையே
யசைவ றச்சிவ மாக்கிய வாரணங்
கலக லப்பைநூற் கட்டுளை யொன்றினுங்
கரிச றுத்தநல் வாரணம் வாரணம். (௭)

கொச்சை வன்குலச் சாதிச் சடங்கெனுங்
கோடு வான்கொம் பற்றநல் வாரண
மச்ச மேது மறுத்தெனை யாண்டுகொண்
டிட்ட மாமத வாரணம் வாரணம். (௮)

மூவ ரும்பணிந் தேத்திடும் வாரண
முடிவில் கற்பகச் சோலையில் வாரண
மாவ வென்றடி யாருட னென்னையு
மாண்ட மாமத வாரணம் வாரணம். (௯)

வாரண முற்றிற்று.

கஙங - வது, மெய்ஞ்ஞானவிளக்கம்.

---

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

ஆடு பார்க்குதேடா வாரக் கோனே
யடையப் படர்ந்துதேடா வாரக் கோனே
யோடி மறியேடா வாரக் கோனே
யுள்ளே மறியேடா வாரக் கோனே. (க)

குறுகவலை குறுகவலை கோலக் கோனே
குரவனடி குறுகவலை கோலக் கோனே
குறுகவலைத் தவிழவிராய் கோலக் கோனே
குரம்பைதனைக் குலையவிராய் கோலக் கோனே. (உ)

ஓடியிடு காட்டேநான் * போகு தேனே
யோடாமை யுள்ளே மறிக்கு தேனே
யோடாமை யுள்ளே மறித்த வாறே
யோவாமை நின்று நடுங்கு தேனே. (௩)

ஓவாதே நின்று நடுங்கு மென்னை
யுள்ளே புகத்திரியத் தள்ளு தேனே
காவா நரகமுங் கைக மூன்று
கருதுமங் கொன்றையுங் காண்கி லேனே. (௪)

காணுதே நின்று கழியு மென்னைக்
காலிட்டுக் காலிட்டுப் பாயு தேனே
காணுத கண்ணைத் துடைக்கு தேனே
கதிர்போ லறிவங்கே காண்கு தேனே. (௫)

அறிவா லனைத்தையுங் காண்கு தேனே
யறிந்த வறிவா யிருக்கு தேனே
பிறியா வறிவா யெனையு மந்தப்
பேச்சற் றிடத்தி லொளிக்கு தேனே. (௬)

போராமை பேச்சற் றிடத்தே வைத்துப்
பேரின்பப் பாற்சோ றிடுகு தேனே
யாராதே நான்வாரி யுண்கு தேனே
யடையவு நானு யிருக்கு தேனே. (௭)

உண்டு களித்துநின் றுடு தேனே
யோவா தொளிரநின் றுடு தேனே

---

* இப்பதிகத்தில் மூன்றுவதுமுதல் ஒன்பதாஞ்செய்யுள்வரை க்கும் அடிகளினிற்றுச்சொற்கள் காலவிடையிலேகுறைந்து மரு விநின்றன.

யண்ட மழிந்துநின் றாடு தேனே
யலைவறக் கொட்டிநின் றாடு தேனே. )

உண்மைக் குழலைநின் றூது தேனே
யுணாமாண்டு சும்மா விருக்கு தேனே
வண்மைக் கருணை வளத்தை யுண்ணி
மறுகி யுடைந்துக்குப் போகு தேனே. )

ஆதார மிக்குநின் றாடாய் கோனே
யதிசய மிக்குநின் றாடாய் கோனே
சாதியை விட்டெறிந் தாடாய் கோனே
சதுரினை விட்டெறிந் தாடாய் கோனே. )

மெய்ஞ்ஞானவிளக்க முற்றிற்று.

கஙஉ - வரு, கும்மி.

---

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

ஆதிப்பிரமத்திருக்குமறியாமையாகாசாதிபூதமாய்ப்
பூதத்திராளாம்புலன்களொருபதாய்ப்போகும்பொறிகளா
யோதத்தகும்வாக்காதிகரணநான்கோங்கியசோலைக்குள்
வேதத்தலைவன்வருங்குறியாமிந்தவைதாந்தத்தட்குறியே. ௧)

ஏகனேகனிடையொருவரின்றிமெய்குநிலைநிற்றின்ற
போகம்புலன்கள்பொழுதுபுணரிலும்போதமேயாமினி ா
மோகங்கழியமுன்வேடங்கொண்டென்பான்முத்தியளித் பா
தே, யெகும்பிறவியென் றிடக்கண்டுதித்துமின்றே வரு ழி
யே. ௨)

அங்குமொருகுறையின்றியழியாவழிவாயிருக்கையாலு
மிங்குமொருகுறையின்றியினியனவேகமாய்நிற்கையாலு
பொங்கும்பிறவியும்பூதப்புலன்களும்பொய்யாயிருக்கைய

மெய்குருநிறைந்தவ னென்னையருள்செய்வா னென்றேயிடுங்குறி
யே. (௩)

பூணும்புலன்களனைத்தையும்பொய்யாய்ப்பொருந்திக்கழறரவும்
பேணுமனந்தப்பிரமநாமாயிடப்பேசாதுபேசிடவுங்
காணுங்கனவுநான்கண்டநிமித்தமுங்கண்டோடிப்பனவும்
வீணென்றுகாணும்விமலன்வருகைக்குமெய்யேயிடுங்குறியே.(௪)

நீசெய்வினையானிலையாதலுனையெடுத்துநெடுநாளெல்லாம்
வீசேசமுலகில்விழுவதெழுவதாயவினையுமன்றியென்
றோசைபரிசமுருவஞ்சுவைகந்தமோரிலுணர்வாகுமென்
றாசையறுக்கவமலன்வருங்குறியங்கத்திடுங்குறியே. (௫)

சலியாதுலகமனைத்தையுநோக்கிச்சனனமரணங்களு [ம்
மெலியாவிகபரலோகங்கடன்னில்வெறுப்பும் விழைவியாவையு
பலியாதேயச்சென்றிருந்தவனைத்தையும்பார்த்துப்பரமொழிய
நிலையாமலென்னெஞ்சுதன்னில்வருங்குறிநித்தன்வருங்குறியே.

ஆருமறியாவறிவதேதானென்றிட்டானந்தமாகச்செய்தே
ஞானனியனயக்கன்மயக்கறுத்தேதோற்றமம்மாயையிரு
ளோரறிவாகவுணர்த்தவுணர்வாருந்தம்மையுணர்ந்தபோதே
பேரறிவாய்ப்பினன்றியப்படாமைபிரமநாமாங்குறியே. (௭)

தன்னையறியாதிருந்தான்றனையிறைதானறிவித்தபோதே
யன்னியமின்றியகண்டபோதம்மாயறிந்துமறியாவிடிந்
பண்ணுமறையும்பரமேநீயென்றுபணித்தபடியதுவா
யின்னதிதுவென்றியம்பவொண்ணாப்பரமென்னுங்குறியதுவே.

தந்தைதாய்சுற்றத்துணையத்தமாகவேதாரணியிலுள்ளதெல்லாம்
பந்தமேயன்றிப்பயனில்லையென்றுபின்பாசம்பறித்தபோதே
சிந்தையவற்றினிற்சேராதவன்னெஞ்சு செறுத்தேயறத்தையுன்னி
வந்தபடிகண்டுமரணமற்றில்லதுமாயையறுங்குறியே. (௯)

அத்தனைகாலமறிந்தவர்தம்மிலடங்கியிருப்பதுவு
மித்தனைகாலமிவ்வூனையெடுத்தவிருவினைப்பற்றதுவு
மத்தனருமறையாலதுநீயென்னயானவனானதுவு
நித்தனாய்முத்தனாய்நேரொருவரின்றிநிற்கவருங்குறியே. 0)

குறி முற்றிற்று.

௧௫ - வது, கனாவுரை.

---*---

கலிவிருத்தம்.

உண்மையே யாகி யுலகுநிப் பதன்முன்ன
முண்மையிற் றென்று முணராமை யாலுநித்
துண்மையா லேவளர்ந் துண்மையி னுள்புக்குக்
கண்மையாய்த் தோன்றக் கனாக்கண்டேன் றோழி நான். ௧)

வானே முதலாய வையம் படைத்தபி
னானே புகுந்துபின் றுள்ளடங் கிக்கொண்டு
நானே முதலாம் பிரம முதலாகத்
தானே தழைக்கக் கனாக்கண்டேன் றோழிநான். ௨)

பண்டமுண் டென்று பரங்கெட் டிராதேநீ
விண்டிடும் போதேவே தாந்தத்தை நோக்கிட
வண்டமே யாத லகண்டமே யாதல்
கண்ட தழிக்கக் கனாக்கண்டேன் றோழிநான். ௩)

மெய்தவத் தானுன்னை முற்ற வுணர்ந்திட்டுச்
செய்தவத் தானுன்னைச் சிந்தித் திராதேநீ
கொய்தநற் கூற்றையுங் கொண்டநற் கோதையுங்
கைதவ மாகக் கனாக்கண்டேன் றோழிநான். ௪)

எங்கள் பெருமா னிணையடி சென்னிமேற்
றங்கும் படிகந்து தாமரைக் கண்களாற்

பொங்கும் பிறவிகள் போயகலப் பார்த்துக்
கங்குல் கழியக் கருக்கண்டேன் றோழி. (௫)

அன்னை மறையாக வப்ப னறிவாக
வுன்னிய போதே யுலகையு மூனையுந்
தன்னி லொளித்திடத் தன்குண மாங்கேயாய்க்
கன்னி பிறக்கக் கருக்கண்டேன் றோழி. (௬)

வேரிலா மாயைதான் வித்தாகிப் பூதமாய்ப்
பாரிலே தட்டப் பரந்து பலகொம்பா
யீரிலை யாயிங் கிரியங்க ளேபூத்திங்
கோரி லொளிக்கக் கருக்கண்டேன் றோழி. (௭)

சத்துக்குற் பத்திமுன் சத்தாத லாவில்லைச்
சத்தா வதுக்கு மசத்தலால் வேறில்லைச்
சத்து மசத்துமாய்ச் சந்திப்ப தொன்றில்லைப்
பித்தம் பிதற்றக் கருக்கண்டேன் றோழி. (௮)

பற்றிலா தானொருவன் பார்த்திட்ட பார்வையான்
மற்றில்லா மாயை மாமூறிந்து பேரறிவாய்க்
கற்றிலாக் காக்கைக ளெல்லாங் கனியுண்ணச்
சுற்றிலே பார்க்கக் கருக்கண்டேன் றோழி. (௯)

பேரா வுறக்கத்தாற் பெண்டிர் மகச்சுற்ற
மூரா ரொனத்தா னுறக்கத்தி னின்றேனைச்
சீரார் மறைவீரைச் சிரிபுரு டோத்தம
னோரா வுணர்த்தா னுள்ளொளியா னேனே. (௧௦)

கருவுரை முற்றிற்று.

———(✻)———

உ

சிவமயம்.

கஙஎ - வது, குறத்தி.

---

கலிவிருத்தம்.

பேதை வனம்புக்குப் பிணிமூப்புப் பின்றுழச்
சாதி பலபேசிச் சரித்திடுங் குறத்தியல்லேன்
சேதம் பலவின்றிச் சிற்மேலொன் றில்லாத
போத வடிவாம் புனையறுங் குறத்தியேனே.

நில்லா வுபாதிகளை நிருபியா நிலையாலே
பொல்லாத விடயத்திற் புகுந்துவிழுங் குறத்தியல்
னெல்லாம் பிரமமென வெண்ணில்லை நிலைகண்டு
சொல்லா லுணரவொண்ணாச் சுகமாங் குறத்தியே

மின்னிக் கழிந்தாற்போல் வீழுங் கருவுடலை
புன்னிப் பலரு முறைசெய்யுங் குறத்தியல்லேன்
மன்னைத் தனிற்கண்டு சத்தாதி யிந்தியங்க
ளொன்றுக் கிளியென விழித்திடுங் குறத்தியேனே.(

பச்சை வடம்பூண்டு பசுங்குழவி யணைசேர்த்துப்
பிச்சை பலகொண்டு பிழைபேசுங் குறத்தியல்லே
னச்ச மறத்துறந்த வதிகாரி குடியேறும்
விச்சை பலசொல்லி விளையாடுங் குறத்தியேனே.(

கட்டருங் காணமென்றுங் கடுநாய்கள் புடைசூழப்
பட்டி தலைவைத்துப் போய்ப்பீறுங் குறத்தியல்லே
சிட்ட னடிசூழச் சிவனே பிரமமென்று
விட்டுவிடா தொன்றில் விளையாடுங் குறத்தியேனே.(

விதிகள் பலபிதற்றி மேதினி புரப்பாப்பி
நிதிகள் பலதேடி யெய்துரவுங் குறத்தியல்லேன்

மதிகள் பலவிட்டு மரணபவ மானம்விட்டு
விதுவது வென்றே யேகமாங் குறத்தியேனே. (௬)

ஊனைவடி வென்றெண்ணு மூலகிற் பிறந்திறந்து
கானல் புனலென்று கருதிடுங் குறத்தியல்லே
ஞானமஃகப் பட்டதுபோ லாரணக் காட்டினுள்ள
தேனறிவை யுண்டு தெளிவாகுங் குறத்தியேனே. (எ)

குத்துத் தினைகுத்திக் கொழுமரத் தேன்வாங்கி
யத்திற்குழைத்துண் டறஞ்சொல்லுங்குறத்தியல்லேன்
முத்திமலை யேறிமுடி யாதவா னகத்தேனைத்
தித்திக்க வுண்டு தெளிவாகுங் குறத்தியேனே. (அ)

கேடுபடு மூடறனக்குக் கீழாய கிழங்குகல்லிக்
காடு மலையுங் கருதியிடுங் குறத்தியல்லேன்
பாடு மறையிற் பரம்பிரம மூலானுங்
கூடும் வகைதேடிக் குனித்திடுங் குறத்தியேனே. (௯)

போற்றித் தலைக்கொண்டு பூமச் சோதிபாத
மேற்ற மதுவாக வுட்சோதி யுரைபத்து
மாற்றும் பவமென்ன மனத்தோடே யதிகரித்துக்
கூற்றங் கனவிலுங் குறுகிடாக் குறத்தியேனே. (௧0)

குறத்தி முற்றிற்று.

௧௩எ - வது, ஊசல்.

---

கலிவிருத்தம்.

ஆரணமாங்கால்சஞட்டியறிவாங்கயிறதுதூக்கிப்
பூரணமாம்பலகைசேர்த்தப்புத்தியதிற்பொருந்தவைத்து
வாரணியுமுலையார்தங்கள்வலையிற்போகாவண்ணங்காத்துச்
சீரணியுஞ்சித்தம்வேறுதிரியாவண்ணமாடிரூசல். (௧)

தானுகாவடிவுதன்னைதானுக்கம்வடிவை
யூனுரோடொன்றப்பண்ணியொன்றிலொன்றைமறைக்கும
தானேதானறியவேண்டிச்சத்திரேனுடசத்துமின்றி
வானுதிபூதங்களுமாமாயைபோச்சென்ருடிரூசல்.

வேதமுதனீர்தரித்துவிதித்தகன்மம்பலவுஞ்செய்து
சாதிபேதம்பலவுண்டாகச்சமைந்தான்ஞானம்பிறக்குமோ
வேதவதிகாரந்தன்னுல்விதித்தகன்மந்தனக்குமுன்னே
சாதனநாலுமுண்டேயாகிற்சமைந்ததேயென்ருடிரூசல்.

கனாபுரளப்பெருகுமாறற்றிற்கங்குறங்கிநில்லாதாற்போ
லுலாமுதலாம்யோகத்தாலேயொருமைதன்னைக்குலைக்கவ
விருமையென்னுமாய்கையேறியேகமண்டபத்திருந்து
பிரமமென்னும்பார்வையாலேபிறவாவண்ணமாடிரூசல்.

புத்தேந்திரியங்கண்முதற்பொறிகடன்மேற்புணரும்போது
நித்திரையில்வந்தபோதுமின்றபோதுமில்லாப்போது
மித்தனையுங்காண்கையாலேயெங்குமுள்ளானேகமாயே
யத்தனையுமறிகையாலேயறிவானென்ருடிரூசல்.

பதினெட்டுவடிவமதாகிப்பரலோகமேறலாமென்று [ண்
கெதிகெட்ட மனிதர்சொல்வேள்விக் கேடுபாட்டைக் கேட்
விதிதட்டாவேதாந்தத்தின்விளங்குஞானமெய்ச்சுடரா
மதிதட்டாதேயறிந்தபோதேமாயைபோய்ச்சென்ருடிரூசல்.

மேதினியேபாதமாகவிரியும்வானேயுதரமாகப்
போதுமதிமுகமதாகப்புரந்தாளூர்முடியேயாக
வேதமாகிவாயதாகவிரியும்வாயுவுயிரதாக
வாதியிலேயவதரித்தவனேநானென்ருடிரூசல்.

புரியினிடையரவுதோன்றிப்போனபோதும்போகாப்போ
புரியதுவேயாறுற்போலப்போதமாகும்புரணந்தானென்ன

ஏழுகாண் பெண்ணே யெல்லா நிலைகளு
மிந்திர ஞாலமென் றூடாய்கழ
லெமக்கழி வில்லையென் றூடாய்கழல். ௭)

எட்டுக்காண் பெண்ணே சுற்றக் குழாமென் றுங்
கட்டதை விட்டோமென் றூடாய்கழல்
காணாது கண்டோமென் றூடாய்கழல். ௮)

ஒன்பதாம் பெண்ணே யுள்ளே தெளிந்தபின்
மின்போலும் போதமென் றூடாய்கழல்
வேத முடிவதென் றூடாய்கழல். ௯)

பத்துக்காண் பெண்ணே பரமே பரமாகப்
பற்றற் றிருந்தோமென் றூடாய்கழல்
பத்தி முடிவதென் றூடாய்கழல் ௰)

ஆடுங் கழலா மடியி லொளித்தக்காற்
றேடுவ தில்லையென் றூடாய்கழ
றிருவடி யல்லதென் றூடாய்கழல். ௧௧)

கழல் முற்றிற்று.

பாடுதுறை - முற்றியது.

———(*)———



# பாடுதுறை அட்டவணை.

ஆகப்பாட்டு. ௧௧௨௩.

பாடுதுறை அட்டவணை முற்றிற்று.

உ

கணபதி துணை.

சுத்தாத்வைத வேதாந்தாசாரியராகிய

# தத்வராயசுவாமிகள்

அருளிச்செய்த

# பாடுதுறை.

---

இஃது

காஞ்சீபுரம்.

அருணாசலதேசிகர் முன்னிலையிற்

பரிசோதித்துக்

கொன்றைமாநகரம்.

அருணாசலமுதலியாரவர்களால்

அச்சிற்பதிப்பித்த பிரதிக்கிணங்கச்

சீர்காழி.

நமச்சிவாயபிர்மம்

அவர்களாற்பரிசோதித்து

வர்த்தமானதரங்கிணி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

சென்னபட்டணம்.

பவ௵ ஆவணி௴.

இதன்விலை ரூபா ௧௨.